317

# இலக்கியப் பொருட் பகுப்பாய்வு

முனைவர் ச. சிவகாமி



# இலக்கியப் பொருட் பகுப்பாய்வு

## பக்தியும் அறமும்

245

முனைவர் ச. சிவகாமி

முதுநிலை ஆய்வாளர்



உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES

சி. ஐ. டி. வளாகம், தரமணி, சென்னை-600 113

## BIBLIOGRAPHICAL DATA

| | | |
|---|---|---|
| Title of the Book | — | ILAKKIYAP PORUT PAKUPPĀYVU<br>Paktiyum Aṟamum |
| Author | — | Dr. S. SIVAKAMI<br>SENIOR RESEARCH FELLOW<br>International Institute of<br>Tamil Studies, Madras-113 |
| Publisher & Copyright | — | INTERNATIONAL INSTITUTE<br>OF TAMIL STUDIES<br>MADRAS-600 113 |
| Publication Number | — | 157 |
| Language | — | TAMIL |
| Edition | — | First |
| Date of Publication | — | June 1991 |
| Paper used | — | MANDYA D. DEMY 15 4 Kg |
| Size of the Book | — | 21×14 Cms |
| Printing types used | — | 10, 12 Points |
| Number of Pages | — | x+176 |
| Price | — | Rs. 27/- |
| Printers | — | R. K. M. Enterprises<br>40-B, Pattunoolkaran Thottam<br>Mylapore, Madras-600 004 |
| Binding | — | Card Board |
| Artist | — | Sathiya |
| Subject | — | Content Analysis in Literature |

# வெளியீட்டுரை

**டாக்டர் அன்னிதாமசு,**
இணைப் பேராசிரியர்-
இயக்குநர் (பொறுப்பு)
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
தரமணி, சென்னை-600 113

தமிழாய்வு பல்துறைச் சார்புடன் பல பரிமாணங்களில் இன்று வளர்ந்து வருகிறது. ஆய்வைக் கடமையாகவும் கருத்தாகவும் செய்வதுடன் சுவையாகவும் சீராகவும் செய்வது, தருபவர்-பெறுபவர் ஆகிய இருவருக்கும் நன்மை பயக்கின்றது. ஆய்வுப் பொருளுக்குத் தரமும் நிலையும் வழங்குகிறது.

ஆய்வையே மைய நோக்கமாகக் கொண்டு இருபது ஆண்டு களாகச் செயற்பட்டு வரும் இவ் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் புதிய சில அணுகு முறைகளையும், ஆய்வுக் களங்களையும் ஆய்வு உத்திகளையும் கையாண்டு மேற்செல்வதை ஏற்கெனவே வந்த நிறுவன நூல்கள், தமிழியல் இதழ்கள், கருத்தரங்க எழுத் துரைகள், ஆய்வேடுகள் ஆகியன வாயிலாக உணரலாம். அதன் தொடர்ச்சியாக, இங்கு 'இலக்கியப்பொருட் பகுப்பாய்வு' எனும் ஆய்வு நூலை டாக்டர் ச. சிவகாமி வழங்குகிறார்.

அறம், பக்தி ஆகிய பொருண்மைகள், 19—ஆம் நூ. இலக் கியங்களை அடிப்படையாக்கித் திரட்டப்பெற்றுப் பகுப்பாய்வு செய்யப் பெற்றுள்ளன.

எளிய, தெளிவான நடை, ஆழ்ந்த சிந்தனை, நயமான விளக்கம், திறமையான வெளியீடு, செவ்வையான ஆய்வு என்பன அமைந்து நூலுக்கும் ஆசிரியருக்கும் அணிசேர்க்கின்றன.

இந் நூலை வெளியிடும் முயற்சி, நிறுவன மேனாள் இயக்குநர் டாக்டர் சிலம்பொலி சு. செல்லப்பன் அவர்களால் தொடங்கி மேற்கொள்ளப் பெற்று தற்போது நிறைவேறு கின்றது.

நூலாசிரியர்க்கு என் வாழ்த்து.

சென்னை — அன்புடன்
25-6-91 — அன்னி தாமசு

# வாயில்

பொருள் அடிப்படையில் இலக்கியங்களை அணுகுதல் இலக்கிய வளர்ச்சியைக் காணற்கு உதவும் முறைகளுள் ஒன்று. தொல்காப்பியம், அக, புறப் பொருட்களுக்கு அவற்றின் பொருட் கூறுகளைப் பகுத்து நோக்கித் திணை, துறைகள் வகுத்துள்ளமை போன்று இலக்கிய உலகில் மிகுந்திருக்கும் பிறவற்றின் பொருட் கூறுகளையும் காணல் பொருளாய்விற்கு இன்றியமையாதது; அவற்றைக் காணல் வேண்டும் என்ற எண்ணத்தால் இவ்வாய்வு தோன்றியுள்ளது.

அக, புறப்பொருட்களின் பின் முழுவளர்ச்சியடைந்த நிலையில் அறம், பக்தி ஆகியன அமைகின்றன. காலந்தோறும் இவற்றிற்கு மிகுந்த பெருமையளித்துள்ளனர். இவற்றை உட்கொண்டு இவ்விரு பொருட்களையும் பகுத்தாய்தல் பயனுடைத்து என்ற கருத்தில் இவை ஆய்வுக்களமாகியுள்ளன.

இப்பொருட்கள் தோன்றி வளர்ந்து முதிர்ந்துள்ள காலத்தினை அடிப்படையாகக் கொண்டு பகுப்பாய்வு செய்தலே முறைமை என்ற நோக்கில் பத்தொன்பதாம் நூற்றாண்டு இலக்கியங்கள் ஆய்வுக்கு அடிப்படையாயின.

இதுவரையில் இலக்கியப் பொருளுக்குத் தனித்த சிறப்பளித்து பொருட்கூறுகளை வரையறை செய்யும் போக்கில் ஆய்வு நூல்கள் எழவில்லை.

ஆ. வேலுப்பிள்ளையின் 'தமிழ் இலக்கியத்தில் காலமும் கருத்தும்' பொருள் நோக்கில் அமைந்த இலக்கிய வரலாறு ஆகும். பொதுநிலையில் ஒவ்வொரு காலத்திலும் பொருள்கள் அமைந்த நிலையினைக் காலச்சூழலுக்குச் சிறப்பளித்துக் காட்டுகிறார். ஆயின் தமிழிலக்கியத்துள் அமைந்துள்ள பொருள்களையும் அவற்றின் கூறுகளையும் இதனுள் விரிவாகக் காட்டவில்லை. பொருள் நிலையில் இலக்கியங்களை அணுகுதலுக்கு ஒரு வழிகாட்டி என்ற நிலையில் இந்நூல் சிறப்புப் பெறுகிறது.

வ. சுப. மாணிக்கம் தந்த ‘தமிழ்க்காதல்’ அகப்பாடல்களை யும், க. கைலாசபதி படைத்த ‘தமிழ் வீரயுகப் பாடல்கள்’ (Tamil Heroic Poetry) புறப்பாடல்களையும், க. ப. அறவாணன் அளித்த ‘அற்றை நாள் காதலும் வீரமும்’ அக, புறப்பாடல் களையும் ஆய்வு செய்யும் நூல்களாயினும் அவற்றிற்குத் தொல்காப்பியம் முதலான இலக்கண நூல்கள் துணை நிற்கின்றன.

அகம், புறம் போன்று எல்லாப் பொருட்களும் அவ்வவற்றிற் குச் சில பொருட்கூறுகளைக் கொண்டிருக்கின்றன. அவற்றைச் சிலர் தொட்டுக் காட்டினும் (சைவ சமய வளர்ச்சி—மா. இராச மாணிக்கனார்) முழுமையாக முதன்மைப்படுத்தி அவற்றின் பொருட் கூறுகளை அறுதியிடுவதில் முனையவில்லை. இதற்கு ஒரு தொடக்க நிலையாக இவ்வாய்வு அமைகிறது.

பக்தி, அறம் எனும் பொருட்களை ஆராய்ந்த பொழுது இரண்டினையும் ஒரே தன்மையில் அவற்றின் பொருட் கூறுகளை நோக்க இயலவில்லை. இரண்டின் வெளியீட்டு நிலைகளும் வேறுபட்டமை இதற்கு முதன்மைக் காரணமாகும்.

பொருட்பகுப்பிற்குப் பக்திப்பொருள் எளிதாக அமைகிறது. அறப்பொருள், அறம் யாருக்கு உணர்த்தப்படுகிறது, எந்த நோக்கத்திற்காக உணர்த்தப்படுகிறது என்பனவற்றையும் கருத்தில் கொண்டு பகுக்க வேண்டியுள்ளது.

தொல்காப்பியம் முதல் இன்றுவரை, அகம், புறம், ஆகிய பொருட்களை ஆராய்ந்தவர்களும், இரண்டிற்கும் ஒரே அமைப் பினைப் பின்பற்ற முடியாமை இங்குக் குறிப்பிடத்தக்கது. இரண் டிற்கும் ஏழு, ஏழு திணைகள் என்று பிரித்துள்ள போதிலும் அகப் பொருட்கூறு கூற்றுநிலையிலும், புறப்பொருட்கூறு செயல்நிலை யிலும் பகுக்கப்பட்டிருக்கிறது. எல்லாப் பொருட்களும் அவ்வவற்றிற்குரிய பொதுத் தன்மையாகிய, பிறவற்றினின்றும் வேறுபட்டு நிற்கும் சிறப்புக் கூறினைக் கொண்டு பகுத்தற்கே இடமளிக்கின்றன என்பதை இதனால் உணர முடிகிறது.

### பொருள், பொருட்கூறு

பொருள், பொருட்கூறு என இரு நிலைகளில் இலக்கியப் பொருள் இங்குச் சுட்டப்பட்டுள்ளது. பொருள் என்பது அகம், புறம், அறம், பக்தி எனப் பொதுவாக விரிந்த கருத்தில் கையாளப் பட்டுள்ளது. பொருட்கூறு என்பது பொருளின் உட்பகுப்புகளைச் சுட்ட அமைந்துள்ளது.

பொருளும் வெளியீடும்

இலக்கியத்துள் இவை இரண்டும் இணைந்து நிற்கும் இயல்புடையன.* வெளியீடு என்பது பொருளை உணர்த்தப் புலவர் பயன்கொள்ளும் நெறியாகும். அது, வெண்பா, ஆசிரியம் என யாப்பு நிலையிலும்; உவமை, உள்ளுறை போன்று அணி நிலையிலும்; புராணம், பழமொழி, வழக்கு, கதை போன்று ஏதேனும் ஒரு பொருட்கூறாகவும் அமைதல் உண்டு. இவ்வாறு பொருள் நிலையில் அமையும் வெளியீட்டு முறையும் பொருள் ஆய்விற்குத் தேவையாகிறது. இவை, துணைப் பொருள் என, இலக்கியப் பொருளை விளக்கத் துணையாய் அமைகின்றன என்ற நிலையில் இவ்வாய்வில் தேவைப்பட்ட இடங்களில் எடுத்துக் காட்டப்பட்டுள்ளன.

மொய்தா ரணிகுழல் வள்ளியை வேட்டவன் முத்தமிழால்
வைதாரையும் அங்கு வாழவைப்போன் வெய்ய வாரணம் போற்
கைதானிருபது டையான் தலைபத்தும் கத்தரிக்க
எய்தான் மருகன் உமையாள் பயந்த இலஞ்சியமே.

(கந்தரலங்காரம் 22)

எனும் பாடல் கொண்டு இவ்வாய்வு நெறியை விளக்கலாம்.

இப்பாடல் இறைவனைப் பாடுவது என்ற நிலையில் பக்திப் பொருளாகிறது. இறைவனைப் போற்றுதல் இங்கு அமைதலில் அது பக்திப் பொருளின் பாற்படும் பொருட் கூறாகிறது. இப் பொருட்கூறினை, வள்ளியை வேட்டவன், வைதாரையும் வாழ வைப்போன், உமையாள் பயந்த இலஞ்சியம் போன்றவற்றுடன் இராவணனை வென்ற இராமனாகிய திருமாலின் மருகன் எனும் புராணமும் இணைந்து உணர்த்துகின்றது.

புராணக் கதை இறைவனின் புகழினை வெளியிடற்கு உதவும் உத்தியாக இங்குக் கையாளப்பட்டுள்ளது. புராணம் எனும்

---

* The content of a poem apposed to form, consists of thought, feeling, attitude and intention. It is conveyed by the words and their arrangement. The rhythm produced welds the poem together and gives its significance beyond any prose rendering. It is only by a close scrutiny of all the qualities of the words (meaning, sound, associations) and also of the ordering of the rhythm, that the poem can be understood, and its value estimated.

—A.F. Scott; Current Literary Terms–A Concise Dictionary 1971; p. 63.

பொருள் இவ்வெளியீட்டினுள் அமைந்து, இறைவனைப் போற்றுத லாகியப் பொருட்கூறினை உணர்த்துதலில் துணை நிற்பதால் துணைப் பொருளாகிறது.

பக்தி,அறப் பொருட்களின் பொருட்கூறுகளைப் பகுத்துரைத் தல் முதன்மை நோக்கமாயினும், தெளிவு பற்றியும், 'பொருள்' பற்றிய ஆய்வு அரிதாயிருத்தலாலும், எடுத்துக் கொண்ட பொருளை விளக்கி மேற் செல்லல் ஆய்வு நெறியாதலாலும் முதன் மூன்று கட்டுரைகள் தேவையாகின்றன.

'பொருள்' எனும் முதற்கட்டுரை, 'பொருள்' என்பதற்கு விளக்கம் அளிப்பதாய் அமைகிறது.

அடுத்த கட்டுரையில் இலக்கணங்கள் பொருளை எவ்வாறு பகுத்துரைக்கின்றன; அப்பகுப்புகளுக்கு அவை தரும் விளக்கங்கள் யாவை என்பன எடுத்துக்காட்டப்படுகின்றன.

சங்கம் முதல் இந்நூற்றாண்டு வரையில் காணப்படும் பொருட்கள் யாவை, அவை எவ்வாறு இலக்கியத்துள் ஆளுமை பெற்றுள்ளன, காலந்தோறும் அவை பெற்றுவரும் வளர்ச்சி, மாற்றம் முதலானவற்றை விளக்கிக் காட்டும் முயற்சியாக 'இலக்கியத்தில் பொருள்' கட்டுரையமைகிறது.

அக, புறப் பொருட்களுக்குப்பின் தோன்றிய பொருட்களுள் பக்தி மிகுதியாக அமைதலின் முதற்கண் பக்தியும் தொடர்ந்து அறமும் பற்றிய கட்டுரைகள் அமைகின்றன. இவற்றின் தோற்றம், வளர்ச்சி, மாற்றம் முதலான கூறுகளை மூன்றாம் கட்டுரை இயம்பி நிற்றலின் இக்கட்டுரையில் அவை விடப்பட்டுள்ளன. ஒவ்வொன்றின் பொருட்கூறுகளும் வரையறுக்கப்பட்டு விளக்க மாகப் பேசுதலே இவற்றில் அமைகின்றது. இப்பொருட்கள் தாம் சார்ந்த எவ்வகையின் பாற்படினும், எக்காலத்திற்கும் பொருந்தும் என்பதை உறுதிசெய்ய, முன்பின் இலக்கியங்களினின்றும் சான்று கள் தரப்பட்டுள்ளன.

புதிய நோக்கில் புதுமுயற்சியாக அமைதலின் குறைகளும், முரண் எண்ணங்களும் தோன்ற வாய்ப்புண்டு. மிகப் பரந்த தமிழிலக்கியப் பரப்பினை முழுமையாகக் கொண்டு வரையப் பட்டுள்ள மூன்றாமியல் ஒரு பருந்துப் பார்வையாக அமைந் துள்ளமையால் பல அரிய செய்திகள் விடுபடலுக்கு மிகுந்த இடனுண்டு. இவை ஆய்வாளரால் தவிர்க்க, மறுக்க இயலாதது. குறைகளைக்களையவும் ஆய்வு சிறப்புறுதற்கு உதவும் பிற கருத்து களையும் ஆன்றோர் வழங்கின் அவர்கட்குப் பெரிதும் நன்றி யுடையேன்.

இவ்வாய்வு 1981 இல் சென்னைப் பல்கலைக் கழக முனைவர் பட்டத்திற்காக வழங்கப்பட்ட ஆய்வேட்டின் ஒரு பகுதியாகும். நிறுவனத்தில் ஆய்வு செய்ய விழைந்தபோது மகிழ்வுடன் அனுமதி யளித்து, ஆய்வு மேற்பார்வையாளராக நின்று, ஆய்வு சிறக்கத் தேவையான உதவிகளை நல்கி அன்புடன் வழிநடத்திய எனது வணக்கத்திற்குரிய பேராசிரியப் பெருந்தகை நிறுவனத்தின் முன்னாள் இயக்குநர் முனைவர் ச. வே. சுப்பிரமணியனார் அவர்கள், என்றும் நன்றியுடன் நிறுத்தற் பாலர்.

ஆய்விற்கு வேண்டிய அறிவுரைகளைத் தந்த ஆய்வு முனைவர் குழுப் பேராசிரியர்கள் முனைவர் தா. வே. வீராசாமி, முனைவர் இரா. கு. நாகு ஆகியோர்,

ஆய்வில் தோன்றிய இடர்ப்பாடுகளைக் களைந்தும், ஐயங்களை நீக்கியும் மற்றும் பல நிலைகளிலும் தம் அன்பால் உதவிய முனைவர் அன்னி தாமசு, பேராசிரியர் ஆ. சிவலிங்கனார், நூலகர் திருமதி அ. யோகம் முதலியோருடன்,

இன்று, இவ்வாய்வு நூலாக்கம் பெற ஊக்கமளித்த, நிறுவனத்தின் முன்னாள் இயக்குநர் முனைவர் சிலம்பொலி சு. செல்லப்பன் அவர்களும், வெளியீட்டுரை வழங்கிச் சிறப்பித்துள்ள இயக்குநர் (பொறுப்பு) டாக்டர் அன்னிதாமசு அவர்களும் என் நெஞ்சார்ந்த நன்றிக்குரியோராவர்.

அச்சுப்படிகளைத் திருத்தி உதவிய நிறுவன ஆய்வாளர் செல்வி புனிதப் பொற்கொடி, திரு. அ.லோ. பழனிசாமி ஆகியோருக்கும், நன்முறையில் அச்சிட்டுத் தந்துள்ள R. K. M. எண்டர்பிரைசஸ் நிறுவனத்தாருக்கும் என் நன்றியுரித்து.

ஆய்வேட்டை வெளியிடுவதற்கு அனுமதியளித்த சென்னைப் பல்கலைக் கழகத்திற்கும் என் நன்றி நவிலற்பாலது.

அன்புடன்

ச. சிவகாமி

# உள்ளுறை

# பொருள்

இலக்கிய உருவாக்கத்திற்கு அடித்தளமாய் அமைவது பொருள். இதனை,

அறமுதனான் கென்றும் அகமுதனான் கென்றும்
திறனமைந்த செம்மைப் பொருண்மேல்—குறைவின்றிச்
செய்யப் படுதலால் செய்யுள்; செயிர்தீரப்
பையத் தாம் பாவுதலாற் பா.

என, யாப்பருங்கல விருத்தி மேற்கோள் நூற்பா மொழியும்.* பொருளின் முதன்மையையும் இது உணர்த்தும். படைப்பாற்றல் கொண்டாருக்குப் பொருள் தூண்டுகோலாக அமைதலும் உண்டு. கண்ணகி கதை கேட்ட இளங்கோ அதைக் காப்பியமாக்கியதைச் சிலம்பின் பதிகம் இயம்பும்.

### பொருள்—சொல் விளக்கம்

பொருள் எனும் சொல்லிற்கு, ''வஸ்து, சொற்பொருள், விஷயம், உண்மைக் கருத்து, காரியம், தத்துவம், மெய்ம்மை, நன்கு மதிக்கப் படுவது, கல்வி, அறிவு, கொள்கை, பயன், மோட்சம், கடவுள், திரவியம், பலபண்டம், பொன், புத்திரன், தந்திரம், சுணங்கு, உவமேயம், உறுதி, அருத்தா பத்தி, அகமும் புறமுமாகிய திணைப் பொருள், அர்த்த சாஸ்திரம், தலைமை, யாதும் ஒன்று, உடைமை, பொருள் நூல், தன்மை, குணம்'' ஆகிய பொருள்களை அகராதிகள் தருகின்றன.**

---

* யாப்பருங்கலம் (பழைய விருத்தியுரையுடன்); கழக வெளியீடு; 1976; ப. 220.

** Tamil Lexicon-Vol. V. university of Madras, PP. 2935-2936. செந்தமிழ் அகராதி; ந. சி. கந்தையாபிள்ளை(தொகு); இ. ப. 1957, ப. 562.

இலக்கியம், இலக்கணம், தத்துவம், சமயம் முதலான பல துறைகளிலும் பயன்பாடுடைய சொல்லாக இது வழங்குவதனை இவற்றினின்றும் அறியலாம்.

சொற்பொருள், உண்மைக் கருத்து, அகமும் புறமுமாகிய திணைப் பொருள், உடைமை என்பன இலக்கியத்தோடு தொடர் புடையன.

இலக்கியத்தில் அமைந்துள்ள சொல்லுக்குப் பொருள் (Word meaning); இலக்கியத்தில் பொதிந்துள்ள முதன்மைக் கருத்து (Theme and Thought) இலக்கியப் பொருள் (General Content); குறிப்பிட்ட இலக்கிய வகை தனக்கு உரியதாகக் கொண்டுள்ள பொருள் (Special content of a genre) என இவற்றை விளக்கலாம்.

இங்குள்ள பன்னிரு பொருட்களும் ஆய்வுடன் தொடர் புடையன. இலக்கியத்திற்கு உரிய பொருள் என்பதில், 'அகமும் புறமுமாகிய திணைப் பொருள்' என்பதும் உள்ளடங்குகிறது.

பொருளும் இலக்கியமும்

இலக்கியத்தில் பொருள் மூன்று நிலைகளை உடையதாய்க் காணப்படுகிறது.

1. பாடு பொருள்
2. இலக்கிய வகையின் பொருள்
3. உள்ளீடு

என்பன அவை.

பாடு பொருள்

இது இரு வகையியல்புகளைக் கொண்டுள்ளது. ஒன்று இலக்கியம் பாட்டுடைத் தலைவராகக் கொள்வது. மற்றொன்று, இலக்கியத் தோற்றத்திற்கு அடிப்படையாக அமையும் கருத்து.

முதனிலையில் இறைவன், புரவலர், சான்றோர் அல்லது ஏதேனும் அஃறிணைப் பொருள் எவர் வேண்டுமாயினும் அமைய லாம். புலவர் தம் உள்ளத்துள் தோன்றும் உணர்வுகளை யாரை அல்லது எதனை மையமாகக் கொண்டு உணர்த்து கின்றாரோ அவர், 'பாட்டுடைத் தலைவர்' எனும் பொருளில் பாடுபொருளாகிறது. சான்றாகப் புறநானூற்றுப் பாடல்களின் ஈற்றில் பாடப்பட்டோர் குறிக்கப்பட்டிருப்பதனைச் சுட்டலாம்.

இரண்டாம் நிலை ஏதேனும் ஒரு கருத்தினை மையமாகக் கொள்வதாகும். இலக்கியவாசிரியன் படைத்துக் கொள்ளும் நோக்கம் என்றும் இதனைக் கூறலாம். எடுத்துக்காட்டாக இளங்கோ,

"அரைசியல் பிழைத்தோர்க் கறங்கூற்றாவதூஉம்
உரைசால் பத்தினிக் குயர்ந்தோ ரேத்தலும்
ஊழ்வினை யுருத்து வந்தூட்டு மென்பதூஉம்
சூழ்வினைச் சிலம்பு காரணமாகச்
சிலப்பதிகார மென்னும் பெயரால்
நாட்டுதும் யாமோர் பாட்டுடைச் செய்யுளென"

[சிலம்பு: பதிகம் 55—60]

என்று மூன்று கருத்துகளை அடிப்படையாகக் கொண்டு காப்பியம் இயற்றியுள்ளமையைச் சுட்டலாம்.

## இலக்கிய வகையின் பொருள்

பாட்டியல்கள் தாம் காட்டியுள்ள இலக்கிய வகைகள் சில வற்றிற்குப் பொருள் வரையறை செய்துள்ளன. காட்டாக உலா, தசாங்கம் போன்றவற்றைத் தரலாம். இவை குறிப்பிட்ட ஓர் இலக்கியத்தின் பொருளாக அமையுமே அன்றிப் பொது நிலையில் இலக்கியப் பொருளாகக் கருதும் அகம், புறம், பக்தி, அறம் போன்று அமைவதில்லை. மற்றும் ஒன்றன் பொருள் மற்றொன் றிலும் அமைவதுண்டு. எனவே 'இலக்கியத்தில் பொருள்' எனும் பரந்த பொருட் தன்மையில் இது வேறுபடுகிறது.

## உள்ளீடு

இலக்கியத்தின் கருத்தினையோ (Theme), நோக்கத்தி னையோ (aim) உணர்த்துவதற்காக, நூல் முழுமையும் அதனோடு தொடர்புடைய நிகழ்ச்சிகளாக அல்லது எண்ணங்களாக அல்லது செய்திகளாகப் புலவர் படைத்து மொழிவனவற்றை உள்ளீடு எனக் கருதலாம்.

இதுவே இலக்கியப் பொருள் என்று கருதும் நிலையில் அமை கிறது. சான்றாக, பாரதியின், 'யாமறிந்த மொழிகளிலே தமிழ் மொழிபோல் இனிதாவதெங்கும் காணோம்' எனும் பாடலில் பாடுபொருளாகத் தமிழ் அமைகிறது. அப்பாடலின் கருத்து மொழியின் சிறப்பினை உணர்த்த வேண்டும், உணரவேண்டும் என்பதாம். அப்பாடல்:

யாமறிந்த மொழிகளிலே தமிழ்மொழிபோல்
இனிதாவது எங்கும் காணோம்
பாமரராய், விலங்குகளாய், உலகனைத்தும்
இகழ்ச்சி சொலப் பான்மை கெட்டு
நாமமது தமிழரெனக் கொண்டிங்கு
வாழ்ந்திடுதல் நன்றோ? சொல்லீர்
தேமதுரத் தமிழோசை உலகமெலாம்
பரவும் வகை செய்தல் வேண்டும்

(தமிழ்: 1)

அக்கருத்தினை, அதன் பெருமை, இன்றைய நிலை அதற்குச் செய்ய வேண்டியது எனும் மூன்று நிலைகளில் உணர்த்துகிறார். இதுவே உள்ளீடு எனப்படுகிறது. இதற்கு அடிப்படையாய் அமைவது மொழிப் பற்று. ஆகவே இது 'மொழி' (மொழிப்பற்று) எனப்பட்டு இலக்கியப் பொருளாகிறது.

பொருள்—பாடுபொருள்

பொருளும் பாடுபொருளும் ஒன்றிற்கொன்று தொடர்புடையனவாகத் தோன்றினும் வேறுபாடுடையன. ஆயின் பொருளாய்வின்போது பாடுபொருள் பற்றிய எண்ணமும் துணை நிற்கிறது.

ஒரே பாடுபொருள், பல பொருட்களிலும் வருதற்கு வாய்ப்புண்டு. சான்றாகப் பாட்டுடைத் தலைவர் என்ற நிலையில் எடுத்துக் கொண்டால், புறநானூற்றுள் 128, 130, 133, 241 எனும் பாடல்கள் ஒரே பாட்டுடைத் தலைவனை, ஆய் அண்டிரனைக் கொண்டமைகின்றன. முதற் பாடல் அவனது வீரத்தையும், இரண்டாம் பாடல் அவனது ஈரத்தையும் பொருளாகக் கொண்டு போற்றுகின்றன. அடுத்த பாடல் விறலியை அவனிடம் ஆற்றுப்படுத்துவதாக அமைகிறது. இறுதிப் பாடல் அவன் இறப்பின்போது கையற்றுப் பாடிய கையறு நிலையாகும். இவற்றால் பாட்டுடைத் தலைவன் ஒருவனாயினும் பொருள் வேறாக அமைதல் தெளிவு.

பாடற் கருத்து என்று கொள்ளும்பொழுதும் ஒரே கருத்தினை வேறு வேறு பொருள்களில் வடிக்க இயலும். சான்றாக ஒருவர் ஒன்றில் பெற்ற வெற்றியைப் பாராட்டுதல் நோக்கம் எனில் அதனை இயல்பு நிலையில் நின்று கூறின் மெய்க்கீர்த்தியாகவும்,

புனைந்துரையுடன் இணைத்து விரிவாகப் பேசுங்காலை வரலாற்றுப் புனைவியலாகவும் மாறுகிறது. சடையவர்மர் சுந்தர பாண்டியருடைய போர் முக வெற்றிகளைப் பகரும் 'பூமலர் வளர் திகழ் திருமகள் புகழாகம் புணர்ந்திருப்ப' என்ற தொடக்கத்துடன் அமையும் மெய்க்கீர்த்தியும், அதனை அடிப்படையாகக் கொண்ட, கோவி. மணிசேகரனின் 'பொன் வேய்ந்த பெருமாள்' எனும் வரலாற்றுப் புனைவாக அமையும் புதினமும் இக்கூற்றினைத் தெளிவுறுத்தும்.

இவற்றால் பொருள் பற்றிய ஆய்வில் பாடுபொருள் நெருங்கிய தொடர்புடையதாக அமையக் காணலாம்.

பாடுபொருளுக்கும் இலக்கியப் பொருளுக்கும் உள்ள இத் தொடர்பால், இலக்கியப் பொருளைப் பாடு பொருளாகக் கருதும் போக்குக் காணப்படுகிறது. *

பொருள்—இலக்கிய வகையின் பொருள்

குறிப்பிட்ட இலக்கிய வகையின் பொருள் அதனுடன் மட்டும் நிற்பதில்லை. பிற இலக்கிய வகைகளிலும் அமைவதாக இருக்கிறது. தசாங்கம் சிறந்த சான்றாம். பாட்டுடைத் தலைவனின் பத்து அங்கங்களைச் சிறப்பித்தல் என்பது தசாங்கத்தின் பொருளாகும். இதனைப் பிள்ளைத் தமிழ் (திருக்குருகூர் திருவேங்கட நாதன் பிள்ளைத் தமிழ், 23). தூது (அழகர் கிள்ளை விடு தூது 99-140) முதலானவற்றுள்ளும் புலவர்கள் இணைத்துள்ளனர்.

ஒரே பொருளை ஒன்றுக்கு மேற்பட்ட இலக்கிய வகைகள் தமக்குரியதாகக் கொண்டுள்ளமையும் சுட்டற்பாலது. சான்றாக, தசாங்கம், தசாங்கத்தயல், சின்னப் பூ ஆகிய மூன்றும் பொருள் நிலையில் ஒன்றுபட்டு, யாப்பு, எண் முதலியவற்றால் தனித்தனி இலக்கிய வகைகளாக வேறுபட்டு நிற்கின்றன.

அந்தாதி, மாலை, பதிகம் முதலான இலக்கிய வகைகள் பலவற்றிற்குப் பொருள் வரையறையில்லை. எப் பொருளின் மீதும் பாடக் கூடும். எனவே ஒரே இலக்கிய வகை எப்பொருளின் மீதும் அமைகிறது.

இவற்றால் இலக்கிய வகைகளின் அடிப்படையில் பொருளாய்வு செய்தலைவிடப் பொது நிலையில் பொருளை ஆராய்தல் எளிதாகிறது.

---

* ந. வீ. செயராமன்; சிற்றிலக்கியத் திறனாய்வு; மு. ப. ஏப். 1980, ப. 74.

**பொருள்—முதல் ஆட்சி**

பொருள் என்ற சொல்லைத் தொல் காப்பியத்திலேயே பெறுகின்றோம். அதில் இலக்கியத்திற்குரிய பொருள் (பொருள் 411) செல்வம் (பொருள் 36); பாடு பொருள் (பொருள் 470); கருத்து (பொருள் 279); செயற்குரிய பொருள் (பொருள்: 400); இலக்கிய வகையின் பொருள் (பொருள்: 479) எனப் பல பொருட்களில் வழங்கியுள்ளமையைக் காண்கிறோம். இன்றும் இப்பொருட்களில் இச்சொல் வழங்கி வருகின்றது.

இலக்கியப் பொருள் எனும் பொருளில் 'பொருண்மை' எனும் சொல்லையும் தொல்காப்பியம் ஆண்டுள்ளமையை,

'உய்த்துணர்வின்றித் தலைவரு பொருண்மையின்
மெய்ப்பட முடிப்பது மெய்ப்பாடாகும்' (பொருள்: 505)

எனும் சான்றின் வழி காட்டலாம்.

**முடிபு:**

மேற்கண்டனவற்றைத் தொகுத்து நோக்குங்கால்,

1. பொருள் எனும் சொல் பல பொருள்களைத் தருகிறது.
2. இலக்கியப் பொருள் எனும் நிலையில் அது பாடு பொருளுடன் நெருங்கிய தொடர்புடையதாக அமைகிறது.
3. பொருளாய்வு பாடு பொருளையும் கருத்துட் கொண்டே அமைகிறது.
4. காலம் தெளிவாக அறிய முடியாத காலம் முதல் 'இலக்கியப் பொருள்' என்ற நிலையிலும் வழங்கி வருகிறது.
5. உள்ளீடு, பொருண்மை, உள்ளடக்கம் எனும் சொற்களும் இலக்கியப் பொருளை உணர்த்தக் கூடியன.
6. இலக்கியப்பொருள் என்பது, 'ஏதேனும் ஒரு நோக்கத்தின் அடிப்படையில், தாம் விரும்பிய தலைமைமீது அந்நோக்கம் புலப்படுமாறு புலவரால் அமைக்கப்படும் நிகழ்வுகள் அல்லது செய்திகள் அல்லது எண்ணங்கள் அல்லது இவற்றின் இணைவுகள் ஆகும்' எனக் கருதலாம். கவிஞன் இவற்றைக் கவிநயத்துடன் தருகையில் சிறந்த இலக்கியமாக மிளிர்கின்றது.

# இலக்கணத்தில் பொருள்

தமிழின் பெருமையை மிகுவிக்கும் காரணிகளுள் பொருளிலக்கணமும் ஒன்று. பொருளிலக்கணத்திற்குத் தமிழர் அளித்த முதன்மையை இறையனார் களவியலுரை காட்டும்.* மொழியின் செம்மையை, வளமையை, வளர்ச்சியைக் காலந்தோறும் தோன்றும் இலக்கியங்கள் உணர்த்துவது போன்று, அவற்றின் பொருளியல்பைப் பேசும் இலக்கணங்களும் தருகின்றன. அவை பொருளுக்குத் தரும் விளக்கம், அதன் பகுப்பு முறை ஆகியன இங்குக் கருதப்படுகின்றன. அறுவகையிலக்கணம் பொருளுக்குத் தரும் விளக்கம் மரபினின்று மாறுபட்டமைதலின் அதன் சிறப்புக் கூறுகள் இறுதியில் தனித்துத் தரப்படுகின்றன.

### பொருளிலக்கண நூல்கள்

தொல்காப்பியம் முதல் அறுவகையிலக்கணம் வரை இன்று நமக்குக் கிடைப்பனவற்றுள் 14 நூல்கள் பொருளிலக்கணம் நவில்கின்றன- இவை பற்றிய விளக்கங்களை அட்டவணை காட்டும். திருக்கோவையாரின் கிளவித் தொகைகளை அகப் பொருளிலக்கணமாகக் கருதும் பாங்கும் இங்குக் குறிப்பிடத் தக்கது.**

இந்நூல்களுள் தொல்காப்பியம், வீரசோழியம், இலக்கண விளக்கம், தொன்னூல் விளக்கம், உசித சூடாமணி, முத்து வீரியம், சுவாமிநாதம், அறுவகையிலக்கணம் ஆகியன பொருளிலக்

---

* களவியல் என்ற இறையனார் அகப்பொருள் (நக்கீரர் உரையுடன்); கழகம்; மே. 1969; பக். 6-7

** "The Kilavittokai of Tirukkovaiyar which deserve to be considered in the line of Akapporul Grammar is also included."

L. Gloria Sundaramathy; Heritage of the Tamils Language and Grammar; S. V. Subramanian and K. M. Irulappan (ed), 1980, P. 535.

கணத்துடன் பிறவற்றையும் பேசுகின்றன. ஏனைய பொருள் மட்டுமே தருகின்றன.

மறைந்து போன இலக்கணங்களில் அகத்திணை, கூற்றியல் கைக்கிளை சூத்திரம், திணைநூல், பன்னிரு படலம் முதலான வையும் பொருள் பற்றி அமைந்தனவே. இவை தவிர அவிநயத் துள்ளும் பொருள் பற்றிய எண்ணம் இருந்ததை அறிய முடிகிறது.*

பாட்டியல்கள்

இலக்கியத்தின் தன்மையினையும் சிறப்பினையும் நவில்வதில், பாட்டியல் நூல்களும் பெரும்பங்காற்றுகின்றன. இவை இலக்கிய வகைப்பாட்டின் அடிப்படையில் அவ்வவ்வகையில் அடங்கும் பொருளுக்குச் சிறப்பளித்துப் பேசுகின்றன. இப்பாட்டியல் காட்டும் இலக்கிய வகைகளின் அடிப்படையில் அமையாது, பொருள் பற்றிய பொதுவான கண்ணோட்டத்தில் இவ்வாய்வு அமைவதால் அவை பற்றி இங்கு எண்ணப்படவில்லை. பொருள் பற்றி இவையும் சிந்தித்துள்ளன என்பதைச் சுட்டுவதே இவண் குறிக்கப்பட்டுள்ளதன் நோக்கமாகும்,

பொருள் வெளியீட்டைச் சிறப்பிப்பனவாக அணியிலக்கண நூல்கள் அமைதலும் சுட்டற்பாலது.

பொருள்

இலக்கியத்திற்குப் பொருள் காரணமாய் அடிப்படையாய் நிற்றலை, யாப்பருங்கல விருத்தி உரையாசிரியர், 'அக முதலாய பொருள் கவிக்கு ஆவி' என எடுத்துக்காட்ட,** நன்னூலாரி

பல்வகைத் தாதுவின் உயிர்க்கு உடல்போல் பல
சொல்லால் பொருட்கு இடன் ஆக உணர்வினின்
வல்லோர் அணிபெறச் செய்வன செய்யுள். (268)

என நுவல்வர்.

பொருள் என்றால் என்ன என்பதற்குத் தொல்காப்பியம் விளக்கம் தருகிறது. செய்யுளின் உறுப்புகளுள் ஒன்றாகப் பொரு ளைக் குறிக்கும் தொல்காப்பியம் (பொருள். 310) பொருளை,

---

* அவிநயம், க ப. அறவாணன் (பதி); ஏப். 1975.

** யாப்பருங்கலம் பழைய விருத்தியுரையுடன்; ப. 491.

இன்பமும் இடும்பையும் புணர்வும் பிரிவும்
ஒழுக்கமும் என்றிவை இழுக்கு நெறியின்றி
இதுவாகித் திணைக்கு உரிப்பொருள் என்னாது
பொதுவாய் நிற்றல் பொருள்வகை என்ப.

(பொருள். 509)

என்று விளக்குகிறது. இன்பம், துன்பம், புணர்வு, பிரிவு, ஒழுக்கம் என்னும் இவை பிறழாது, இது இத்திணைக்கு உரிய பொருள் எனாது பொதுவாய் நிற்றல் பொருள் என்பது இதன் கருத்து.

இங்கு, 'பொதுவாய் நிற்றல்' என்பது பொருட்கூறுகளை எண்ணாது பொருள் எனப் பொது நிலையில் நிற்பதைக் குறிக்கிறது. அப்பொருள் தரும் உணர்வுகளும் ஒழுக்கங்களும் உலகியல் பிழையாது இருத்தல்வேண்டும் என்பதும் கருத்தாகிறது.

இவற்றால் தொல்காப்பியம் பொருளின் இயல்பு நிலையை உணர்த்துதல் தெளிவு. பொருளியலிலும் இரு நூற்பாக்கள் பொது நிலையில் பொருளின் இயல்புரைப்பனவாகக் காணப்படுகின்றன.

"உயர்ந்தோர் கிளவி வழக்கொடு புணர்தலின்
வழக்கு வழிப்படுதல் செய்யுட்குக் கடனே"

"அறக்கழிவுடையன பொருட் பயன் வரினே
வழக்கென வழங்கலும் பழித்த தென்ப"

(பொருள். 213, 214)

என்பன அவை, உலகியல் வழக்கின்படி செய்யுள் அமைதல் தேவை; அவ்வாறு உலக வழக்கின் பாற்படுங்கால் அப்பொருள் அறத்திற்கு ஊறு செய்வதாயின் அதனை நீக்குதல் வேண்டும் என்பன அவை தரும் எண்ணங்கள். இக்கூற்றுகள் அனைத்தையும் ஒருங்கிணைத்து நோக்குங்கால்,

1. பாடற் பொருளாக எவையும் அமையலாம். அவை அகத்திணை, புறத்திணை எனப் பகுக்கப்படுகின்றன.
2. உலகியல் வழாது, வழக்கின் பாற்படுவதாக அவை அமைய வேண்டும்.
3. அவை, அறத்திற்கு இயைபுடையனவாகவும் இருத்தல் தேவை.

என்பன பொருள் பற்றிய எண்ணங்களாக அமைகின்றன. இலக்கியம் செம்மை சான்றதாக இருத்தல் தேவை; அச்செம்மை எடுத்துக் கொள்ளும் பொருளின்பாற்பட்டதாகவும் அமைதல் தேவை என்பன இங்குத் தொல்காப்பியரின் கருத்தாகப் புதைந்துள்ளன.

தொல்காப்பியம் பொருளுக்கு அளித்த விளக்கத்தினை இலக்கண விளக்கம் அகப்பொருளுக்கு மட்டுமாகச் சிறப்பித்துரைக்கின்றது. (பொ. 210). அகப்பாடல்களைப் பற்றிக் கூறிக் கொண்டு வருகையில் அதன் தொடர்ச்சியாக மேற்சுட்டியுள்ள தொல்காப்பிய நூற்பா (பொருள். 509) அமைதலின் குட்டித் தொல்காப்பியமான இலக்கண விளக்கம், அதனையும் அகப் பொருளுடன் இணைத்தது போலும். ஆயின் அந்நூற்பா அகத்திணை, புறத்திணை இரண்டற்கும் பொதுவாய் நிற்றலை நச்சினார்க்கினியர் உரை வலியுறுத்தும். அகத்திணை உரிப் பொருளாகவும் (இருத்தல், ஊடல்), புறத்திணை உரிப்பொருளாகவும் (நிரை கோடல்) தொல்காப்பியர் கருதுவனவற்றை இலக்கியப் பொருளாக இளம்பூரணர் காட்டுவர்.*

## பொருட் பகுப்பு

இலக்கணங்கள் பொருளை இரு வகைகளில் பகுக்கின்றன. இரண்டினையும் தொல்காப்பியம் முதல் தொடர்ந்து காண முடிகிறது.

1. அகம், புறம் என்ற பகுப்பு
2. அறம், பொருள், இன்பம் எனும் பகுப்பு

தொல்காப்பியர் அகத்திணை, புறத்திணை எனப் பொருளிலக்கணம் கண்டிருப்பதால், அது அவரது பகுப்புமுறையாக அமைகிறது. இரண்டாம் வகையினைக் கருத்துட் கொள்வதை,

''அங்கில மருங்கின் அற முதலாகிய
மும்முதற் பொருட்கும் உரிய வென்ப.''
''இன்பமும் பொருளும் அறனும் என்றாங்கு
அன்பொடு புணர்ந்த ஐந்திணை மருங்கின்...''

(பொருள். 411, 89)

---

* இளம்பூரணர் (உரை), தொல்காப்பியம் - பொருளதிகாரம்; கழகம், 1969; பக். 2-3

முதலான நூற்பாக்கள் உணர்த்துகின்றன. இங்கு அறம் முதலாகிய மும்முதற் பொருள் என முன் நூற்பா சுட்டுவனவற்றை அறம், பொருள், இன்பம் எனப்பின் நூற்பா விரித்துரைக்கின்றது.

இரண்டாம் வகைக் கருத்தினை மாறனகப் பொருளும் (1), இலக்கண விளக்கமும் (பொ. 2) தருகின்றன. இலக்கண விளக்கம் இவ்விரண்டினையும் இணைத்துத் தரல் சுட்டத் தக்கது.

போக்கறு மரபின் பொருள் எனப்படுவது
நோக்கரும் வீடு நுவற்சி செல்லாமையின்
அறம் பொருள் இன்பம் ஆகும் மற்றதுவே.
அகனும் புறனும் என்று ஆயிரு பாற்றாய்
வகைபட வந்த அணிநலம் தழீஇச்
செய்யுள் இடவயின் புல்லிய நெறித்தே (பொ. 2)

இந்நூல் கருத்துப்படி அறம், பொருள், இன்பம், வீடு எனும் நான்கனுள் வீடு துறவறமாகிய காரண வகையால் கூறப்படுவதல்லது இலக்கண வகையாற் கூறுதற்கு இயலாதது. ஆதலின் ஏனைய மூன்றும் பொருள் வகையாகும். இவ்வாறு விரித்துக் கூறப்படும் மூன்று வகைகளும் தொகுத்துரைக்குங்கால் அகம், புறம் என இரு வகைப்படும், என்பதாம்.இதனை இந்நூலாசிரியரின் உரை காட்டுகிறது.

இதன் பின் வரும் (பொ. 3) நூற்பாவினால் இன்பம் அகமாகவும், பொருளும் அறமும் புறமாகவும் கொள்ளப்படும் நிலையினை அறிய முடிகிறது. இரு வகைப் பகுப்பு நிலை ஏன் என்ற வினாவிற்கு விடையளிக்கு முகமாக அவர் இரண்டினையும் இணைத்துப் பார்க்கிறார் எனலாம்.

வீரமாமுனிவர் தம் 'தொன்னூல் விளக்க'வுரையுள் (144) வீட்டினையும் இணைத்துக் காட்டுவார். தொல்காப்பிய உரையாசிரியர் கருத்து இதற்குக் காரணமாகலாம்.*

### பொருட் பகுப்பில் வீரமா முனிவர்

மேற்காட்டிய மரபினைச் சுட்டிக் காட்டுவதுடன் மரபு நிலையினின்றும் முற்றிலுமாக வேறுபட்டமையும் பொருட் பகுப்பு ஒன்றினையும் நல்குகிறார், தொன்னூல் விளக்க ஆசிரியர் வீரமா

* மேற்படி ப. 3

முனிவர். வழக்கு, தேற்றம், தோற்றம் எனப் பொருள் மூவகைப்படும் (145) என்பது அவர் கருத்து. இம்மூவகைப் பொருளையும் ஒழுக்கம், வழக்கு, தண்டம் என உரையுள் உணர்த்துகிறார். 'நீதி தன் முறை வழங்கல் வழக்கின் கருத்தும், தீயவும் நல்லவும் விளக்கல் தோற்றக் கருத்தும் ஆகும்' என அவற்றை விளக்குகிறார் (146).

'அறம் என்பது ஒழுக்கம், வழக்கு, தண்டம் என மூவகைப் படும்' என உரைக்கும் பரிமேலழகரின் உரை* இதற்கு அடிப் படையாய் அமைந்திருக்குமோ என்ற எண்ணம் இங்கு எழுகிறது. இலக்கியங்கள் அறத்தினின்றும் வழுவாது அமைதல் மரபாக வேண்டப் படுதலின் அறம் எனப் பரிமேலழகர் உரைத்ததனை, இலக்கியப் பொருளுக்காக்கி இவர் எண்ணுகிறார் போலும்.

இவரது இக்கருத்துப் பிற்காலத்தவரால் போற்றப் பட்ட தாகத் தெரியவில்லை.

**பகுப்பு வளர்ச்சி**

இலக்கணிகளால் பின்பற்றப்படும் அகம், புறம் எனும் பகுப்பு மேலும் விரிந்து வளர்ந்துள்ளது. இது மூன்று வகையாக அமைகிறது.

1. அகம், புறம்
2. அகம், புறம், அகப்புறம்
3. அகம், புறம், அகப்புறம், புறப்புறம்

என்பன அவை. இம்மூன்று வகைக் கருத்துகளில் இலக்கணி கள் ஏதேனும் ஒன்றைப் பின்பற்றி மற்றிரண்டில் தமக்கு உடன் பாடின்மையை உணர்த்துகின்றனர்.

---

* ''அறம் என்பது ஒழுக்கம், வழக்கு, தண்டம் என மூவகைப் படும். அவற்றுள் ஒழுக்கமாவது அந்தணர் முதலிய வருணத் தார் தத்தமக்கு விதிக்கப்பட்ட பிரமசரியம் முதலிய நிலை களின்ின்று அவ்வற்றிற்கு ஓதிய அறங்களின் வழுவாது ஒழுகுதல். வழக்காவது ஒரு பொருளைத் தனித்தனியே எனதென தென்றிருப்பார், அது காரணமாகத் தம்முள் மாறு பட்டு அப்பொருள் மேற்செல்வது. அது கடன் கோடல் முதல் பதினெட்டுப் பதத்ததாம். தண்டமாவது அவ்வொழுக்க நெறியினும் வழக்கு நெறியினும் வழீஇயினாரை அந்நெறி நிறுத்தற் பொருட்டு ஒப்ப நாடி அதற்குத் தக ஒறுத்தல்.'' —பரிமேலழகர் (உரை), திருக்குறள்; கழகம்; ப. 2.

இக்கருத்து வேறுபாட்டிற்குரிய விளக்கங்களை இலக்கண நூற்பாக்களில் நேரிடையாகக் காண்பதற்கில்லை. அகத்தினின்றும் புறத்தினின்றும் மாறுபடுவது ஒன்றே; அவற்றின் இடையே அமையக் கூடியது ஒன்றே; அதனை அகப்புறம் என்ற குறியீட்டால் குறித்தல் போதுமானது; என்பன முப்பொருள் பகுப்பின் நோக்கம் எனலாம். அகத்தின் புறமானது அகப்புறம்; புறத்தின் மாறாயது புறப்புறம்; இரண்டும் வேறு வேறு ஒன்று ஆகா என்பன மற்றதன் குறிப்பு எனலாம்.

நமக்குக் கிடைக்கும் நூல்களுள் முதலாவதாக இரண்டிற்கு மேற்பட்ட பகுப்பினைச் சுட்டும் நூல் கி. பி. எட்டாம் நூற்றாண்டைச் சார்ந்த புறப்பொருள் வெண்பாமாலை யாகும். இதற்கு முன்னோடியான பன்னிருபடலம் அகப்புறம், புறப்புறம் இரண்டினையும் நவில்கின்றது என்பதனை, யாப்பருங்கல விருத்தி உரையாசிரியர் தரும் மேற்கோள் நூற்பாக்கள் உணர்த்துகின்றன.* எனவே பன்னிரு படலத்திற்கு முற்பட்ட காலத்திலேயே இப்பகுப்புமுறை எழுந்துவிட்டது எனலாம்.

இலக்கிய வரலாற்றில் காதல், வீரம் ஆகியவற்றுடன் அறம், பக்தி முதலான பொருட்களும் சிறப்பிடம் பெற்றமையும், பொருட் பகுப்பினை மேலும் தெளிவுபடுத்தவேண்டும் என்ற நோக்கமும் இதற்கு அடிப்படைகள் ஆகலாம்.

அகம்

''தமிழ்'' எனும் சொல், அகப்பொருளைக் குறிக்க இலக்கியத்துள் பலவிடங்களில் பயின்றுள்ளமை** அதன் பெருமையை உணர்த்தும். இலக்கணங்களிலும் விரிந்த அளவில் அமைந்துள்ள

---

* 'ஆய்ந்த அகப்புறம் ஐயிரண்டு மாயுங்கால்
காந்தள்..........…........
அமர்த்த வீரைந்தும் அகத்தின் புறமே.'
''கைக்கிளை ஏனைப் பெருந்திணை என்றாங்கு
அத்திணை இரண்டும் அகத்திணைப் புறனே''
—இவை பன்னிருபடலம்
''வாகை, பாடாண், பொதுவியல், திணையெனப்
போகிய மூன்றும் புறப்புறப் பொருளே''

இவை ஆமாறு வெண்பாமாலையுள்ளும் பன்னிருபடலத்துள்ளும் காண்க. யாப்பருங்கல விருத்தியுரை; பக். 570, 571

** மயிலை. சீனி. வேங்கடசாமி, '' தமிழ்— அகம்''; Journal of Tamil Studies Vol. 3; Sep. 1979, PP 1—4.

துடன், ஐந்து நூல்கள் முழுமையும் அதனைச் சிறப்பித்துள்ள மையும் அதன் பெருமைக்குச் சான்றாம்.

அகம் என்றால் என்ன என்பதனை இலக்கண விளக்கம் காட்டுகிறது.

''அகமெனப் படுவது வகையொரு மூன்றனுள்
இன்பம் என்னும் இயல்பிற்றாகி
அகத்து நிகழ் ஒழுக்கம் ஆதல் வேண்டும்'' (பொ. 3)

என்பது அதன் கூற்று. பிறர் உணரலாகாவாறு மனதுள் நிகழும் ஒழுக்கத்தை, அறம், பொருள், இன்பம் எனும் மூன்றனுள் இன்பத்தை அகமாக இது கொள்கிறது. இதனைப் பின்பற்றும் சுவாமிநாதம் ''உலக நெறியும் வழாஅது உரைப்பனவாம்'' (71) என்பதனையும் இணைக்கிறது.

''முதல் கரு உரிப்பொருள் என்ற மூன்றே
நுவலும் காலை முறை சிறந்தனவே
பாடலுட் பயின்றவை நாடுங்காலை'' (பொருள். 3)

என அகப்பாடலின் இயல்பு காட்டுகிறது தொல்காப்பியம். முறை சிறந்தனவே என்பதன் வாயிலாக முதல், கரு அன்றி உரிப்பொருள் மட்டுமே அகப்பாடலில் அமைதலும் உண்டு என்பதனை இளம் பூரணர், இந்நூற்பா உரையுள் எடுத்துக்காட்டுவார்.

தொல்காப்பியர் ஐந்திணைகளை உரிப்பொருள்களின் குறியீடாகக் கொள்கிறார் எனலாம். இதனை இளம்பூரணர் உரை தெளிவாக்கும்.*

அகம் எனும் முதன்மை நிலை கைக்கிளை, ஐந்திணை, பெருந் திணை என்று வகுக்கப்பட்டது. கைக்கிளையும் பெருந்திணையும் ஒத்த அன்பின்பாற்பட்டமையின் ஐந்திணையினின்றும் தனித்து

---

* ''நடுவண் ஐந்திணை என்பன யாவை எனின் முல்லை... என்பனவாம். ஏனெனில், இந்நூலகத்து அகமும் புறமும் ஆகிய உரிப்பொருள் கூறுகின்றார். ஆதலின் புணர்தல், பிரிதல், இருத்தல், இரங்கல், ஊடல் என அமையுமே எனின், புறப் பொருட்கண் நிரைகோடலை வெட்சி எனக் குறியிட்டு ஆளுமாகலான் ஈண்டு இப்பொருளையும் முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் என ஆளும் என்க. இதனால் பயன் என்னை என்றால், உரிப்பொருளே திணையென் உணர்த்துவ ராயின் முதற் பொருளும் கருப்பொருளும் தோன்றாதாம்''. —முன் சுட்டியது; ப. 7.

நிற்க, ஐந்திணை மீண்டும் களவு, கற்பு எனும் பகுப்பிற்குள் ளாகியது. இப்பகுப்பு தொல்காப்பியக் கால முதல் மரபாகத் தொடர்ந்து வருகிறது. அகப்பொருளின் துறை விளக்கம் இவற்றின் அடிப்படையில் அமைகிறது.

''ஐந்திணை தழுவிய அகமெனப் படுவது
கந்தருவ நெறிமையால் களவொடு கற்பே''

எனும் யாப்பருங்கல விருத்தி மேற்கோள் நூற்பா இதனைத் தெளிவாக உணர்த்துகிறது.*

வதுவை, வாழ்க்கை, வரைவு ஆகியன அகப்பொருளாகும், என்பது வீரமாமுனிவரின் விளக்கம் (151)

அகப்பொருளில் அடங்கியுள்ள துறைகள் 484 எனக் கணக் கிட்டுரைத்திருப்பது சுவாமிநாதம் (123).

களவு, கற்பு எனும் கைகோள் (ஒழுக்கம்)களின் விளக்கம் அகப்பொருளை மேலும் தெளிவாக உணர உதவுமாதலின் இவண் அளிக்கப்படுகிறது.

களவு

களவெனப்படுவது மன்றல் எட்டனுள் காந்தருவத்தின் பாற்பட்டதாக நவிலப்படுகிறது. (தொல். பொருள். 89) இறைய னார் களவியல் இக்கூற்றினைச் சற்று விரிவாக, ''அதுவே தானே அவளே தமியர் காணக் காமப் புணர்ச்சி இருவயின் ஒத்தல்'' (2) என்று சிறப்பித்துரைக்கும்.

''களவாவது பிணி, மூப்புகளின்றி எஞ்ஞான்றும் ஒருதன்மை யராய், உருவும் திருவும் பருவமும் குலமும், அன்பும் முதலிய வற்றால் ஒப்புமையுடையராய தலைமகனும் தலைமகளும் பிறர் கொடுப்பவும் அடுப்பவும் இன்றி ஊழ்வகையான் தாமே எதிர் பட்டுக் கூடுவது'' என்று இக்காலத்தவர் இலக்கண நோக்கில் விளக்கம் அளிப்பர். **

---

* யாப்பருங்கல விருத்தியுரை; ப. 569.

** ந. சுப்புரெட்டியார்; தொல்காப்பியர் காட்டும் வாழ்க்கை; ப. 21

தொல்காப்பியர் இதனுள் அடங்கும் பொருட்கூறுகளை,

"காமப்புணர்ச்சியும் இடந்தலைப்படலும்
பாங்கொடு தழாஅலும் தோழியிற் புணர்வும் என்று
ஆங்க நால்வகையினும் அடைந்த சார் வொடு
மறையென மொழிதல் மறையோர் ஆறே" (பொருள் 487)

என வகுத்துரைப்பர். இங்கு "அடைந்த சார்வொடு" எனும் கூற்று நம்பியகப் பொருளில் (123) மேலும் பொருட்கூறினை விரித்தற்கு வழி வகுத்துள்ளது.

## கற்பு

கொடைக்குரி மரபினோர், மரபின்படிக் கொடுப்பத்தலைவன் தலைவியைப் பெறுதல் கற்பு எனப் பொது நிலையில் விளக்கம் அளிக்கப்படுகிறது. (தொல். பொருள். 140) "கற்பெனப்படுவது களவின் வழித்தே" என இறையனார் களவியல் (15) களவின் வழிவந்தகற்பினை வலியுறுத்தும்.இவ்விரு கருத்துகளையும் உள்ள டக்கி நம்பி, களவின் வழிவந்த கற்பு, களவின் வழிவாராக் கற்பு என (55) இருவகையாகக் கற்பினைக் காட்டுவார். இவற்றால் தலைவன் தலைவியரின் இல்வாழ்க்கையானது கற்பு என்பது பெறப்படும்.

களவொழுக்கம் வெளிப்படுதலும், களவொழுக்கம் இன்றித் தமரானே பெறுதலும் ஆகிய இயற்கை நெறியில் தப்பாது மகிழ்தலும், புலத்தலும், ஊடலும், ஊடல் தீர்தலும், பிரிதலும் இவற்றுடன் இணைந்து வருவனவும் கற்பு என, கற்பின் பொருட் கூறுகளைத் தொல்காப்பியம் பகுத்துரைக்கின்றது.

(பொருள் 488)

மேற்கண்ட விளக்கங்களினின்றும் அகம் என்பதன் விளக்கம், அதன் உட்பகுப்புகள், பொருட் கூறுகள், பொருளின் தன்மை முதலானவை அறியப்படுகின்றன. திருக்கோவையாரின் அதிகார வரலாறும்* அகத்திணையின் பொருட் கூறுகளை வரை யறுத்துள்ளமை கூறத்தக்கது.

## புறம்

"புறப்பொருள் என்பது அறம் செய்தலும், பொருள் ஈட்டுதலும், போர் புரிதலுமாகிய சமுதாய வாழ்க்கை பற்றிய;

---

* திருக்கோவையார்—பழையவுரையும் புதிய விளக்கமும் கழகம்; 1970; பக். 2—3.

செய்திகளைக் கூறுவது ஆகும். இவற்றின் பயன் எல்லோருக்கும் உரியது. இது பிறருக்குப் புலனாதலின் புறம் எனப்பட்டது. இது பற்றிய உணர்ச்சிப் பிறருக்குக் கூறத்தக்கது. ஆதலால் இது புறம் எனப் பெயர் பெற்றது'' என்பது புறம் பற்றிய பொதுவான கருத்தாகும்.*

ஒவ்வொரு புறத்திணையையும் அது எந்த அகத்திணைக்குப் புறனாவது என, 'வெட்சிதானே குறிஞ்சியது புறனே' (பொருள். 59) என்பது போன்று தொல்காப்பியம் அமைப்பதி னின்றும் அகத்திற்கு மாறுபட்டன புறம் என்பது அதன் கருத்தாக உணர முடிகிறது. முத்துவீரியம் 'புறத்திணை அகத்திணைப் புறமாகும்மே''(819) என இதனைத் தெளிவாக எடுத்துக்காட்டும்.

''ஆன்ற சிறப்பின் அறம்பொருள் இன்பமென
மூன்று வகை நுதலியது உலகம் அவற்றுள்
அறமும் இன்பமும் அகலாதாகிப்
புறம் எனப்படுவது பொருள் குறித்தன்றே''

என்று பன்னிரு படலம், புறப்பொருள் அறமும் இன்பமும் அகலா தாகிப் பொருள் பற்றி வரும் எனக் குறிப்பதாக இளம்பூரணர் எடுத்துக்காட்டி, அதன் பொருத்தமின்மை சுட்டி, அதனை மறுத்துரைப்பார்.** அறம் சார்பாக அமையாது, முதன்மை யாகவே அமையும் என்பது அவர் கருத்து. சான்றாக, வாகைத் திணை கட்டில் நீத்தபால் முதலாகக் காமம் நீத்தபால் ஈறாக அறங் கூறுகிறது என எடுத்துக் காட்டுவார்.

அறம் பொருள் என்ற இரண்டன் இயல்பினை உடைத்தாய் வெளியே புலப்பட நிகழும் ஒழுக்கம் புறம் என இலக்கண விளக்கம் (பொ. 599) புலப்படுத்துகிறது.

அறம், பொருளுடன் அன்பினையும் இணைத்துக் காட்டும் போக்கினை வீரசோழிய உரையில் (104) பெருந்தேவனார் சுட்டுவர். இங்கு அன்பு என்பது, தலைவன் தலைவியரிடையே நிலவிய அன்பு பிற உயிர்களிடத்தும் பரவி நிற்பதனை உணர்த்து கிறது எனலாம்.

---

* லெ. ப. கரு. இராமநாதன் செட்டியார்; தொல்காப்பியச் செல்வம்; ப. 43.

** இளம்பூரணர் (உரை); தொல்காப்பியம் — பொருளதிகாரம்; ப. 73,

புறமாவது, நிரைகோடற்பகுதி; பகைவயிற்சேறல், எயில் வளைத்தல், இருபெரு வேந்தரும் களத்துப் பொருதல், வென்றி வகை, நிலையாமை வகை, புகழ்ச்சி வகை என எழுவகைப்படும் என அதன் பொருட்கூறுகளைப் பகுத்துக் காட்டுவர் இளம் பூரணர்.*

புறத்திணைப் பகுப்புகள் யாவை என்பதில் இலக்கணங் களுக்கிடையே பெரிதும் வேறுபாடமைகிறது. தொல்காப்பியம் வெட்சியுள் அடக்கிய கரந்தையும், உழிஞையுள் அடக்கிய நொச்சியும் தனித்திணைகளாக ஏற்றம் பெறுகின்றன.

தொல்காப்பியம் காஞ்சித்திணையில் நிலையாமைக்குச் சிறப்பிடம் நல்க, பிற வஞ்சியின் எதிர்நிலையாகப் போர்க் காட்சிகளையே காஞ்சிக்குக் கொண்டுள்ளன. புறப்புறப் பொருட் பிரிவினால் புறம் முழுமையாகப் போரின்பாற்படுதலின் இந்நிலை தோன்றுகின்றது. இதனை வீரசோழிய உரையுள் (104) பெருந் தேவனார் குறிக்கும்,

''வெட்சி முதலாகத் தும்பை ஈறாகப்
புக்கமர் செய்வது புறத்திணை ஆகும்''

எனும் மேற்கோள் நூற்பா உணர்த்தும்.

முத்துவீரியம் புறப்புறப் பகுப்பிற்கு உடன்படாமையின் வாகை, எச்சப்படலம் முதலானவற்றையும் இணைத்துப் புறமாகத் தரும். இந்நூல் பாடாண்திணையை விலக்கியிருப்பது வியத்தற்குரியது. புறப்பொருள் பற்றிய விரிவான விளக்கத்திற்கு இடமளிக்காமையின் இதன் நோக்கம் புலப்படுமாறில்லை. இது உணர்த்தும் வெட்சி முதலாக வாகை ஈறாக அமையும் எண் திணைகளும் போரின்பாற்படுவனவே. எனவே போர் தவிர்த்த அனைத்தும் எச்சப் படலத்துள் அடங்கும் என்ற நோக்கில் பாடாண் பொருளினையும் அதனுள் இணைத்து விட்டார் எனக் கருதலாம். பிற பொதுவியல் (புறத்திணைக்குப் பொதுவாக அமைவன) என்பதனையே, இது எச்சப்படலமாகக் கொள்கிறது.

இந்நூல் தரும் இக்கருத்திற்கு வீரசோழிய பெருந்தேவனார் உரை (104) உதவியிருக்கலாம் என்பதனை, அதனுள் அமையும்,

'அவைதாம்,
வெட்சி, கரந்தை, வஞ்சி, காஞ்சி
நொச்சி, உழிஞை, தும்பை. வாகை
எச்சப்படலமோடு இவை என மொழிப'

எனும் மேற்கோள் நூற்பா எண்ணச் செய்கிறது.

---

* மேற்படி ப. 2.

உசிதசூடாமணி வாகையைப் புறமாகவும், காஞ்சியைப் புறப் புறமாகவும் கொள்கிறது. வாகை, போருடன் தொடர்புடைய அதன் வெற்றியைப் புகறலின் புறத்தோடு இணைத்துள்ளார் எனலாம். தொல்காப்பியத்தைப் பின்பற்றிக் காஞ்சியை நிலையாமை நோக்கில் கொண்டுள்ளது போலும். இந்நூல் திணை விளக்கமோ, பகுப்பு நோக்கமோ அளிக்காமையின் இக்கருத்து உய்த்துணர்வே.

புறப்பொருள் வெண்பாமாலை புறத்திணைகளுக்குரிய விளக்கங்களை நிரை கவர்தல் வெட்சி; நிரை மீட்டல் கரந்தை; போர் மேற்செலல் வஞ்சி; பகைவர் வரவால் காவலிடத்தைக் காத்தல் காஞ்சி; எயில் காத்தல் நொச்சி; பகைவர் எயில் கவர நினைத்தது உழிஞை; போர்க்களத்து மறங்கருதித் தும்பை மலைதல் தும்பை எனத் தருகின்றது.

சுவாமிநாதம் புறப்பொருள் துறைகள் 342 என அறுதியிட்டுள்ளது. (151)

இவ்விளக்கங்களினின்றும் புறம் என்பது அகத்தின் மாறுபட்டது; அறம், பொருள் உணர்த்துவது; தொல்காப்பியத்தின் பின் போர் பற்றிய கருத்துகளே புறமாகியது போன்ற செய்திகள் கிடைக்கின்றன. இவற்றிற்கேற்ப நூல்களிடையே திணை, துறைப் பிரிவுகள் மாற்றம் கொண்டுள்ளன.

அகப்புறம்

தொல்காப்பியர், கைக்கிளை, பெருந்திணையை அகப்புறமாகவும் கொள்கிறார் என்று அகப்புறக் கருத்தின் வித்தினைத் தொல்காப்பியத்துள் சுட்டுவர் இளம்பூரணர்*. இவரது கருத்துப் படி கைக்கிளை, பெருந்திணை இரண்டும் இருவகைப்படுகின்றன. உயர்ந்த தலைவர் மாட்டு நிகழும் கைக்கிளையும், பெருந்திணையும் அகத்திணையின் பாலடங்கும். இழிந்தோரிடம் நிகழ்வதும், இயற்பெயர் சுட்டி வருவதும் அகப்புறமாகக் கொள்ளப்படும். அது சிறப்பற்றது.

தொல்காப்பியம் வெளிப்படையாகக் கைக்கிளையை அகப்புறமாகக் கூறாவிடினும், புறத்திணையின் பாடாண் திணையுள் ஒரு துறையாகக் கைக்கிளையை இணைத்திருப்பதும், அகப்பொருளுரைக்கும் ஏழு திணைகளுள் கைக்கிளை பெருந்திணை ஒழிந்த ஏனையவற்றை "அகன் ஐந்திணை" (பொருள். 57)

---

* இளம்பூரணர்; முன் சுட்டியது; பக். 27-28, 64.

எனச் சிறப்பித்திருப்பதும், அவற்றிற்குக் கைகோள் வகுத்து விளக்கமளித்திருப்பதும் இவ்வகப்புறப் பாகுபாட்டிற்கு வழி கோலியுள்ளன எனலாம்.

இயல்பு

இவ்வகப்புறப் பாகுபாடு இருவித இயல்புகளைக் கொண்டமைகின்றது. இவற்றை அகப்புறக் கோட்பாடுகளாகவும் கொள்ளலாம்.

1. அகவிலக்கணத்தினின்று மாறுபடுவதும் புறத்தினின்று மாறுபடுவதும் இணைந்தது அகப்புறம்.

௨. அகத்தினின்றும் மாறுபட்டமைவது அகப்புறம்.

என்பன அவை. அகப்புறப் பாகுபாட்டை விரித்துரைக்கும் நூல்கள் இவற்றுள் ஏதேனும் ஒன்றினைத் தம் கொள்கைக்கு அடிப்படையாக்குகின்றன.

இவற்றுள் முன்னது காலத்தால் முற்பட்ட கருத்தாகலாம் அதாவது அகத்தின் எண்ணங்களுக்குப் புறம்பானவை, புறத்தில் போர் என்ற கருத்திற்குப் புறம்பானவை இரண்டையும் இணைத்துச் சுட்ட, இரண்டின் தோற்றக்களமான அகம், புறம் என்பனவற்றைக் கொண்டே ''அகப்புறம்'' என நவின்றிருத்தல் வேண்டும்.

இதன் வளர்ச்சி நிலையாக அகத்தின் மாறாயது அகப்புறம், புறத்தின் மாறாயது புறப்புறம் என்ற பகுப்பு நிலை தோன்றியது எனலாம்.

முதல் கோட்பாடு

அகத்ததும் புறத்ததும் ஆயிரு பகுதியின்
மிகுத்ததும் ஆகி விரிந்தது பொருளே (1)

எனும் தமிழ்நெறிவிளக்கம், இவ்வகைப் பாகுபாட்டை, 'மிகுத்ததும் ஆகி' எனக் குறிப்பாக உணர்த்தி, விளக்கம் அளிக்காது மேற்செல்கிறது.

அதன் பழைய உரையாசிரியர், ''அகமல்லா இன்பமும், புறமல்லாப் பொருள் செயல் வகையும், அறமும் அதன் பயனாகிய வீடும் இருவகை நிகழ்ச்சியும் நோக்கிக் கோடலின் அகப்புறப் பொருளெனப்பட்டன'' எனத் தன் கருத்துரைப்பர்.

வீரசோழிய உரையினின்றும் (95) பெயரறியப்படாத ஒருவர், இதற்கு உடன்பாடாய் அமைவதனை, "அறனும் வாட்கையும், ஒருதலைக் காமமும், பொதுவியல், பாடாண், நயநிலைப்படலம் எனும் இவைகள் அனைத்தும் அகப்புறமாகும்" எனும் கருத்தால் அறியக் கிடக்கிறது.

இரண்டாம் கோட்பாடு

இதனை வீரசோழியம் முதல் பெறமுடிகிறது. அகப்புறப் பாகுபாட்டில் அடங்கும் பொருட் கூறுகளை,

"ஏற்று முதுபாலை முதுபாசறை முல்லை இயன்ற வள்ளி
தோற்றும் சுரநடை இல்லவண்முல்லை தொல்காந்தள் அன்றி
மாற்றும் குறுங்கலி தாபதம் குற்றிசை கைக்கிளையோடு
ஆற்றும் பெருந்திணையாம் தபுதாரம் அகப்புறமே" (95)

என வரையறுக்கிறது.

அகமரபின் சிறப்பினை மீறிநிற்றல், புறத்திணையுள் அகமாக அமைவன எனும் நிலையில் இவ்வகப்புறப்பகுப்பு அமைந்திருக்கக் காணலாம். இப்பொருட்களுள் கைக்கிளை, பெருந்திணை என்பன ஒத்த அன்பின் மாறுபடுதலானும், ஏனையவை ஒத்த அன்பின் பாற்படினும் பிறர் உணர நிற்குமாதலானும் அகப்புறம் எனக் குறித்தார் போலும்.

அகப்புறப் பாகுபாட்டிற்கு இளம்பூரணரின் கருத்துடன் ஒத்துச் செல்லும் நம்பியகப்பொருள், பொதுநிலையில் அகப் பாடல்களுக்குக் கூறியுள்ள விதிகளே இவற்றிற்கும் பொருந்தும் (250) எனச் சிறப்பிக்கிறது.

அகப்புறப் பெருந்திணையுள் மடலேறல், விடைதழால், குற்றிசை, குறுங்கலி, சுரநடை, முதுபாலை, தாபதநிலை, தபுதாரநிலை ஆகியவற்றைத் தருகிறது. வீரசோழியம் அகப்புறமெனப் பொதுநிலையில் கூறியவற்றுள் சில இங்கு அகப்புறப் பெருந்திணையாக விளக்கம் பெற்றிருக்கின்றன. இதனை நோக்குங்கால் பொருந்தாக் காமம், காமத்தின் மிகை, பிறர்காண நிற்றல் என முந்நிலைகளில் அகப்புறப் பகுப்பிற்கு நம்பி, காரணம் காண்கிறார் எனலாம்.

புறப்பொருளுக்கு இலக்கணம் உணர்த்தும் நூலாகப் புறப்பொருள் வெண்பாமாலை இருந்த பொழுதிலும் கைக்கிளை, பெருந்திணை ஆகியவற்றிற்கும் இலக்கணம் நவில்கின்றது. இவை

எதன் பாற்படும் என நூலாசிரியர் கூறாவிடினும் ஏனைய திணைகளைப் புறம், புறப்புறம் எனும் பிரிவுகளில் அடக்கிக் காட்டுவதால் இவற்றை அகப்புறமாகக் கருதுகிறார் எனலாம்.

யாப்பருங்கலவிருத்தி மேற்கோள் நூற்பாக்கள் இரண்டு* அகப்புறக் கைக்கிளைக்கும் அகப்புறப் பெருந்திணைக்கும் விளக்கம் அளிக்கின்றன.

''கைக்கிளை தானே காணுங்காலைக்
கூட்டமில் கிளவிக் கைக்கிளை அகப்புறம்''
''நிலையா அன்பின் நீடா இன்பத்து
உலக மலைவெலாம் பெருந்திணை அகப்புறம்''

என்பன அவை. தனக்குத்தானே கூறுவதாகி, எதிர்மொழி பெறாது ஒருதலைக்காமமாகி அமையும் கூட்டமில் கிளவி அகப்புறக் கைக்கிளையாகும். உண்மை அன்பின்றிக் குறுகிய இன்பத்தையே கொண்டனவாய் அமையும் குறைபாடுகள் அகப்புறப் பெருந் திணையாகும் என்பது கருத்து.

### நச்சினார்க்கினியர் கருத்து

அகப்புறப் பாகுபாட்டிற்கு ஏற்பாகவும்** மறுப்பாகவும்*** பலவிதக் கருத்துகள் காணப்படுகின்றன. இவற்றிற்கு அடிப் படையாய் அமைவது கைக்கிளை, பெருந்திணை பற்றிய குறிப்பு களாகும். இவ்விரு கூறுகளில் ஒன்றுக்கு மேற்பட்ட இயல்புகள் இம்முரண்பட்ட எண்ணங்களைத் தோற்றுவித்துள்ளன.

---

* யாப்பருங்கலம் பழைய விருத்தியுரையுடன் ப. 570

** திருக்கோவையார் உரையாசிரியர்; திருக்கோவையார் [பழைய உரையும் புதிய விளக்கமும்]; கழகம்; 1970; ப. 25

க. வெள்ளை வாரணனார்; தொல்காப்பியம் [தமிழிலக்கிய வரலாறு] இரண்டாம் பகுதி; 1970; ப. 112

ந. சுப்புரெட்டியார்; தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை 1974; ப. 43

குழந்தை; தொல்காப்பியம்—பொருளாதிகாரம் முதற்பகுதி; மு. ப. 1968; ப. 34.

*** ச. சோமசுந்தரபாரதியார்; தொல்காப்பியம்—தொல்காப் பியர் பொருட்படலப் புத்துரை [புறத்திணையியல்]; மு. ப. மே. 1972; ப. 36

தொல்காப்பியருக்குப் பின் வந்தோரால் பல்வேறு வகையாகப் பகுக்கப்பட்ட கைக்கிளை பற்றிய முழுமையான எண்ணம், நச்சினார்க்கினியரின் தொல்காப்பிய உரையில் காணக்கிடக்கிறது. பொருட்பாகுபாட்டு நெறியினை உணர்தற்கு இஃது துணை நிற்றலின் இங்குத் தனித்து எடுத்துக் காட்டப்பட்டுள்ளது.

செய்யுளியலில் கைக்கிளையின் யாப்பு பற்றிக் கூறும் பொழுது 'முன்னைய நான்கும்' என்ற அகத்திணையியற் கைக்கிளையும், 'கடவுளும் வரையார்' என்ற உம்மையாற் கொண்ட புறத்திணை யியற் கைக்கிளையும், 'அன்றி காமஞ்சாலா இளமையோள்' என்ற கைக்கிளையும், 'கைக்கிளை வகையொடு' என்ற கைக்கிளையுள், கடவுள் கைக்கிளை யல்லா கைக்கிளை என* நான்கு வகையைக் குறிப்பிடுகிறார்.

இவை முறையே அகம், புறம், அகப்புறம், புறப்புறம் ஆகிய வற்றைச் சார்ந்தனவாகக் கருதுகிறார். கனவின் தொடக்கத் தனவாகக் கருதும் காட்சி முதலாயின அகத்திணையின் பாற்படும் கைக்கிளை. கடவுளர் மாட்டு மானிடர் நயக்கும் ஒருதலைக்காமம் புறப்பொருள் கைக்கிளை. காமம் சாலா இளையோளிடம் ஆடவன் கொள்ளும் கைக்கிளை அகப்புறம். தலைவன் பெயர் சுட்டி அமையும் பெண்பாற் கைக்கிளை புறப்புறம் என்பது இவர் கருத்து. இவற்றுள் பின் மூன்றனுக்கும் இவர் சான்றுகள் காட்டியுள்ளார்.

அன்பின் ஐந்திணையாகிய தூய காமத்தினின்றும் வேறு படுவனவற்றைத் தனித்துக் காண விரும்பியமை இதற்கு ஒரு காரணம் என்பது புலனாகின்றது. சங்கவிலக்கியத்தினின்றும் மாறுபட்டமையும் பக்தி அகப்பாடல்கள், முத்தொளாயிரப் பாடல்கள், போன்றனவும் தொல்காப்பியத்திற்குப் பின்வந்த இலக்கண ஆசிரியரையும் உரையாசிரியரையும் எண்ணச் செய்திருக்கலாம்.

### புறப்புறம்

புறத்தின்கண் வரும் போரல்லா நிகழ்ச்சிகள் புறப்புறமாகும் என்பது பொதுவான கருத்து. "வென்றிபோற்றும் புறப்புற" மென வீரசோழியம் கூறுவது (84), பாட்டுடைத் தலைவனின் சிறப் பினை, வெற்றியை, புகழைப் போற்றுதல் எனும் நோக்கில் எனக் கொள்ளலாம்.

---

* நச்சினார்க்கினியர் [உரை]; தொல்காப்பியம்—பொருளதி காரம்—செய்யுளியல்; கழகம்; பக் 141—142

வாகை, பாடாண், பொதுவியல் எனும் மூன்றும் புறப்புற மாகக் கொள்ளப்படுகின்றன. பொதுவியலுக்குப் பன்னிரு படலம்,

பல்அமர் செய்து படையுள் தப்பிய
நல்லாண் மாக்கள் எல்லோரும் பெறுதலின்
திறப்பட மொழிந்து தெரிய விரித்து
முதற்பட எண்ணிய எழுதிணைக்கும் உரித்தே

என விளக்கம் அளிக்கிறது.* இதனை நோக்கும்பொழுது, புறப் பகுதியின் புறனடையாகப் பொதுவியல் அமைவதினால் அது புறப்புறமாயிற்றோ என எண்ணத் தூண்டுகிறது.

### நச்சினார்க்கினியர் கருத்து

புறப்புறப் பகுப்பினை, அல்லவை கடிதல் அறிவர் கூற்றா தலின் புறப்புறப் பொருளாயிற்றென்க' என ஏற்றுக் கொள்ளும் நச்சினார்க்கினியர்** அதன் விளக்கத்தில் பிறர் கருத்தினின்று மாறுபடுகின்றார்.

இவரது கருத்துப்படி காஞ்சியும், வாகையும், பாடாணும் புறப்புறப்பொருள் அல்ல என்பதாம்.*** இங்கு, தொல்காப் பியர் காஞ்சித்திணையுள் கூறுவனவற்றைப் பிற பொதுவியலாகக் கொள்ளுதலைக் கருத்துட் கொளல் வேண்டும்.

இவரது எண்ணப்படி அறமுரைத்தலே புறப்புறப் பொருள் என்ற எண்ணம் எழுகிறது. பிற இலக்கணங்கள் கூறும் புறப்புறக் கூறுகள் புறமே அன்றிப் புறப்புறமாகாது என்பதும் பெறப்படு கிறது. தலைவனின் இயற்பெயர் சுட்டி, தலைவி கொள்ளும் கைக்கிளையைப் புறப்புறத்தின்பாற் நச்சினார்க்கினியர் கொள்வது முன்பே அகப்புறத்துள் காட்டப்பட்டுள்ளது. இதனுடன் தலைவிக்கு அறவோர் கூறி அறிவுறுத்தும் பாடல்கள் புறப் பொருள் எனக் கூறப்பட்டிருப்பதையும் இணைத்து நோக்குங்கால் புறத்துடன் அகம் இணைவதைப் புறப்புறமாகக் கொள்கிறாரோ என எண்ணத் தோன்றுகிறது.

---

* இளம்பூரணர் (உரை), முன் சுட்டியது; ப. 73.

** நச்சினார்க்கினியர் (உரை); தொல்காப்பியம்—பொருளதி காரம்; கழகம் 1977; ப. 246.

*** மேற்படி ப. 235.

இப்பகுப்பிற்கும் உடன்பாடும்* எதிர்ப்பும்** உண்டு.

அறுவகையிலக்கணம்

அகம், புறம், அகப்புறம் என பொருட் பகுப்பினைச் சுட்டும் இந்நூல், அவற்றிற்கு அளிக்கும் விளக்கத்தில் பெருமளவு மரபினின்று மாறுபட்டமைகிறது.

அகப்பொருள் பகுதியில் கேசாதிபாத நிலையில் உறுப்புகளின் இயல்பு, ஏழு பருவநிலை விளக்கம், பெண்கள் பற்றிய பண்டை யோர் கூற்று, துறை, இயல்பு ஆகியன விளக்கப்படுகின்றன.

'இன்ப வெள்ளத்து இசைவுறும் ஒவ்வோர்
நிகழ்ச்சியும் துறைகளா மெனல் நெறியே' (பொருள். 48)

என இவர் துறைக்குக் கொடுத்திருக்கும் விளக்கம் அகப்பொரு ளோடு இணைந்து நிற்கிறது.

புறப்பொருளில் ஐவகை நிலத்தியல்பு, ஒவ்வொரு வகை யினரின் இருப்பிடம், விலங்கு, பறவை முதலானவற்றின் சிறப்பியல்பு, கருவிகள் பற்றிய குறிப்பு, உலகியலுக்குப் புற மானவை யாவை முதலானவை பேசப்படுகின்றன.

அகம், புறம் இவற்றிற்குப் பொதுவாய் நிற்பன அகப்புறம் என்பது இதன் கருத்து.

இவற்றால் இந்நூல் இலக்கியப் பொருளை மாறுபட்ட கண்ணோட்டத்தில் அணுகியுள்ளமை பெறப்படும். உரிப் பொருளை,ஏனைய இலக்கண நூல்கள் விளக்கி விரிக்க இது முதல், கரு, உரி மூன்றும் இணைந்த நிலையில் மூன்றற்கும் ஒத்த சிறப்பளித்துப் பொதுநிலையில் நின்று பேசியுள்ளது எனலாம்.

முதலும் கருவும் புறமாக விளக்கப்பட்டுள்ளமை நோக்கற் பாலது. இவற்றில் கூறப்படும், நிலம், பொழுது, தெய்வம், உணவு, மக்கள், புள், பறை, விலங்கு போன்றவை அகப் பொருளைப் பாடுவதற்குப் புறநிலையில் பின்னணியாக அமைவ தால் அவற்றைப் புறமாகக் கொண்டார் போலும்.''பிற்காலத்தில் திருக்குறள், பக்தியிலக்கியம் போன்றவற்றில் நிலம், பொழுது, பிற கருப்பொருள்களை வைத்துப் பாடும் வழக்கம் குறைந்து

---

* க. வெள்ளைவாரணனார்; முன் சுட்டியது:- (சிவஞான முனிவர் கருத்து) ப. 111.

** சோமசுந்தர பாரதியார்; முன் சுட்டியது; ப. 37.

உரிப்பொருளை மனத்தளவில் கொண்டு பாடியதால் அவற்றை அகத்திணைக்கு (மட்டுமே) உரிய பொருளாகக் கொள்வது பொருத்தமன்று என எண்ணியது இதற்குக் காரணமாகலாம்'' என்பர்.*

இலக்கணங்கள் உணர்த்தும் பொருளை அவற்றின் பெரும்பான்மை எண்ண நோக்கில் கீழ்க்கண்டவாறு காட்டலாம்.




* ச. வே. சுப்பிரமணியன்; தமிழ் இலக்கியக் கொள்கை- தொகுதி 3; உதநி; சென்னை; 1978; ப. 6

முடிபு

அகம், புறம் எனும் பொருட்பாகுபாடு அகம், புறம், அகப் புறம், புறப்புறம் எனப் பிரிந்தமை இலக்கண வளர்ச்சியைக் காட்டுகிறது.

அகம், புறம் இவற்றைப்பற்றி எண்ணிய அளவிற்கு இலக்கண நூலார் அறம், பக்தி போன்ற பிற பொருட்கள் பற்றி விரிவாக எண்ணாமை வினாவாக அமைகிறது. மரபுக்கு உட்பட வேண்டும் என்ற நோக்கிலேயே தொல்காப்பியப் பகுப்பில் உட்பகுப்புகள் கண்டனர் போலும்.

முழுமையாக இவை, இலக்கியங்களைக் கருத்துட்கொண் டுள்ளன எனக் கூறவியலாது. புதுமை நோக்கைக் காட்டிய தொன்னூல் விளக்கம், அறுவகையிலக்கணம் ஆகியவை கூட இதில் வெற்றி காணவில்லை.

தொல்காப்பியத்திற்குப்பின் பொருள் பற்றிய விளக்கம் எந்த அளவிற்கு இலக்கணங்களில் வளர்ந்துள்ளது என்ற வினாவிற்கு, இருப்பதை மேலும் பகுத்தும் சிற்சில மாற்றங்களை யும் தந்து விரிவாக்கியுள்ளனவே தவிர இனிச் செய்ய வேண்டியன வற்றைப் பொருட்படுத்தியதாகத் தெரியவில்லை என்பதே விடையாக அமைகிறது. இதனால் புதிய இலக்கணங்களின் தேவை உணரப்படுகிறது.

அகம், புறம் தவிர்ந்த ஏனையவற்றைப் பாடாண், பொதுவியல் ஆகியவற்றுள் உட்படுத்தலாம். ஆயின் இவை போன்று பொது நிலைப் பகுப்பாக அமையாது, தனித்தனியே முன்னவை போன்று [அகம், புறம்] பக்தி, அறம், சமுதாயம் எனச்சிறப்பு நிலையில் அவைபற்றிய தெளிந்த விளக்கங்கள் தேவை. அப்பொழுதுதான் பொருள் பற்றிய ஆய்வு மேலும் சிறப்பாக வளர்தற்குப் பெருந் துணையாகும்.

## பொருளிலக்கணங்கள்

| எண். | நூல் | ஆசிரியர் | காலம் | பொருட் பகுப்புகள் | | | |
|---|---|---|---|---|---|---|---|
| | | | | அகம் | புறம் | அகப் புறம் | புறப் புறம் |
| 1. | தொல்காப்பியம் | தொல்காப்பியர் | கி.மு. | □ | □ | — | — |
| 2. | களவியல் | இறையனார் | கி.பி. 7 | □ | — | — | — |
| 3. | புறப்பொருள் வெண்பாமாலை | ஐயனாரிதனார் | 8 | — | □ | — | □ |
| 4. | தமிழ்நெறிவிளக்கம் | — | 9 | □ | □ | □ | — |
| 5. | வீரசோழியம் | புத்தமித்திரனார் | 11 | □ | □ | □ | □ |
| 6. | நம்பியகப்பொருள் | நாற்கவிராசநம்பி | 12 | □ | — | □ | — |
| 7. | களவியற்காரிகை | — | 13 | □ | — | — | — |
| 8. | மாறனகப் பொருள் | திருக்குருகைப் பெருமாள் கவிராயர் | 16 | □ | — | — | — |
| 9. | இலக்கண விளக்கம் | வைத்தியநாததேசிகர் | 17/18 | □ | □ | — | — |
| 10. | தொன்னூல் விளக்கம் | வீரமாமுனிவர் | 18 | □ | □ | — | — |
| 11. | முத்துவீரியம் | முத்துவீரிய உபாத்தியாயர் | 18 | □ | □ | — | — |
| 12. | உசிதசூடாமணி | ச. சிதம்பரக் கவிராயர் | 18/19 | □ | □ | □ | □ |
| 13. | சுவாமிநாதம் | சுவாமிகவிராசர் | 19 | □ | □ | — | — |
| 14. | அறுவகை இலக்கணம் | தண்டபாணி சுவாமிகள் | 19 | □ | □ | □ | — |

குறிப்பு : □ = உண்டு

— = இல்லை

# இலக்கியத்தில் பொருள்

இலக்கிய உருவாக்கத்திற்கு அடிக்கல்லாய் அமைகின்ற பொருள், அதனைச் சிறப்பிக்கும் காரணிகளுள் ஒன்றாகவும் பெருமை பெறுகிறது. திருக்குறளின் புகழ் அது உணர்த்தும் பொருளில் (அறம்) பொதிந்திருத்தல் வெளிப்படை.

ஒன்றன் சிறப்பினை, வளர்ச்சியை அளவிடற்குக் காலந் தோறும் அது அடையும் மாற்றங்களும் பயன்படுகின்றன. இலக்கியப் பொருளும் அவ்வக்காலச் சூழலுக்கு ஏற்பப் பல மாற்றங்களைப் பெற்றுள்ளது. ஒரு காலத்தில் சிறப்புப் பெறுவது அடுத்த காலத்தில் பின்னுக்குத் தள்ளப்படுகிறது அல்லது மேலும் வளர்ச்சியடைகிறது. பொருளாய்விற்கு இவற்றை அளவிடுதல் இன்றியமையாதது.

எல்லாப் பொருட்களையும் எல்லாக் கால கட்டங்களிலும் சிறப்பு நிலையில் காண முடியாவிடினும் அவற்றின் கூறுகளை யாவது ஆங்காங்கே காண முடியும். எனவே, குறிப்பிட்ட ஒரு பொருள், குறிப்பிட்ட ஒரு காலத்திற்குத்தான் என்று வரை யறுத்தல் இயலாது. அவற்றின் முதன்மைத் தன்மை நோக்கி, அது இக்காலத்தில் சிறப்பிக்கப்படுகிறது என்று மட்டுமே கூற வியலும். ஆகவே இங்குக் காலம் பற்றிய எண்ணத்தினைச் சிறப்பிக்காது, துணை நிலையாக்கி ஆய்வு மேற்கொள்ளப்படு கிறது.

இவ்வாய்வில் சங்கப்புலவர் முதல் தற்காலக் கவிஞர் வரை உட்படுகின்றனர். நாட்டுப்புற இலக்கியங்கள் இன்று தனித்த செல்வாக்குப் பெற்று விளங்குவதுடன் அவற்றுள்ளும் இப் பொருட்கள் அமைதலின் அவையும் இங்கு இணைத்து நோக்கப் பட்டுள்ளன. இவர்கள் கையாளும் பொருட்கள், ஆங்காங்கே பெற்று வரும் மாற்றம், வளர்ச்சி ஆகியவற்றை, இயன்றவிடங் களில் காரணத்துடன் புலப்படுத்தல் கட்டுரையின் நோக்கம்.

பகுப்பு இடர்ப்பாடு

பொதுநிலையில், தமிழ் இலக்கிய வரலாற்றாசிரியர் ஏதேனும் ஒன்றன் அடிப்படையில், காலம், பொருள், வடிவம், தன்மை ஆகியவை இணைந்த நிலையிலேயே இலக்கியப் பகுப்பை மேற் கொள்கின்றனர். பல்கியுள்ள இலக்கிய வகைகளும், அவற்றை வேறுபடுத்திக் காட்டுதற்கு ஒரே அடிப்படை அளவுகோலின்றி பொருள், யாப்பு, எண், வடிவம் எனப் பல அமைவதும் இவ்விடர்ப் பாட்டிற்குக் காரணம் எனலாம். இவற்றால் ஒன்றிற்குச் சிறப்பளித்துப் பகுக்கும் பொழுது அது தனித்து நிற்காது. பிற தொன்றுடன் தொடர்புடையதாக (overlapping) அமைகிறது.

பொருள் நோக்கில் இலக்கியப் பகுப்பு

தமிழிலக்கியத்தை வகைப்படுத்தும் முயற்சியை மேற் கொண்ட சபாபதி நாவலர், அவற்றைத் திருமுறை இலக்கியம், சங்க இலக்கியம், காவிய இலக்கியம், புராண இலக்கியம், இதிகாச இலக்கியம், பல்வகைப் பிரபந்த இலக்கியம் எனப் பகுக்கின்றார்.* இங்கு முழுமையாகப் பொருளைக் கொண்டுப் பகுத்தலின்றி வடிவம் (காவிய இலக்கியம்); காலம் (சங்க இலக்கியம்) ஆகியனவும் பங்கேற்கின்றன.

அ. ச. ஞானசம்பந்தன் கருத்து

மேனாட்டாசிரியர் ஹட்சன் என்பார் தம் நூலுள் (An introduction to the study of Literature) காட்டியுள்ள பகுப் பினைத் தமிழிலக்கியத்திற்குமாக இவர் ஏற்றுக் கொள்கிறார்.** அப்பகுப்பினை,

1. தனி மனிதன் வாழ்வு, அனுபவம்.
2. மனிதன் புற உலகில் ஈடுபாடு கொள்வதால் பெறும் அனுபவம் (வாழ்வு, சாவு, குற்றம், நன்மை, தீமை, கடவுள், கடவுளுக்கும் மனிதனுக்கும் உள்ள தொடர்பு.)
3. மனிதன் சமுதாயத்தில் இணைந்து வாழும் பொழுது பெறும் அனுபவம்.
4. இயற்கை தரும் அனுபவம்.
5. மனிதன் தன் கற்பனையால் படைத்த கலை

---

* சபாபதி நாவலர்; திராவிடப் பிரகாசிகை; 1976; ப. 156.

** அ. ச. ஞானசம்பந்தன்; இலக்கியக் கலை, 1956; ப. 15.

எனத் தருகிறார். இங்கு இலக்கியப் பகுப்பு பொருள் அடிப் படையில் அமைந்துள்ளது. ஆயின் இரண்டாம், மூன்றாம் பகுப்பிற்கு இடையே உள்ள வேறுபாடு தெளிவாக இல்லை. பொருட்கள் எவை எவையாக இருக்கலாம் என்பதும் வெளிப் படையாக இல்லை. எனவே இப்பகுப்பினை ஏற்றுக் கொள்ளுதல் இயலாததாகிறது.

தா. ஏ. ஞானமூர்த்தி கருத்து

"துடிப்புகள், நுவல் பொருள்கள் ஆகிய இவ்விரு திறத்தின் பாகுபாடுகளையும் இணைத்து நோக்கின் பொதுவாக இலக்கியங் களை இரு பெரும் பகுதிகளாகப் பிரிக்கலாம். ஒன்று தன் னுணர்ச்சி இலக்கியம், இதன்கண் பலவகையான அகப்பொருட் பாடல்கள், கையறு நிலை, இயன்மொழி, அரசவாகை முதலிய துறைகள் அமைந்த புறப்பொருட் பாடல்கள், பக்திப்பாடல்கள் இன்னோரன்னவை அடங்கும். மேலும் ஒருவனின் தனிப்பட்ட அனுபவத்தினைக் கட்டுரையாகப் படைப்பதும் இத்தன்னுணர்ச்சி இலக்கியத்தைச் சாரும். இவற்றை அகநிலை இலக்கியங்கள் என்றும் கூறலாம். (Subjective). மற்றொன்று ஆசிரியர் தன்னுள் நோக்கித் தன் உணர்ச்சியை இலக்கியமாகப் படைப் பதற்குப் பதிலாக, புறநிலையில் நின்று மனித வாழ்க்கைச் செயல்கள் ஆகியவற்றைக் கூர்ந்து கவனித்து அவற்றைத் தான் கண்டவாறே இலக்கியமாகப் படைப்பதாகும். கதைப்பாடல், காப்பியம், வாழ்க்கை வரலாறு, புதினம், நாடகம், சிறுகதை, பயண இலக்கியம், வருணனை இலக்கியம் ஆகியவை இப்பகுதி களைச் சாரும். இப்பகுதியைச் சார்ந்த இலக்கியங்களைத் தற்சார்பற்ற அல்லது புறநிலை இலக்கியங்கள் எனலாம்".*

இதில். 1, "நுவல் பொருள் அடிப்படையிலும்" என ஆசிரியர் கூறியுள்ள போதிலும் மேற்கண்ட கூற்றில் வெளியீடே பகுப்பிற்கு ஆதாரமாக உள்ளது. 2. பல்வேறுபட்ட பொருட்கள் ஒரே பகுப் பின்கீழ் அமைகின்றன. 3. பயண இலக்கியம் தற்சார்புடைய ஒன்று. மற்றும் வருணனை இலக்கியத்துள்ளும் தற்சார்பமை தற்குப் பெரும் வாய்ப்புண்டு. இவற்றால் பொருட்பகுப்பு எனும் நிலையில் இக்கூற்றினையும் மேற்கொள்ளல் முடியாது.

---

* தா. ஏ. ஞானமூர்த்தி; இலக்கியத் திறனாய்வியல்; 1980; ப. 75.

ஆ. வேலுப்பிள்ளை கருத்து

"அவ்வக் காலத்தில் சிறப்புற்றிருந்த கருத்துக்கள் அவ்வக் கால இலக்கியத்துள் முக்கியத்துவம் பெறுகின்றன. இந்த அடிப்படையில் கடந்த இரண்டாயிரம் ஆண்டுகாலத் தமிழிலக்கிய வரலாற்றை நோக்கி, இயற்கை நெறிக்காலம், அறநெறிக் காலம், சமயநெறிக்காலம், தத்துவ நெறிக்காலம், அறிவியல் நெறிக்காலம் என்று ஐந்து காலப் பிரிவுகளாக......"* எனக் கணக்கிடுகிறார்.

பொருள் நெறிக்கு இவர் பகுப்பில் இடமளித்துள்ள போதிலும், இப்பகுப்பு மேற்போக்கான நிலையில் அமைந்துள்ளமையின் இன்னும் சற்று விளக்கமான விரிவான பகுப்பு தேவையாகின்றது.

பொதுநிலையில் இலக்கிய உள்ளீடு அடிப்படையில் உலக இலக்கியப் போக்கு, வீரயுகப் பாடல்கள், அறநெறிப் பாடல்கள், பக்திப் பாடல்கள், புதுச் செந்நெறிப் பாடல்கள், வீறுணர்ச்சிப் பாடல்கள் என ஒன்றன்பின் ஒன்றாக அமைவதாகக்கருதும் கருத்தினையுடையார், அது தமிழிலக்கியத்திற்கும் பொருந்துவதாகக் குறிப்பிடுவர்.**

இங்கும் பின்னிரு பகுப்புகளினால் பொருள் வரையறை, மேற்போக்காகவே அமைகிறது. மற்றும் தமிழ் இலக்கியப் போக்கிற்கு இது ஏற்புடைத்தாதலும் ஐயப்பாட்டிற்குரியது.

புதிய பகுப்பு

மேற்கண்டவற்றால், பொருள் அடிப்படையில் இலக்கியங்களை வகைப்படுத்தற்கும், அவற்றின் மாற்றம், வளர்ச்சி நிலையினைக் கணக்கிடற்கும் பிறிதொரு பகுப்பு நெறி தேவையாதலை உணரலாம். இதுவரை தோன்றியுள்ள இலக்கியங்களில் அமைந்துள்ள பொருட்களுக்கு முதன்மையளித்து, காணப்படும் இலக்கிய வகைகளின் துணை கொண்டு, கால நிலையையும் கருத்துட் கொண்ட ஒரு புதிய பகுப்பு இவண் தரப்படுகிறது.

இதன்படி இலக்கிய வரலாற்றில் பொருள் நிலையில் மூன்று விதக் காலங்கள் காணப்படுகின்றன. அவையாவன:

---

* ஆ. வேலுப்பிள்ளை; தமிழ் இலக்கியத்தில் காலமும் கருத்தும்; 1969; முகவுரை.

** ஜி. ஜான் சாமுவேல்; இலக்கிய ஒப்பாய்வுக் களங்கள்; 1978, பக். 8-9.

1. பொருள் தனித்த காலம்
2. பொருள் இணைவு காலம்
3. பொருள் விரிவு காலம்

## பொருள் தனித்த காலம்

குறிப்பிட்ட பொருள் மட்டும் இலக்கியப் பரப்பின் பெரும் பகுதியை ஆட்கொண்டமையும் காலம் இவண் எண்ணப்படுகிறது. சான்றாகச் சங்ககால இலக்கியங்கள் முழுமையும் அகம், புறம் எனும் இரு பொருட்கள் ஆட்சி செய்ததனைக் குறிப்பிடலாம். தொடரும் சங்க மருவிய காலத்துள் அறமும், பல்லவர் காலத்துள் பக்தியும் இலக்கியங்களைத் தம் வயப்படுத்திக் கொண்டுள்ளன. இம்மூன்று காலங்களிலும் இந்நான்கு பொருட்களே ஒன்றன்பின் ஒன்றாக இலக்கியச் செல்வாக்குப் பெற்றுத் திகழ்கின்றன. ஆகவே இவை சிறப்புப் பெற்றிருந்த காலம் 'பொருள் தனித்த காலம்' எனப்படுகிறது.

## பொருள் இணைவு காலம்

அடுத்த நிலையில் காப்பியங்களும், பிரபந்தங்களும் மிகுதியாக எழுந்துள்ளன. முன் சுட்டியுள்ள நான்கு பொருள்களும் காப்பியத்தால் ஒரேவகை இலக்கியத்துள் சிறப்பிக்கப்படுகின்றன. பிரபந்தங்களில் இவை தனித்தநிலையிலும் (தூது) இணைந்த நிலையிலும் (கலம்பகம்) முதன்மை பெறுகின்றன. இந்நாற் பொருட்களும் ஒரே காலத்தில் சிறப்புப் பெறுவதனால் இஃது பொருள் இணைவு காலம் எனப்படுகிறது.

## பொருள் விரிவு காலம்

அகம், புறம், அறம், பக்தி எனும் பொருட்களுள் சுழன்று கொண்டிருந்த தமிழ் இலக்கியம் அவற்றினின்றும் விலகி, சமுதாயம், படைப்பாளர், இயற்கை, வாழ்த்து, வசை, நிகழ்ச்சி, அரசியல், தேசியம், எனப்பலவாக விரிவு கொள்கிறது. தனிப் பாடல்களின் தோற்றம் இத்தகு விரிவிற்கு வழி வகுக்கிறது. ஐரோப்பியர் வருகையால் உரைநடையில் புத்திலக்கியங்களின் தோற்றம் அமைகிறது. இதனால் பொருள் விரிவு வரலாறு, பயண இலக்கியம் என மேலும் படர்கிறது.

சிறப்புடையனவே இலக்கிய ஏற்றம் பெறல் வேண்டும் என்ற நிலை மாறி யாரையும் பாடலாம், எதனையும் பாடலாம்; உயர்

வினைப் புகழ்வது போன்றே, தாழ்வினை இகழ்ந்தும் பாடலாம் என்று இலக்கிய உலகில் ஏற்பட்ட மாற்றம், புதியன படைத்தலில் எழும் விழைவு ஆகியன இப்பொருள் விரிவிற்குக் காரணங் களாகும்.

இப்பகுப்பினால் குறிப்பிட்ட ஒரு காலத்தில் பிற பொருட்கள் தோன்றவே இல்லை என்பது கருத்தன்று. ஆங்காங்கே அவை தம் இருப்பினைக் கொண்டுள்ள போதிலும், குறிப்பிடத்தக்க முக்கியத்துவம் பெறவில்லை. முனைந்து நிற்கும் ஒன்று மற்றொன்றை மறைத்து விடுகிறது என்பது கருத்தாம்.

பொருள் வரலாற்றைக் காணும் பொழுதும் இலக்கியத்தைச் செய்யுள், உரைநடை என்று தனித்து நின்று நோக்குதல் எளிமைத்தாக அமைகிறது. இவற்றினைத் தனித்து நோக்கின் ஒவ்வொன்றின் பொருள் நிலையில் அமையும் சிறப்புக் கூறினைக் காணற்கும் வழிவகுக்குமாதலின் செய்யுளிலக்கியம், உரைநடை யிலக்கியம் எனும் பெரும் பிரிவுகளின் கீழ் இங்குப் பொருளாய்வு மேற்கொள்ளப் படுகிறது.

## செய்யுளிலக்கியம்

தமிழிலக்கியத்தில் மிகுதியான காலத்தைக் கொண்டுள்ள செய்யுளிலக்கியத்துள்,

1. அகம்
2. புறம்
3. அறம்
4. பக்தி
5. இயற்கை
6. சமுதாயம்
7. படைப்பாளர்
8. போற்றல்
9. வாழ்த்து
10. வசை
11. அரசியல்
12. தேசியம்
13. மொழி
14. காட்சிப் பொருள்
15. நிகழ்ச்சி
16. வரலாற்றுப் புனைவு
17. புதிய கொள்கைசார் கற்பனை

முதலானவை அமைகின்றன.

### அகம்

தமிழிலக்கியத்தின் அறிமுகம் சங்கப்பாக்கள் மூலமாக அமை கிறது. அங்கு அகம், புறம் எனும் இரு பொருள்கள் பெருமை யுடன் திகழினும் கிடைக்கும் பாடல்களில் (2381) மிகுதி எண்ணிக்கை பெற்றுச் சிறப்பன அகப்பாடல்களாகும் (1862).*

---

* வ. சுப. மாணிக்கம்; தமிழ்க்காதல்; 1962; ப. 13.

அகப்பாடல் மரபு தொடர்ந்து சிற்சில மாற்றங்களுடன் இன்று வரை நிலவுகிறது. காப்பியங்களிலும் இடையிடையே அகப்பாடல்கள் காணப்படுகின்றன. பக்திப் புலவர்கள் தங்களைத் தலைவியாக்கி, இறைவனைத் தலைவனாகக் கொண்டு அகப்பாடல் மரபில் பாடுவதைப் பரவலாகக் கொண்டுள்ளனர். இங்கு 'மக்கள் நுதலிய அகன் ஐந்திணையும் சுட்டி ஒருவர்ப் பெயர் கொளப் பெறாஅர்' (தொல். பொருள். 57) ஆகலின் பக்தியிலக்கியத்துள் அமையும் அப்பாடல்கள் அகப்பாடல்கள் ஆகுமா என்ற வினா எழலாம். அவையும் அகத்தின் பாற்படுவனவே என்பதற்கு அமைதி காட்ட வியலும்.

அதாவது, பக்தியிலக்கியத்துள் அமையும் அகப்பாடல்களில், இறைவனின் பெயர் அவன் எழுந்தருளியுள்ள ஊரினைச் சுட்டியோ, அவ்வூரில் வழங்கும் பெயராகவோ அன்றிப் பொது நிலையில் அமையும் பெயராகவோ இருக்கின்றது. இதனைச் சங்கப் பாக்களில், குறிஞ்சித் தலைவனைக் குறிக்க நாடன், மருதத் தலைவனைக் குறிக்க ஊரன் என ஒவ்வொரு திணைக்கும் குறியிட்டுச் சுட்டுவது போன்று ஏற்றுக் கொள்ளலாம். எனவே இவற்றையும் அகப்பொருளுள் உட்படுத்தலாம். இந்நிலைத் தற்காலக் காதற் பாடல்களில் பொன்னன், பொன்னம்மா போன்று அமைந்திருப்பதும் சுட்டற்பாலது.*

ஆயின், அகப்பாடலின் இலக்கண விதிகளை முற்றிலும் மீறாதவையே உண்மையில் அகத்தின் பாற்படும் எனும் கொள்கையும் உண்டு என்பது நவிலற்பாலது.**

---

* கு. பழனி; கழனிக்காதல்; பாமாலை; நாக. முத்தையா (தொகு); 1968; பக். 181-183.

** "Once again I wish to emphasise the Literary facts that Akam poetry has its own individuality and distinct norms and forms, that mere adoption of some items of Akam in the description of love relations in the other kind of literature should not be misconstrued as Akam proper and that the technical word 'Akam' should be applied only to those poems which are grammatically and Conventionally infallible".

V. Sp. Manickam; 'Akam Literature in Tamil', Literary Heritage of the Tamils; P. 18

**வளர்ச்சி**

தனித்த நிலையில் துறையாக நிற்கும் பாடல்கள், துறைகள் பல இணைந்த நிலையில் வளர்ச்சி பெறுவதைக் குறிஞ்சிப் பாட்டு காட்டுகிறது. இதனைக் கோவையிலக்கியங்கள் மேலும் வளர்த்துள்ளன.

இந்நிலையினின்றும் மாறுபட்டு ஒரே துறையில் பல பாடல்கள் கொண்ட இலக்கியமாக மலரும் ஒரு துறைக் கோவையும், ஒரே பாடலாக அமையும் தூதும் ஒரு வகை வளர்ச்சியே.

ஏதேனும் ஒரு திணையினை மட்டுமே சிறப்பித்து நூல்கள் தோன்றும் வளர்ச்சியைக் கார்நாற்பதால் அறியலாம்.

அகக்கூறும் புறக்கூறும் இணைந்து ஒரே பாடலுள் சிறப்புப் பெறும் பாங்கினை நெடுநல்வாடை துவக்கி வைக்கிறது. அகப் பாடலுள் பாட்டுடைத் தலைவனின் இயற்பெயர் பின்னாளில் சுட்டும் தன்மை வளர்ந்தமைக்கு இப்பாடலுள் மறைவாகச் சுட்டியுள்ளமையும் காரணம் எனலாம்.

பாரதிதாசன் தம் காதற்பாடல்களில்* பல வளர்ச்சிகளைத் தோற்றுவித்துள்ளார். மாந்தரின் அக உணர்வுகளைப் பாடல் அகப்பாடல் எனும் எல்லை விரிந்து, இல்வாழ்க்கை சிறந்து நிற்பதற்குத் தேவையான இருபாலார்க்கும் பொதுவான அறிவுரைகளை நல்கும் பாடல்களும் (பெண்) அகப்பாடல்களாகி இங்குத் தோன்றுகின்றன. காலத்திற்கேற்ப, சூழலுக்கேற்ப மனிதன் மாறுதல் தேவையாதலின் இன்றையச் சூழலுக் கேற்பத் தலைவன் தலைவியரைக் காட்டல் கடமை எனும் கவிஞரின் எண்ணம் இதற்குக் காரணமாகலாம்.

இவர் பாடியுள்ள காதற்கதைப் பாடல்களை அகநானூறு, கலித்தொகை பாடல்களின் வளர்ச்சி நிலை எனலாம். இக்கதைப் பாடல்களில் தலைவன் தலைவியர் பெயர் பெறுகின்றனர்.

உடன்போக்கிற்குரிய காரணங்களில் ஒன்றாக இன வேறு பாட்டினால் திருமணம் தடைபடுவதைக் (அறிவுமணம்) குறிப்பிடுவார்.

அகப்பாடல்களைத் தம் கொள்கை விளக்கத்திற்காகப் பயன் படுத்திக் கொள்ளும் பெருமையையும் இவர் பெறுகிறார். தம், கலப்புத் திருமண ஆதரவைக் 'காட்டுக் குறத்தி நாட்டுப் புறத்

---

* காதற்பாடல்கள்; த. கோவேந்தன் (தொகு); 1977

தான் கலப்புத் திருமணம்' எனும் பாடலில் விளக்கிச் செல்வதைச் சான்றாக்கலாம்.

அகப்பாடற் பொருளாக, நடந்த உண்மை நிகழ்வினை, 'கஜராஜ்—சரோஜாவின் காதற் பெருமை' மூலம் சிறப்பிக்கிறார்.

மாற்றம்

அகப்பாடல்களில் உயர்ந்தோர் தலைவராக வேண்டும் எனும் நியதியைக் கலித்தொகை இழிந்தோரையும் தலைவராக்கி மாற்றுகிறது.

சங்கத்திற்குப் பின் முதற்பொருளும், கருப்பொருளும், தம் சிறப்பினை இழந்து விட்டன. உரிப்பொருள் கொண்டே அகப் பாடல்களைத் தரமுடியும் என்பதனை வள்ளுவர் இன்பத்துப் பாலால் உணர்த்துகிறார். இந்நிலையே தொடரவும் செய்கிறது.

திணை, துறைகளின் கீழ் அமைக்கப்பட்ட நிலையினை மாற்றி வள்ளுவர், களவு, கற்பு எனும் பெரும் பிரிவுகளின் கீழ்த் தம் பாடல்களைச் சிறப்பிக்கிறார்.

எத்திணையாயினும் பெண் மடலேறுதல் பொருந்தாது என்ற நிலையை, தம் தலைவி மடலேறுவதன் மூலம் திருமங்கை யாழ்வார் மாற்றுகிறார் (பெரிய திருமடல்).

தலைவி செவிலிக்கு அறத்தொடு நிற்கும் நிலையைத் திருவேங்கடத்தந்தாதியில் காணலாம் (53).

ஒற்றியூராரின் உலாவினைக் காணாமல் ஞாலத்து எவையும் நயவேன் என வஞ்சினம் உரைக்கும் தலைவியைத் 'திரு உலாத் திறத்தில் காட்டி, புறத்தின் பாற்படும் வஞ்சினத்தை அகத்திலும் படைக்கலாம் என உணர்த்துகிறார் இராமலிங்கர்.

நாட்டுப்புறப் பாடல்கள் பெருமளவு மாற்றம் பெற்றமை கின்றன. இவை உலகியலைப் பெரிதும் வடித்துக் காட்டுவன வாதலின் இந்நிலை எனலாம். கைக்கிளைத் தலைவியரை முத்தொள்ளாயிரம், பக்திப்பாடல்கள் போன்று காட்டினும் காதலில் தோல்வியுற்ற தலைவியை இங்குதான் காண்கிறோம்.*

---

* தமிழக நாட்டுப்புறப் பாடல்கள்; சு, சண்முகசுந்தரம் (தொகு); *1978:* பக், *47-48.*

பெருந்திணையின் பாற்படும் பொருந்தா மணத்தினைத் தலைவி எதிர்ப்பதும் பரவலாகக் காணப்படுகிறது.*

தலைவன் இல்லில் தான்படும் துயரங்களைத் தலைவி கூறுதலும்** இங்கின்றிப் பிற அகப்பாடல்களில் காணலரிது.

தான் தலைவியை வினைவயின் பிரிந்து வந்த காலையில் அவளைச் சேரும் நாளை எண்ணி நிற்கும் தலைவனைக் காட்டுதல் (நற்றிணை- 371) மரபாயிருக்கத் தாய்வீடு சென்ற தலைவியை எண்ணிப் பிரிவுத்துயர் கொள்ளும் தலைவனைப் புதிதாகப் பாரதிதாசனில் (அவள் இல்லை) காணலாம்.

பொதுநிலையில் பிற்கால இலக்கியங்களில் திணை, துறை பகுப்புகள் சிறிது சிறிதாகக் குன்றி இன்று இல்லையென ஆகி விட்டன. இதனால் இயற்கை, அகப்பாடல்களில் பெற்ற செல்வாக்கும் குறைந்துவிட்டது.

தோழி, பாங்கன் முதலானோரும் தம் சிறப்பிழக்க, தலைவியின் கூற்று மிகுதியாக அமைகிறது. நற்றாயும் இங்கு முக்கியத்துவம் பெறுகிறாள். தலைவியின் நிலை சங்க இலக்கியப் போக்கினின்றும் பெரிதும் மாறுபட்டதே இதற்குக் காரணமாகிறது.

### சிறப்பு

பெண்பாற் கைக்கிளையைப் புறமாகக் கொள்வதனைத் தொல்காப்பியரின் பாடாண்திணைக் கைக்கிளையாலும், புறப்பாடலாலும் (புறம். 83) உணரலாம். ஆயின் இது பிற்காலத்தில் அகப்பாடலாகக் கருதப்படுவதுடன், தூது போன்றவற்றால் மிகுதியான பயிற்சியும் பெறுகிறது.

தாம் விரும்பும் வள்ளலை அகப்பாடலுள் சிறப்பிக்க விரும்பிய சங்கப்புலவர், அவன் நாட்டு வளத்தையும் (குறுந்தொகை 66) அவன் தொடர்பான வரலாற்றுச் செய்திகளையும் (அகநானூறு 96) பயன் கொண்டது போன்று பிற்காலக் கவிஞர் இதனைக் கைக்கொண்டனர் எனலாம்.

---

* மேற்படி. ப. 54.

** தமிழ் நாட்டுப்புற இயல் ஆய்வு, ச. வே. சுப்பிரமணியன் (பதி); 1979; ப. 235.

இறைமீது மோகம் கொள்வதாகப் பாடப்படும் பாடல் களைக் கடவுளர் மாட்டு மானிடப் பெண்டிர் நயந்த பக்கமாகப் பாடாண் திணையுள் சுட்டுவர் (தொல். பொருள் 81). ஆனால் இதுவும் பக்திக்கவிஞரால் அகத்துள் அகப்பட்டுள்ளது.

தலைவன் மறைவிற்காகத் தலைவி வருந்துவதாக அமையும் பாடல்களைச் சங்கயிலக்கியம் புறமாகக் காட்ட (முதுபாலை பாக்கள் புறம். 253—256) பாரதிதாசன் அகப்பாடலாகப் படைத் திருப்பதும் நவிலற்பாலது (மணவாளனைப் பறிகொடுத்த மங்கை அழுகிறாள்). அகம் எனில் இன்பம் மட்டுமே என்பது முன்னவர் நோக்கமாயிருக்க* அகவாழ்வில் தோன்றும் இழத்தற் கரிய பேரிழப்பும் அகத்தின் பாற்பட்டதே என்பது பின்னவரின் நோக்கமாக இருக்கலாம்.

இதுகாறும் கண்டவற்றின் அடிப்படையில் சங்கம் தொட்டு இன்றுவரையுள்ள அகப்பாடல்களில் மூன்றுநிலைகளைப் பார்க்கிறோம்.

1. அகப்பொருளிலக்கணத்தை ஒட்டி, சிறிதளவு மாற்றங் களுடன் அமைதல் சங்கம், சங்கம் மருவிய காலப்பாக்கள், காப்பியங்களில் அகப்பாடல்களாக அமைபவை ஆகியன இதன் பாற்படும்.

2. அகவிலக்கணத்தைப் பொருட்படுத்தாது, தலைவனை அடைதலை மட்டுமே குறிக்கோளாகக் கொண்ட ஆன்மாவின் நிலை. இது பக்திப்பாக்களில் காணப்படுவது ஆகும்.

3. அகவிலக்கணத்தினின்று முற்றிலுமாக மாறுபட்டு அமை தல். இங்கு நாட்டுப்புறப் பாடல்களும், தற்காலக் கவிதைகளும் எண்ணத்தக்கன.

## புறம்

அகம் அல்லாதன புறம் என்ற நிலையில் ,சங்க காலத்தில் பலவித பொருட்களைப் புறத்தில் பார்க்கிறோம். பிற்காலத்தில் போரும் அதன் தொடர்பானவையும் தவிர ஏனையவை தனித் தனிப் பொருட்களாக வளர்ச்சி பெற்றுள்ளன. அகப்பாடல் களைப் போன்று புறப்பாடல்கள் தொடர்ச்சியாக இன்றுவரை அமையாவிடினும் ஆங்காங்கு ஒரளவு காண முடிகிறது.

* பிரிவுத்துயர் காட்டும் பாடல்கள் பல இருப்பினும் இறுதியில் அவை இன்பியலாக முடிவதனைக் கருத்துட் கொள்கின்றன.

வீரநிலைக் காலப் பாடல்களின் பொதுக்கூறுகளாக சி. எம். பௌரா கூறுவனவற்றுள் சில புறப்பாடல்களுக்கு ஒத்து வருகின்றன என்பர்.* அவற்றுள் ஏற்புடையனவற்றைக் கீழ்க்கண்டவாறு ஒப்பிட்டுக் காட்டலாம்.

1. வீரநிலைக் கவிதைகளில் பாடப்பெறும் வெற்றி மனித ஆற்றலின் வரம்பிற்கு உட்பட்டது.

சங்கப்பாக்களில் பாடப்பெறும் மன்னர்களும், குறுநில மன்னர்களும் அவர்கள் உண்மையில் கொண்ட வெற்றிக்காகவே பாராட்டப்படுகின்றனர். சான்றாகப் புறநானூற்றுள் சோழன் போர்வைக் கோப்பெருநற்கிள்ளி முக்காவனாட்டு ஆமூர் மல்லனைப் பொருது சாத்தந்தையார் பாடியதைக் (80) காட்டலாம். மீவியல்பு ஆற்றல்களாக அமையும் கற்பனை வெற்றியைப் புகுத்தல் பிற்காலத்தே தான் சிறப்புப் பெறுகிறது.

2. அமரில் அமரர் உலகு அடைந்தாலும் அன்றி வெற்றி வாகை சூடினாலும் வீரர் தம் வாழ்வும் சாவும் அக்கால மக்களால் பாராட்டப்பட்டன.

நடுகல் வழிபாடு (புறம். 329) இக்கூற்றிற்குச் சான்றாம்.

3. மனிதர்களை மையமாகக் கொண்ட உண்மையை உரைப்பன.

இங்குப் பாட்டுடைத் தலைவனாக அரசர், வள்ளல் போன்றோர் அமைதலும், அவர்தம் செயல்களே சிறப்பிக்கப்படுதலும் கையறு நிலைப் பாடல்களில் கூடத் தலைவன் புகழ் இயல்பு நிலையிலே இருத்தலும்; வாழ்விற்கு வழி காட்டுவதாக அமையும் கணியன் பூங்குன்றனாரின் 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' (புறம். 192) எனும் பாடலைப் போன்றமைவனவும் இக்கூற்றினை உறுதிப்படுத்தும்.

இவற்றால் புறப்பாடல்களின் இயல்பாக உள்ளோன் தலைவனாக உள்ளது புனைதல் என்பது பெறப்படுகின்றது.

தலைவனைச் சிறப்பிக்க மிகுதியும் வீரமும் வள்ளன்மையும் பயன்படுவதுடன் அவன் பண்புநலமும் பயன்படுகிறது. (பதிற்றுப்பத்து; 63) இயற்கை வருணனை, அகப்பொருளில் பாடற்

---

* கதிர். மகாதேவன்; ஒப்பிலக்கிய நோக்கில் சங்ககாலம்: ப. 57.

பொருளை விளக்கப் பயன்பட்டது போல் இங்குப் பாட்டுடைத் தலைவனைச் சிறப்பிக்குமுகமாக அவன் நாட்டு வருணனையிலும் பயன்படுகிறது.

வரலாற்றாய்விற்கு இப்புறப்பாடல்கள் பெரிதும் துணை செய்கின்றன. பதிற்றுப்பத்தின் ஒவ்வொரு பத்தின் இறுதியிலும் அப்பத்தின் பாட்டுடைத் தலைவன் பெயரும், செயல்களும், அவனைப் பாடினோர் பெயரும் பெற்ற பரிசிலும் பத்துச்செய்யுட் களின் பெயரும் அவ்வரசர் ஆண்டகால அளவும் அறிய வருவதும், மெய்க்கீர்த்திகளில் அறிய வருவனவும் இதற்குச் சான்றாம்.

வளர்ச்சி

துறையளவில் நின்ற ஆற்றுப்படை தனியிலக்கியமாக, சங்க காலத்திலேயே வளர்ச்சி பெற்றுள்ளது.

புறநானூற்றுள் இல்லாத துறைகள் பல பதிற்றுப்பத்தில் காணப்படுகின்றன. வெட்சி அரவம், தும்பை அரவம், காட்சி வாழ்த்து போன்றனவும்; பாடாணின் வகைகளாக அமையும் செந்துறைப் பாடாண், வாகைப்பாடாண், வஞ்சித்துறைப் பாடாண் முதலியனவும் எடுத்துக் காட்டுகள்.

வாகைத்திணையின் ஏரோர் களவழித்துறை, களவழி நாற்பது எனத்தனியிலக்கியமாகக் கீழ்க்கணக்கு நூல்களுள் அக்காலத்தில் ஏற்றம் பெற்றுள்ளது. போர்க்களம் பாடும் பொருநரைச் சங்கப்பா சுட்ட (புறம். 382) இலக்கியத்தை இந்நூல் அளிக்கிறது. யானைப்போர் இங்கு மிகுதியாகப் பேசப்படுகிறது. பிற்காலத்தில் பரணியிலக்கியம் போர்க்களக் காட்சிகளைப் படைப்பதற்கு இந்நூல் ஒரு முன்னோடி எனலாம்.

நாட்டு, நகரப் படலங்கள் காப்பியங்களில் இணைதல் புறப்பாடல்களில் தலைவனின் நாடு, நகர் முதலியன சிறப்பிக்கப் படுதலினின்றும் தோன்றியது எனலாம்.

பாரதியின், 'மாஜினியின் பிரதிக்னை' வஞ்சினக் காஞ்சியாக அமையும் புறப்பாடலாகும். தன் வஞ்சினத்துடன் அதனை நிறை வேற்ற இறையை வேண்டி முடித்திருப்பது பொருள் வளர்ச்சியைச் சுட்டி நிற்கிறது.

அகப்பாடற் துறைகளின் தொகுப்புநிலை கோவையிலக் கியத்துள் அமைந்தமை போன்று மறைந்த தகடூர் யாத்திரை

தொடர்நிலைச் செய்யுளாக, அதாவது புறப்பாடற் துறைகளின் தொகுப்பாக அமைகிறது*

மாற்றம்

அரசனைச் சிறப்பிப்பதற்காகத் தோன்றிய புறப்பாடல்கள் பல பக்திக்கவிஞரால் இறைவனுக்கு மாற்றம் பெற்றுள்ளன. துயிலெடைநிலை திருப்பள்ளியெழுச்சியானாலும், தசாங்கம் போன்றனவும் இதற்கு ஏற்புடைச் சான்றுகள்.

தனிப்பாடல்களில் வள்ளல்களைச் சிறப்பிக்க அவர்தம் வீரத்தைக் கூறுவதைக் காட்டிலும் ஈகை முதலான பிறவே முக்கியத்துவம் கொள்கின்றன. புரவலரின் இசையுடன் (36) வேண்டாதாரின் வசையும் (279) இணைவது** குறிப்பிடத் தக்கது.

புறப்பாடல்களில் இடம்பெறும் கையறுநிலைப் பாடல்கள் நாட்டுப்புறப் பாடல்களில் ஒப்பாரியாகவும், பிற்காலப் பாடல் களில் இரங்கற்பாக்களாகவும் மாறியுள்ளன. கையறுநிலை புரவலருக்கு என அமைந்த நிலை மாறி நாட்டுப்புறப் பாடல் களில் கணவன், தாய், தந்தை, உடன் பிறந்தார் எனச் சுற்றத் தளவில் நிற்கிறது. இதுவே தற்காலத்தில் நண்பன், தலைவர், பெரியோர், மற்றும் தனக்கு எவ்வகையிலும் அறிமுகமில்லா ராயினும் சமுதாயத்தால் மதிக்கப்படுவோர் என மிகப்பரந்த நிலையில் யாருக்கு வேண்டுமாயினும் அமைகிறது. அவர் இறப்பால் இழந்தோர் அடையும் துன்பம் முதன்மைப் படுத்தப் படுகிறது. இவற்றுள் கற்பனை கலத்தற்கு வாய்ப்புண்டு என்பதனைத் தனக்காகத் தான் இறந்தால் பாடக்கூடியதாக அமையும் பாடல்கொண்டு அறியலாம்.*** ஒப்பாரிப் பாடல்களில் தன்வரலாற்றுக் குறிப்பு; உயர்வு நவிற்சியுடன் இறந்தவர் பெருமை; கணவன் இழப்பால் சமுதாயத்தில் பெறவிருக்கும்

---

* இரா. இளங்குமரன்; தகடூர் யாத்திரை; ஆராய்ச்சி முன்னுரை கழகம்; 1976; ப. 24

** தனிப்பாடல்களுக்கு இக்கட்டுரையுள் கொடுக்கப்பட்டுள்ள எண்கள் "தனிப்பாடல் திரட்டு முதற்பகுதி; அ. மாணிக்கம் (பதி); 1977" நூலைப் பின்பற்றியதாகும்.

*** தமிழ் நாட்டுப்புற இயல் ஆய்வு; ச. வே. சுப்பிரமணியன் (பதி); ப. 245.

பல்வேறு துன்பச் சுமைகள் முதலியன பொருளாகின்றன. என்பர்.*

நாட்டுத் தலைவனுக்கு அளித்த சிறப்பினை, பாரதி நாட்டுக் காக்கி மொழிவதனை, 'பாரத மாதா திருப்பள்ளி யெழுச்சி', 'பாரத மாதா', 'பாரத மாதா திருத்தசாங்கம்' போன்ற பாடல்கள் காட்டுகின்றன. புறப்பொருள் இவற்றால் தேசியமாக மாறுகிறது என்றும் கொள்ளலாம்.

மாற்றானிடமின்றி, உட்பகைகளாகிய சமுதாயச்சிக்கல், வறுமை இவற்றை எதிர்த்து நிகழும் போரினை ந. மு. கோவிந்த ராய நாட்டார் தம் போர்பத்தில் காட்டுவார்.** நாட்டுக்காக எழுந்த போர் மொழிக்காக மாற்றம் பெறுவதைக் கண்ண தாசனின் 'போர் முழக்கம்' பாடலில் காணலாம்.***

## அறம்

இலக்கியங்கள் பயனுடையனவாக அமையவேண்டும்; இலக்கி யங்களின் மூலமும் சமுதாயத்தைப் பண்படுத்த முடியும் என்பன, அறப்பொருள் இலக்கியத்துள் இடம் பெற்றமைக்குக் கார ணங்கள் எனலாம்.

சங்கம் மருவிய காலத்தில், இது தனித்த நிலையில் பொரு ளாகச் சிறப்புற்ற போதிலும், தொல்காப்பியத்திலேயே இதன் தோற்றம் அமைகிறது. தொல்காப்பியம் தரும் வாயுறை வாழ்த்து (பொருள். 417); செவியறிவுறூஉ (பொருள். 419) ஆகியவற்றின் விளக்கங்கள் அறக்கருத்தினை உட்கொண்டுள்ளன. சங்க அகப்பாடல்களில் அறப்பொருட் கூறுகள் துணை நிலையில் அமைய (நற்றிணை 32) புறப்பாடல்களில் முதனிலையில் செவி யறிவுறூஉ துறைப் பாடல்களால் இடம் பெறுகின்றன.

மனிதன் சான்றோனாகச் சமுதாயத்தில் உயர்வாக வாழ்வது எப்படி; தனி மனித நிலையில் அவன் கடமைகள்; சமுதாயத்தில் அவன் கடமைகள் முதலான எண்ணங்கள் இங்கு முதன்மை பெறு கின்றன. சுருங்கக் கூறின் மனிதனின் உள்ளும் புறமும் தூய்மை

---

* டி. மங்கை; ஒப்பாரியில் பெண்கள் சமூக நிலை; தமிழ்நாட்டுப் புற இயல் ஆய்வு; ப. 367.

** தமிழ்ப் பொழில்—துணர் 50; 1976-77; ப. 127.

*** கண்ணதாசன் கவிதைகள் (முதல் இரண்டு தொகுதிகள்); 1971; ப. 290.

யுடன் அமைந்து மானிட நிலையினின்றும் தெய்வ நிலைக்கு உயர்த்துவது அறநூல்களின் பொருளாக அமைகிறது.

ஒருவர் மீது சில கட்டுப்பாடுகளை விதிக்கும் பொழுது அதனை அவர் ஏற்றுக் கொள்வதற்கு அடிப்படையில் ஏதேனும் ஒரு பிடிப்புத் தேவையாகின்றது. இதற்காக அறநூல்களில் இறைவன், ஊழ், வினை, நிலையாமை ஆகியவை பற்றிய கருத்துகள் உரைக்கப்படுகின்றன எனலாம்.

வாழ்க்கை தனித்து நிற்பது கிடையாது. பிறப்பு முதல் இறப்பு வரை யாருடனாவது இணைந்தே நிற்கிறது. ஆக்குவதும் அழிப்பதும் நட்பிற்கியலுமாதலின் அறநூல்களில் நட்பும் சுற்றமும் சிறப்பிடம் பெறுகின்றன.

மனிதன் வாழ்வினைச் சீர் செய்வதில் அவன் இடம் பெறும் சமுதாயம் சிறந்த பங்கேற்கிறது. அச்சமுதாயத்தினை இயக்குவது அரசு ஆகும். எனவே திறமை வாய்ந்த நல்ல அரசியல் எவ்வாறு இயங்க வேண்டும் என்பதனை உணர்த்தற்கும் அறநூல்கள் சிறப்பளிக்கின்றன.

பழமொழி ஓரளவு அறிவுறுத்தும் பாங்குடையது. உலகியல் சுட்டுவது, இவ்வுலகியல் வழி அறிவுறுத்தின் அறிவுரை வன்மை பெறும் நோக்கில் அறநூல்களில் பழமொழிகளும், வழக்குத் தொடர்களும் இடம் பெறுகின்றன எனலாம்.

திருக்குறள், நாலடி போன்று அறப்பொருட் கூறுகளை ஓரளவு முழுமையாக உரைப்பனவாகவும். ஆசாரக்கோவை போன்று ஒரு சிலவற்றிற்கு மட்டும் இடமளிப்பனவாகவும் அற நூல்கள் அமைகின்றன.

பக்திப் பாடல்களில் காணப்படும் அறிவுரைகள் இறைவனை அடைதலை உயிர்கள் நோக்கமாகக் கொள்ளவேண்டும் என்பதாகவும், பிறவாப் பேரின்பம் அடைவதற்குரிய வழியினைக் காட்டுவதுமாக அமைகின்றன.

காப்பியத்தின் பொருட் கூறுகளுள் அறங்கூறுதலும் ஒன்று. அவை காப்பியக் கதையோடு தொடர்புடையதாகவும் (கம்பராமாயணம்; கிட்கிந்தாகாண்டம்; அரசியற்படலம்) பொது நிலையில் அமைவதாகவும் (சிலப்பதிகாரம் — வரந்தருகாதை 185; 202) என இரு நிலைகளில் அமைகின்றன.

அறத்தினை மட்டும் நவில்வதாகச் சிறு காப்பியங்கள் படைக்கவியலும் என்பதனைப்பாரதிதாசன் தம்,'குடும்பவிளக்கு'; 'இருண்டவீடு' எனும் நூல்களால் சுட்டுகிறார். இவை முறையே நேரிடையாகவும், எதிர் மறையாகவும் இல்வாழ்க்கை அமைய வேண்டிய சிறப்பினை அறிவுறுத்துவன ஆகும்.

வளர்ச்சி

முன்நூல்களை விளக்குமுகமாக எளிமைப்படுத்துவதாக நூல்கள் எழுவதற்கு இப்பொருள் மிகுந்த இடம் கொடுக்கிறது. திருக்குறளை விளக்கும் சிவசிவ வெண்பா, ஆத்தி சூடியைப் போற்றும் ஆத்திசூடிப்புராணம் போன்றன சான்றுகள்.

காலத்திற்கேற்ற வகையில் அறமுரைத்தல் அறநூல்களின் தேவையாதலின், பல்வகையான புதுமைக் கூறுகளும், சீர்திருத்த எண்ணங்களும் இந்நூற்றாண்டில் அறநூல்களில் இடம் பெற்றுள் ளன. சொ. சிங்காரவேலன் தமது நூலில் (புதுமைக் குறள்); மூலநூல் பயில்; துணை விளக்க நூல் எழுதாமை; அரசு அலுவலர் கடன்; வாக்காளர் கடன்; வகுப்புக் கலவரங்கள் ஒழிதல்; பரிந்துரைக்கும் போக்குத் தவிர்த்தல்; ஆண் கற்பு; மேடை நாகரிகம் போன்ற அதிகாரங்களில் குறள்பாடி இன்றைய சமுதாயத்தை நெறிப்படுத்தக் காணலாம். சமுதாய நிலைக் கேற்ப அறமுரைத்தலில் விரிவு காணுவதை இந்நூல் நன்கு எடுத்துக் காட்டுகிறது. நாச்சி குளத்தார், தமிழ் கற்க வேண்டிய தன் தேவையை வலியுறுத்துவதன் மூலம் (நல்வழி வெண்பா; 2: 393) மொழிக்கல்வியினையும் அறப் பொருளுக்கு ஏற்புடைத் தாக்குகிறார்.

மாற்றம்

காலமாற்றத்திற்கேற்ப, சமுதாயச் சூழலுக்கேற்ப அடிப்படை அறங்கள் கூட மாறுபடும் தன்மைய என்பதனை ஈதலறம் வழி விளக்கலாம்.

சங்கவிலக்கியத்துள் 'இம்மைச் செய்தது மறுமைக்கு ஆம்' எனும் எண்ணம் கண்டிக்கப்பட்டது. அத்தகையோர் அறத்தை விலைபகரும் வணிகராகக் கருதப்பட்டனர் (புறம்.134), குறளுள் 'சாதலின் இன்னாததில்லை இனியதூஉம் ஈதல் இயையாகக் கடை' (230) என வலியுறுத்தப்பட்டது.

பழமொழி நானூறு காலத்தில் முற்பகல் அறம் செய்யின் பிற்பகல் அது பயன்படுமென உணர்த்தப்பட்டது (364). பயன்

கருதாது அறம் செய்தலைச் சங்கம் வேண்ட, பயன்பாடு சுட்டி அறம் செய்ய வேண்டுகிறது பழமொழி.

'வளமிலாப் போழ்து வள்ளன்மை குற்றம்' என்று நான்மணிக் கடிகை (91), 'இரந்தும் ஈதல் கடன்' எனும் கொள்கையை மறுத்துரைக்கிறது.

இல்லையென வந்தவர்க்கு ஈதல் அறமன்று
தொல்லை வளர்க்கும் அதுதான் (37: 2)

என்று இக்காலத்தில் ஈதலே தவறு என்று ஈதலறம் முழுமையாக சாமி. சிதம்பரனாரின் 'புதுக் குறளில்' மறுக்கப்படுகிறது.

ஊழ், வினை, இறை நம்பிக்கை முதலானவை காலப்போக்கால் எதிர்ப்பிற்குள்ளாவதையும் ஈதலறம் கண்டதுபோல் காட்ட வியலும்.

அன்று முதல் இன்று வரை இலக்கியத்துள் பெருமை பெற்று வரும் அறம் இந்நாளில் இரு நிலைகளில் அமைதல் குறிப்பிடத் தக்கது. மரபினை ஒட்டி அதனை அவ்வாறே ஏற்றுக் கொள்ளும் பாங்கும், மரபினைத் தவிர்த்துப் புதுக்கருத்துகளுக்கு இடமளிக்கும் பாங்குமென அவற்றைச் சுட்டலாம். இவ்விரு விதக் கோட்பாடுகளை உருவாக்குவதற்காகத் தெய்வ நம்பிக்கை அமைதல் சுட்டற்பாலது. இறைப்பற்றுடையோரால் மரபும் (நாச்சிகுளத்தார், நல்வழி வெண்பா) அற்றோரால் மாற்றமும் (சாமி. சிதம்பரனார்—புதுக்குறள்) பொதுநிலையில் ஏற்கப்படுகின்றன.

இந்நூற்றாண்டுக் கவிதைகளில் அதிகமாகப் பொதுவுடமை அறம் வலியுறுத்தப்படுவதும் குறிப்பிடற்பாலது.

## பக்தி

அறத்திற்கு அடுத்த நிலையில் புலவரின் புலனைப் பக்தி ஆட்கொண்டது. சமுதாயநிலை இலக்கியங்களைப் பாதிக்கும் என்பதற்குப் பக்தியிலக்கியத் தோற்றம் சான்றாகும். ஒன்றன்பால் கொண்ட ஆழ்ந்த பற்றும் நம்பிக்கையும் பக்தியாக மலர்கின்றன. அவை இலக்கிய ஏற்றம் பெறும் பொழுது பக்தியிலக்கியமாகின்றன.

இதன் தோற்றுவாயைத் தொல்காப்பியம் காட்டுகிறது. புறத்திணையுள் காட்டப்பெறும் கடவுள் மாட்டுப் பெண்டிர் நயந்த பக்கம் (பொருள். 63) போன்றன இதனை உணர்த்து

கின்றன. இறைவன் பற்றிய தெளிவான எண்ணம் தொல்காப்பியத்தில் கால் கொண்டுள்ளதை அறிய முடிகிறது.* அது பக்திப் பொருளின் இயல்பை உணர்த்துவதாக அமைகிறது.

சங்கவிலக்கியத்துள் பரிபாடலில் முருகன், திருமால் காடுகிழாள் ஆகியோர் மீது பாடல்கள் எழுந்திருக்கக் காண்கிறோம். மனிதன் தன்னைப் பற்றிச் சிந்திக்கத் தொடங்கியதன் வழி அறவிலக்கியங்கள் தோற்றம் காட்டுகின்றன அவை காட்டும் வழி நல்வாழ்வு பெறுவதற்கு இறையுணர்வு வேண்டப்படவே பக்தியிலக்கியம் தோன்றியது எனலாம்.

சமணர்களும் புத்தமதத்தவர்களும் சமுதாயத்தில் பெற்ற செல்வாக்கு வைதிக மதத்தினரிடையே விழிப்புணர்ச்சியைத் தோற்றுவித்தது. மீண்டும் வைதிகத்தை வேரூன்றச் செய்ய வேண்டும் என்ற நோக்கம் தமிழில் பக்தியியக்க மரபைத் தோற்றுவித்ததுடன் பெரும்பான்மையான இலக்கியங்கள், தமிழில் சென்ற நூற்றாண்டின் இறுதிவரை பக்திப் பொருட்பாற்படுவனவே என்ற சிறப்பிற்கும் அடிக்கல்லிட்டது.

பக்திப்பாடல்களின் பொருட்கூறுகள், இறைவனைப் பாடுதல், புலவர் தம்மை, தம்முணர்வினைப் பாடுதல், தமக்காகப் பாடுதல், பிறருக்காகப் பாடுதல் முதலியவற்றுள் அமைகின்றன. சிற்றின்ப மாயையிலிருந்து விடுபட்டுப் பேரின்பப்பெருநெறி பெறுவது இங்கு முதன்மை பெறுகிறது.

ஐம்புலனடக்கம், இறைவனை அவனெழுந்தருளியுள்ள தலங்களுடன் இணைத்துப் புகழ்தல், இறைக் கொள்கையை வெளிப்படுத்தல், பிறரையும் அவனிடம் ஆற்றுப்படுத்தல் போன்றன கூறுகளாக அமைகின்றன. சம்பந்தர் பாடல் தவிர பிறவற்றில்

---

* ''இதுவரை கூறியவற்றிலிருந்து தெய்வம்; (1) ஒரு பொருளாக இருந்து, (2) பல வடிவு கொண்டு, (3) வழிபடுவோரைக் காத்தும், (4) தீங்கு செய்வோரை அச்சுறுத்தியும்,(5) வேண்டுவார்க்குத் துணை நின்றும், (6) நோய் தீர்த்தும், (7) உயிர்கட்கு விதிகளை வகுத்தும், (8) மக்களுள் கலந்திருந்தும், (9) மக்களுக்கு உவமப் பொருளாகச் சிறந்தும், (10) விருப்பத்தை நிறைவேற்றியும் அருள் புரியும் இயல்புடையது எனத் தெய்வத்தின் இலக்கணத்தைத் தொல்காப்பியர் நமக்கு அறிவித்துள்ளார் எனலாம்.''—ஆ. சிவலிங்கனார்; தெய்வம் பற்றித் தொல்காப்பியர்;மயிலம் திருப்புகழ் திருப்படி விழா—வெள்ளி விழா மலர் 1956—1980; 1980; ப. 97.

இயற்கை வருணனை அருகியே உள்ளது. இயற்கை யிறந்த நிகழ்வுகள் முக்கியத்துவம் பெறுகின்றன. காப்பியத்துள் இவை, கதை மாற்றத்திற்கு, காப்பிய உயர்விற்குச் சிறப்பிடம் நல்க, இங்கு இறைவன் பெருமையை, அடியவர் பெருமையை உணர்த்து தற்கு வாய்ப்பாக அமைகின்றன.

இறையடியார்களையும், இறைவனோடு தொடர்புடையன வற்றையும் பாடுதல் அல்லது வணங்குதல், இறைவனுக்கு அவற்றை அருளியது போலாகும் என்ற கருத்தில் இடம் பெறு கின்றன எனலாம். ஆழ்வார்களுக்குத் திருமாலின் அவதாரமும், நாயன்மார்களுக்குச் சிவனின் திருவிளையாடலும் விதந்தோது தலுக்குப் பெரும் வாய்ப்புப் பெற்றுள்ளன.

தங்கள் பாடல்களைப் பாடினால் கிடைக்கும் பயன்களை உணர்த்தும் கடைக்காப்புப் பாடல்களைப் படைக்கும் மரபு பரவலாகக் காணப்படுகிறது. இதனால் பக்தி உணர்வு மக்களி டையே பெருகும் நினைவில் அமைத்திருக்கலாம்.

இடையீடின்றி ஒவ்வொரு நூற்றாண்டிலும் அருணகிரிநாதர், சித்தர், குமரகுருபரர், சிவப்பிரகாசர், தாயுமானவர், இராம லிங்கர்; தண்டபாணி சுவாமிகள், பாரதியார், கண்ணதாசன் போன்றோரால் பக்திப் பாடல்கள் பெருகி வரக் காண்கிறோம்.

பக்திப்பொருள் எண்ணற்ற பிரபந்தங்களைத் தோற்றுவித் திருப்பதனைத் திருமுறை, திருவாசகப் பாடல்களிலும் நாலாயிர திவ்வியப்பிரபந்தத்திலும் தாயுமானவர், இராமலிங்கர், தண்ட பாணி சுவாமிகள் பாடல்களாலும் உணரலாம். பக்திப் பொருளில் பெரும் மாறுதல்களுக்கு இடமில்லையாதலின் வடிவங்களில் புதியன பலவற்றைப் பக்திப்பாவலர்கள் தருகின்றனர். அருணந்தி சிவாச்சாரியாரின் இருபா இருபஃது, சிவப்பிரகாசரின் பிக்ஷாடன நவமணிமாலை, தாயுமானவரின் கண்ணி போன்றன ஒரு சில சான்றுகள்.

### வளர்ச்சி

தங்கள் தங்கள் வழிபடு தெய்வத்தையே முதன்மையான தாகக் கருதும் போக்கு, சித்தர் காலத்தில் இறைவன் ஒருவனே, அவன் யாதுமாகப் பரந்துளான் எனக் கருத்து வளர்ச்சி கண்டுளது.

இப்போக்கே பிற்காலத்தில் இறைவனின் தனித்த திருநாமங் களை ஓதாது, பொதுநிலையில் 'இறைவன்' என்றே அனைத்து மதங்களையும் உள்ளடக்கிப் பாடுவதாக விரிகிறது. ஒரே புலவரே

அனைத்து மதங்களையும் சிறப்பித்துத் தம் விருப்பமாக, எதனையும் முதன்மைப்படுத்தாது அமையும் போக்கும் இதன் பாற்படுவதுவே. இவற்றிற்குச் சான்றாக வேதநாயகம் பிள்ளையின் சர்வ சமய சமரசக் கீர்த்தனங்களையும், மஸ்தான் சாகிபு பாடல்களையும் சுட்டலாம்.

இறைவனைத் தலங்கள் தோறும் சென்று வணங்கிப் பாடிய நிலை தலபுராணங்களின் ஆக்கத்திற்கு வழி வகுத்தது. சிறு சிறு பதிகங்களாகவும், பிற பிரபந்தங்களாகவும் தோற்றம் கண்ட பக்தி யிலக்கியம் பெரிய காப்பியங்களாகவும் புராணங்களாகவும் வளர்ந்தது ஓர் வகை வளர்ச்சியே. முன் நூல்களில் சுட்டாக அமைந்த புராணக் குறிப்புகள் இங்கு விரிவாக விளக்கமாகப்பேசப் படுகின்றன.

தோத்திரமாக அமைந்த பாடல்களுடன், பின் சமயக் கொள்கையைத் தெளிவாக்கும் சாத்திரங்களும் உருவாகியுள்ளன.

ஆழ்வார், நாயன்மார் பாடல்களில் ஆங்காங்கே காணப் பட்ட பிற சமயக் காழ்ப்பு பிற்காலத்தில் கண்டனங்களாகத் தனித்து வளர்ந்துள்ளன. அந்நூல்களில் தம் சமய மேன்மை, கொள்கை விளக்கம் இவற்றுடன், பிற சமயத்தின் குறைபாடு களைச் சுட்டிக் கண்டித்தல் போன்றன அமைகின்றன. ஒரு புறம் சமயப் பொதுமை, பொறுமை வளர்ந்து வர, மறுபுறம் சமயக் காழ்ப்பும் வளர்ந்தது என்பதை இவை காட்டுகின்றன.

உரைநடையிலமையும், இந்நூற்றாண்டில் வளர்ந்து வருகின்ற புனிதப்பயண நூல்கள் இவண் இணைத்து நோக்கற்பாலன. தலபுராணங்கள் இவற்றில் அதிகமாகக் கையாளப்படுகின்றன. தலந்தோறும் சென்று அங்கு உறையும் இறைவனின் பெருமைகளை, அருட்செயல்களை, அருள் பெற்றோரை, இடச்சிறப்பினைப் போற்றுதல் போன்றன இங்குப் பொருளாகின்றன.

### மாற்றம்

இறைவனைத் தலங்கள் தோறும் சென்று வழிபட்டு அடைய முயலும் பக்தியியக்கப் போக்கைக் கண்டித்து, அவன் அவரவர் இதயத்துள் நிறைந்துள்ளார்; அதனை உணர்தலே தேவை எனத் தம் பாடல்களில் வலியுறுத்தும் சித்தர்கள் உருவவழிபாட்டையும், சமயச் சடங்குகளையும் கண்டித்திருக்கின்றனர்.*

---

* சித்தர்பாடல்கள்; த. கோவேந்தன் (பதி); 1976; பாடல் எண் 30, 482,

தனிப்பாடல்களில் சிறப்பாகக் காணப்படும் இறைவனின் நிந்தனையும் (371), புராணங்களுக்கான காரணத்தைத் தம் கற்பனையில் நவில்வனவும் (552) இங்குக் குறிப்பிடத்தக்கன.

தனிப்பாடல் (467), நாட்டுப்புறப்பாடல்* போன்றவற்றில் காணப்படும் சிறு தெய்வ வழிபாடு, பலியிடுதல் ஆகியன இராமலிங்கர் போன்றோரால் மிகுந்த எதிர்ப்பிற்குள்ளாகின்றன. (திருவருட்பா 3472, 5432) பலியிடுதலைத் தண்டபாணி சுவாமிகள் தம் தனிப்பாடற்றிரட்டில் (193-195) தீவிரமாக எதிர்க்கிறார்.

இறைவன் மீது கொண்ட பக்தியைத் தொழிலின் மீது மாற்றுவதை நாட்டுப்புறப் பாடல்களிலமையும் தொழிற் பாடல்கள் தருகின்றன.** போரில் இறந்த வீரர்க்கு ஏற்படுத்திய நடுகல் வழிபாடு, அரசியல் தலைவர்களைத் தெய்வமாக்கும் போக்குடன் இணைத்துக் காணத்தக்கது. நாமக்கல்லாரின் 'காந்தியரே தொழுகின்றோம்' 'சஞ்சலத்தை நீக்குவாய்' முதலான பாடல்கள் அரசியல் தலைவர் தெய்வயாவதற்குச் சான்றாம். பாட்டுடைத் தலைமைக்கு ஏற்பப் பொருட் கூறுகள் இயல்பு மாறுவதால் இவண் சுட்டப்பட்டுள்ளது.

## இயற்கை

அகம், அறம் பொருட்களில் அவற்றைச் சிறப்பித்து விளக்கு தற்கும்; புறம், பக்திப் பொருள்களில் பாட்டுடைத் தலைவரைப் புகழ்தற்கும் பயன்பட்ட இயற்கை, தனிப்பாடல் காலம் முதல் தானும் இலக்கியப் பொருளாகச் சிறப்புற்று வருகிறது.

தனிப்பாடல்களிலும் (264), நாட்டுப்புறப் பாடல்களிலும்*** நாடு நகரங்களைச் சிறப்பிப்பதாக இது அமைகிறது. காப்பியங் களின் பொருட் கூறுகளுள் நாட்டுவளம், நகர்வளம் காட்டலும் ஒன்றாக அமைதல் இங்கு எண்ணத் தக்கது.

இயல்பான நிலையில் வருணனையாக அமைத்தல் இதன் தன்மையாக இன்று காணப்படுகிறது. அதன் சிறப்பினைச் சுட்டிப் பாராட்டுதலாக அமைதலும் உண்டு. காலைப்பொழுது போன்ற பாடல்களால் பாரதியாரால் சிறப்பிக்கப்பட்ட இயற்கை,

* தமிழ் நாட்டுப்புற இயல் ஆய்வு; ப 177
** மேற்படி ப. 16
*** தமிழக நாட்டுப்புறப்பாடல்கள்; முன்சுட்டியது; பா 117

'அழகின் சிரிப்பு' மூலம் பாரதிதாசனை ஒரு இயற்கைக் கவிஞ ராக எண்ணச் செய்கிறது. பாரதிதாசனுக்கு அடுத்த நிலையில் இயற்கையில் ஈடுபாடுடைய கவிஞராகக் கவிமணி (மலரும் மாலையும்: வசந்தம், கடல், இயற்கை) காட்சி தருகிறார். மற்றும்* வாணிதாசன் (ஆறு); சுரதா (மயில்); சோமு (தாமரை தவம்) போன்ற பலரால் பாடப் பெற்றுள்ளது.

இவற்றைத் தொகுத்து நோக்குங்கால், இயற்கை ஆரம்ப காலத்தில் முதற்பொருளைச் சிறப்பிக்கும் துணைப் பொருளாக நின்று; இடைக்காலத்தில் முதற் பொருளாகி நாடு, நகரங்களென விரிந்த பரப்பினை உட்கொண்டு அதன்பின் குறிப்பிட்ட ஒன்றின் பாற்படும் (மயில்—சுரதா) வருணனையாக அமைகிறது எனக் கொள்ளலாம்.

## சமுதாயம்

சமுதாயத்தினைப் பிரதிபலிப்பதாக இலக்கியங்கள் தொடக்க காலத்தில் அமைய இடைக்காலம் முதல் சமுதாயம் பாடற்பொரு ளாக ஆட்சி பெறுகிறது.

இளங்கோவின் ஐவகை மன்றமும், சாத்தனாரின் அமுத சுரபியும், புலவர் சமுதாயத்தைச் சீர்திருத்த எண்ணியதன் விளைவுகளாகும். இவை போன்றன பிற்காலத்தில் பாரதி தாசனின் 'குறிஞ்சித்திட்டு', 'சஞ்சீவி பர்வதத்தின் சாரல்' போன்ற சமுதாயப் புரட்சிக் காவியங்களின் தோற்றத்திற்குத் தூண்டுகோல்கள் எனக் கொள்ளலாம்.

குறிப்பிட்ட இனத்தினர் பற்றி வரும் பிரபந்தங்களில் அவர் கள் சார்புடைய தொழிலும் சிறப்பிக்கப்படுகிறது. குறவஞ்சியில் குறவன் பறவைகளைப் பிடித்தலையும் பள்ளு இலக்கியத்துள் பயிர்த்தொழில் பற்றிய குறிப்புகள் அமைவதனையும் இங்கு எண்ணலாம்.

இவ்வாறு ஒன்றன் பொருட்கூறாக அமைந்த சமுதாயம் குறிப்பிட்ட மரபினரைப் பாடல் என்ற நிலையில் தனிப்பாடல் களில் தோற்றம் கொள்கிறது (நாவிதர் 150; வேளாளர் 186). இந்நிலை இன்று தொழிலாளரைச் சிறப்பிக்கு முகமாகப் பலரால் போற்றப்படுகிறது. பட்டுக்கோட்டைக் கலியாணசுந்தரத்தின்

---

* தமிழ்க் கவிதைகள்; சாலை. இளந்திரையன் (தொகு). 1976.

'இந்த நாள் நிலைமை' எனும் பாடல்* தொழிலாளர் நலம் காண விழைவதாகும். உழைப்பாளர் பெருமையைக் குருவிக்கரம்பை சண்முகம் 'சிவப்பு மலர்கள்' வழிப் புலப்படுத்துவார்.**

சமுதாயச் சிக்கல்களை உணர்த்துதல்; சமுதாய முன்னேற்றம் ஆகியன இன்று சமுதாயப் பாடல்கள் மிகுதியாகப் பயன்படுத்தும் பொருட்கூறுகளாகும். பாரதி சமுதாயச் சிக்கல்களில் முதலிடத்தைப் பெண்விடுதலைக்கும், முன்னேற்றத்திற்கும் பயன்படுத்துகிறார். (பெண் விடுதலைக்கும்மி, புதுமைப் பெண்)

சமுதாயச் சீர்திருத்தம் என்பது பாரதிதாசன் பாடல்களில் உயிராக நின்றிலங்குவதை, தமிழர் எழுச்சி, மூடநம்பிக்கை ஒழிப்பு, பெண் முன்னேற்றம், வறுமை ஒழிப்பு, தொழிலாளர் முன்னேற்றம், சாதியொழிப்பு எனப்பல பொருட் கூறுகளில் அமைந்திருக்கும் அவர் பாடல்கள் உணர்த்துகின்றன.***

சமுதாயச் சிக்கல்களில் கவிமணி, கருத்துச் செலுத்துவதைப் பல பாடல்களில் பெறலாம். தீண்டாமை (தீண்டாதார்பாட்டு); வேலையின்மை (வேலையில்லாத் திண்டாட்டம்); மது (மதுவிலக்குப் பாடல்கள்); சமுதாய ஏற்றத்தாழ்வுகள் (ஏழைச் சிறுமியர் மனப்புழுக்கம்) முதலியவற்றைத் தம் மலரும் மாலையும் நூலுள்காட்டியுள்ளார். குறிப்பிட்ட இனத்தவரிடையே எழும் சமூகச்சிக்கல்களை இலக்கியத்தால் தீர்க்க முடியும் என்பதைத் தம் மருமக்கள்வழிமான்மியத்தால் உறுதிப்படுத்தியவர் கவிமணி. இந்நூல்நாஞ்சில் நாட்டு வேளாளரின் மருமக்கள் தாயத்தை எதிர்த்துப்பாடி வெற்றி கண்டதாகும்.

வரதட்சணைக் கொடுமையை ஆனந்தம் 'பிழைதிருத்தம்' எனும் பாடலில் காட்டுகிறார்**** சிற்பியின் 'வாத்தியார் வேலை'யும், கோ. மோகனரங்கனின், 'சாக்காட்டின் மூலையிலே' *****பாடலும் சமுதாயத்தின் போக்கினை உரைக்கின்றன.

சமுதாயநிலை, சிக்கல், தீர்வு, முன்னேற்றப்பாதை போன்றவற்றிற்குப் புதுக்கவிதைகள் இன்று மிகுந்த சிறப்பளிக்கின்றன.

---

* மேற்படி

** மேற்படி

*** பாரதிதாசன் பன் மணித்திரள்; 1964

**** தமிழ்க்கவிதைகள் நூல்

***** மேற்படி

### படைப்பாளர்

இலக்கியப் படைப்பாளரைப் பாடுபொருளாகக் கொள்வன இதன் பாற்படும். இது இரு நிலைகளில் அமைகிறது. தன்னைக் கவர்ந்த புலவரைச் சிறப்பித்தல் ஒன்று; தன்னையே முதன்மைப் படுத்துதல் மற்றொன்று.

தன்னைக் கவர்ந்த புலவரின் பெருமையை, அவர்தம் பாடற் சிறப்பைக் கூறுதல் முதனிலையின் பாற்படும். சம காலத்தவரையும் இவ்வாறு பாடுதல் காணப்படுகிறது. பிரபந்தங்கள் போற்றும் பொருட்களுள் இதுவும் ஒன்றாம் (குளத்தூர்க் கோவை —மீனாட்சிசுந்தரம்பிள்ளை). தனிப்பாடல்களுள்ளும் இதனைக் காணமுடிகிறது (613).

கம்பரும் (கம்பன் பிள்ளைத்தமிழ்—நா. கனகராஜ ஐயர்) வள்ளுவரும் (திருவள்ளுவர்—கவிமணி) பலரால் போற்றப்படும் புலவராகின்றனர். கண்ணதாசனின் கம்பசூத்திரமும்* கவிமணியின் இலக்கியப் பஞ்சகமும் (மலரும்மாலையும்) இலக்கியங்களைச் சிறப்பிப்பனவாக அமைதற்குச் சான்றாம்.

தம் ஒத்த காலப் புலவரைப் புகழ்வது மட்டுமின்றி, அவர் வேண்டாராயின் அவரை இகழும் போக்கினையும் தனிப்பாடல்கள் (339) தருகின்றன.

புலவர் தம்மைத் தாமே பாடிக் கொள்ளும் பொழுது வாழ்க்கை வரலாற்றுக் குறிப்புகள் (தனிப்பாடல் 10) முதலிடம் பெறுகின்றன. சங்க விலக்கியத்துள் ஒரு சில பாடல்களிலும் (புறம். 162); பக்திப்பாடல்களில் ஓரளவு அதிகமாகவும் (தேவாரம் நான்காம் திருமுறை முதற் பதிகம்) இவை காணப்பெறுகின்றன.

கொள்கைகளைச் சிறப்பித்தல் இதன் மற்றொரு கூறு ஆகும். தற்காலப் பாடல்களில் இது அதிகமாகக் காணப்படுகிறது. நாமக்கல் கவிஞரின் 'ஆயுத பலத்தை நம்பாதே' பாடல் சான்று. இக்கொள்கைச் சிறப்பித்தல் அல்லது விளக்கல் என்பது தம்முடைய சொந்தக் கொள்கையாக அல்லது தாம் சார்ந்த கூட்டத்தின் கொள்கையாக அமைகிறது. காப்பியத்தின் இடை தோன்றி புலவர் தம் கொள்கைகளை வெளியிடலுடன் இது இணைத்து நோக்கத்தக்கது. (சிலப்பதிகாரம். 30:185—202)

---

* கண்ணதாசன் கவிதைகள்—ஐந்தாவது தொகுதி: 1972.

தம் அற்புதச் செயல்களைப் பாடல் (தனிப்பாடல். 505); கல்வியிற்பெரிய கம்பன் கூட அவையடக்கம் பாடி. நூலைத் தொடங்கிய மரபினை மாற்றித் தம்மைத்தாமே வியந்து கொள்ளல் (தனிப்பாடல்278); தமக்குத் தீங்கு செய்தாரை நிந்தித்தல் (தனிப்பாடல்279) ஆகியனவும் இங்கு அமைகின்றன.

தம்மையே பாடு பொருளாக்கித் தம்நிலை உணர்த்தலாகக் கண்ணதாசன், ‘வெள்ளிவிழா’, ‘தனிவழிப்பயணம்’, ‘காலக் கணிதம்’ ‘நினைக்கத் தெரிந்த மனமே’ போன்று பல பாடல்களை யாத்துள்ளார்* இதனை அவரின் தனிச்சிறப்பாகவும் கொள்ள லாம். இவர்தம் பயணக் குறிப்புகளும் ஆங்காங்கே, ‘பினாங்கு கண்டேன்’, ‘அழகிய சிங்கபுரம்’ என்பன போன்று கவிதைஉருக் கொள்கின்றன.**

நாட்டுப்புறப் பாடல்களில் தன்னுடைய ஏக்கங்களையும் குமுறல்களையும் வெளியிடுவதாக அமையும் தன்னிரக்கப் பாடல் களை இங்கு எண்ணலாம்.***

## போற்றல்

புரவலரை, இறைவனைப் போற்றுதலாகப் பொருட் கூறு நிலையில் அமைந்த ‘போற்றல்’ இடைக்காலத்தில் பொருளாக வளர்ச்சி பெற்றுள்ளது. இயல்பான நிலையில் ஒருவரின் சிறப் பினைப் பாராட்டுதல் இங்கு அமைகிறது. ஈகை, கல்வி, வீரம், தொழில், செயல் எனப்பல நிலைகள் போற்றுதற்குக் காரணமாக அமைகின்றன. போற்றுதலுக்குரியோர் பெரியோராகத்தான் இருக்கவேண்டும் என்பதில்லை. தமக்கு உதவியளித்தார் யாராயினும் அவருக்கு நன்றி கூறுமுகமாகப் பாராட்டல் இவண் இடம் பெறுகிறது (தனிப்பாடல்19). பாரதிதாசன் பாடியுள்ள போற்றல் பாடல்கள் புகழ்மலர்களாகத் தொகுக்கப்பட்டுள்ளமை குறிப்பிடற்பாலது. வளர்ந்துவரும் பொருட்கூறுகளுள் இதுவும் ஒன்றாம்.

## வாழ்த்து

அகம் (ஐங்குறுநூறு6); புறம் (புறம்2) ஆகியவற்றில் துணைப் பொருளாகவும்; பக்தியுள் அதன் பொருட் கூறுகளுள் ஒன்றாகவும்

---

* மேற்படி

** மேற்படி

*** தமிழ் நாட்டுப்புற இயல் ஆய்வு; ப. 171

விளங்கும் வாழ்த்தினைத் (திருவாசகம், திருச்சதகம் 15), தமக்கு உதவி செய்தாரை வாழ்த்திப்பாடுதல் எனத் தனிப்பாடலில் விரித்தனர். இதனை நாட்டுப்புறப் பாடல்கள் திருமணவிழா போன்ற நிகழ்ச்சிகளை வாழ்த்துதற்கும் கொண்டன. இன்று அதிகமாகப் போற்றப்படும் பொருள்களில் ஒன்றாகவும் அமைகிறது.

பொதுவாக, வாழ்த்துப் பொருள், பெரியோர், நிகழ்ச்சி, படைப்பு என மூன்று நிலைகளில் அமைவதாகக் கொள்ளலாம். சமுதாயத்தில், அரசியல், சமூகம், கலை, அறிவியல் எனப் பல்வேறு துறைகளில் சிறப்புற்றோரை வாழ்த்துதல் பெரியோர் வாழ்த்தாகும். இவர் தம் அரிய செயல்களைப் பாராட்டி வாழ்த்துவதாக இது அமைகிறது. பாரதியின் 'வாழ்க திலகன் நாமம்' போன்றன சான்று. தனிப்பட்ட மனிதரை மட்டும் வாழ்த்துவதாக அமையாது ஒரே கொள்கையின் கீழ் கூடிய குழுவினை (தமிழரசுக் கழகத்திற்கு வாழ்த்து—நாமக்கல் கவிஞர்) வாழ்த்துவது இங்கு எண்ணத்தக்கது.

திருமணம், பிறப்பு போன்ற சிறப்பு நாட்களில் அதற்கு உரியாரை வாழ்த்துதலும், பொதுக்கூட்டம் நடத்துவாரை வாழ்த்துதலும் பொங்கல் முதலான விழா நாட்களில் வேண்டியவரை வாழ்த்துதலும் என நிகழ்ச்சி வாழ்த்து அமைகிறது. அவ்வவற்றிற்கு ஏற்றபடி அந்நிகழ்ச்சிகள் சிறப்பாக நடந்தேறவும், அவற்றின் நோக்கம் நன்கு நிறைவேறவும் வாழ்த்துவது இதன் பொருளாகிறது. பாரதிதாசன் பாடியுள்ள 'காதணி விழா வாழ்த்து', சென்னை மாகாணத் தமிழாசிரியர் மூன்றாவது மாநாட்டுக்கு அனுப்பிய வாழ்த்து போன்றன* எடுத்துக் காட்டுகள்.

ஒருவர் அல்லது பலர் இணைந்து உருவாக்கிய ஒன்றினை, அது இலக்கியமாகவோ அல்லது வேறு ஏதேனும் ஒன்றாகவோ அமைதலை, வாழ்த்திப் பாடுதல் படைப்பு வாழ்த்தாகிறது. ஒருவர் நூலுக்கு ஒருவர் வழங்கும் வாழ்த்தாக அமையும் சிறப்புப் பாயிரம், சாற்றுக்கவி ஆகியன இங்கு நோக்கத்தக்கன. கவிமணி, புதுமைப்பித்தன் நினைவு மலர்; தேரூர் நூல் நிலையம், தில்லைப் பொருட்காட்சி போன்றவற்றிற்கு வழங்கியுள்ள வாழ்த்துப் பாக்கள் சான்றாக அமைகின்றன. கவிமணியை ஒரு வாழ்த்துக் கவிஞர் என்று கூறுமளவிற்கு அவரது 'மலரும் மாலையும்' கவிதை தொகுப்புள் பல்வகை வாழ்த்துகள் உள.

---

* நாள் மலர்கள்; பூம்புகார் பிரசுரம்: 1978.

## வசை

போற்றுதலுக்கும், வாழ்த்துதலுக்கும் சிறப்பளித்த தமிழிலக்கியத்துள் வசையும் பாடற்பொருளாகத் தனிப்பாடற் கவிஞரால் புகுத்தப்பட்டுள்ளது (184, 463). பாட்டுடைத் தலைவரை, அவர்தம் தாழ்வு குறித்து இகழ்ந்துரைப்பதனைப் பொருளாகக் கொண்டவை இதன் கண் அமைகின்றன. தொல்காப்பியத்தின் அங்கதம் பற்றிய கூற்று இதன் தோற்றக்காரணி எனலாம். சங்கவிலக்கியத்துள் பெண்கொலை புரிந்த நன்னன் போன்றோர் இகழ்ச்சிதோன்றக் குறிக்கப்பட்டுள்ளமை (குறுந்தொகை 292), தம் சினத்திற்குட்பட்ட புரவலரைப் புலவர் புறக்கணித்தமை (புறம்206) போன்றவற்றைக் காணலாம். 'வசைக்குக் காளமேகம்' எனும் மொழியும்* பத்தொன்பதாம் நூற்றாண்டில் புலவர்பலர் வசைபாடுதலில் சிறப்புற்றோராகக் குறிக்கப்பட்டிருப்பதும் (அவிநாசிப்புலவர், இராமலிங்கத் தம்பிரான், சரவணப் பெருமாள் கவிராயர், வேலாப் போடியார்) சுட்டற்பாலன.

## அரசியல்

இந்நூற்றாண்டில் செல்வாக்குப் பெற்றுவரும் பொருட்களுள் இதுவும் ஒன்றாம். சமுதாயத்தை இயக்கும் குழுவும் அதனுடன் தொடர்புடைய அதன் கொள்கை போன்றனவும் இலக்கியத்துள் இடம்பெறும் பொழுது அரசியல் பொருளாகிறது. பாரதிதாசன், கண்ணதாசன் பாடல்களில் அதிகமாகக் காணப்படுகிறது. பாரதிதாசனின் 'வேங்கையே எழுக' எனும் கவிதைத் தொகுப்பின் பல பாடல்கள் இதன் பாற்படுவதாகும். (ஆளவந்தார்க்கு இறுதி எச்சரிக்கை) கண்ணதாசனின் 'கழக மகா காவியம்' பாடல் அவர் அரசியற் பொருளை எடுத்தாளுதற்குச் சான்று பகர்கின்றது. வா. மு. சேதுராமனின் 'இருபது கட்டளைகள்' எனும் நூல் அரசியற் கொள்கை விளக்க படைப்பிற்குச் சான்றாம். தாம் சார்ந்த கழகத்திற்கு ஆதரவு தேடித் தரல், அதன் கொள்கை விளக்கல், பிறவற்றை எதிர்த்தல் எனும் நிலையில் இப் பொருள் அமைகின்றது.

## தேசியம்

தம்முடன் வாழ்வோரிடையே உடன் பிறப்புணர்வு கொள்ளுதல்; பின்பற்றி வரும் மரபு, பண்பாடு ஆகியவற்றின்மீது பெருமை கொள்ளுதல்; பொதுவான குறிக்கோள்களிடையே விழிப்புணர்வு

---

* பெருந்தொகை; மு. இராகவையங்கார் (தொகு;) 1936; பாடல் எண் 1804.

கொள்ளுதல் அல்லது இவற்றை உருவாக்குதல் எனும் நிலையில் அமையும் பாடல்கள் தேசியப் பொருளாகின்றன.

நாட்டுப்பற்று இதன் தோற்றுவாயாகும். இது ஒரு குழுவினைப் பற்றியவை—சமுதாயம்; பல்வேறு வகையான குழுக்கள் இணைந்த நாட்டினைப் பற்றியவை—தேசியம் என இவற்றை வேறுபடுத்திக் காட்டலாம்.

இதனைத் தமிழிலக்கியத்தில் பெருமைப்படுத்தியவராகப் பாரதி திகழ்கிறார். இவரது பாரதநாடு, பாரத தேசம், சுதந்திர தாகம் முதலான பாடல்கள் சான்றாம். மற்றும் கவிமணி (தேசக் கொடியின் சிறப்பு); நாமக்கல் கவிஞர் (தேசபக்தர் திருக்கூட்டம்); கண்ணதாசன் (நாடு பகைவர்கோ) போன்றோரும் தம் படைப்புகளில் இதனைச் சிறப்பித்துள்ளனர். காப்பியங்களிலும் இப்பொருள் பொதிந்திருப்பதைக் காட்டுவர்.*

## மொழி

ஆங்காங்கே தொடர்கள், ஒரு சிலக் கவிதைகள் மூலம் சிறப்பு பெற்ற மொழிப்பற்று, பிற்காலத்தில் இலக்கியப் பொருளாக ஏற்றம் பெற்றுள்ளது. மொழியினை வாழ்த்துதல் (தமிழ்மொழி வாழ்த்து—பாரதியார்); போற்றுதல் (தன்னேரில்லாத தமிழ்—பாரதிதாசன்) துதித்தல் (தமிழ் மணிமாலை—நாச்சி குளத்தார்); அதன் பெருமையைப் பேசுதல் (தமிழலங்காரம்—தண்டபாணி சுவாமிகள்) எனும் கூறுகள் இப்பொருளுள் அடங்குகின்றன.

பாரதியார் கண்ணன் பாடல்களில் கண்ணனைத் தந்தை, தோழன் எனப் பல நிலைகளில் கண்டமை போன்று தமிழினையும் பார்த்து அதற்கேற்றவாறு அவ்வவ் நிலைகளில் நின்று போற்றுதல் இங்குச் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கது. சான்றாக, தமிழ்

---

* ‘‘மும்மைத் தமிழகத்தையும் மூவேந்தரையும் பாடி அரசியல் ஒற்றுமை திகழும் தேசியத்தைக் காட்டினார் இளங்கோ. சமுதாயச் சீர்திருத்தத்தைப் பாடி ஏழைத் தேசியத்தைக் காட்டினார் சாத்தனார். கங்கை முதல் இலங்கை வரை பரவிய மானுடப் பண்புகளின் பொதுமையைக் கம்பரும், புறத் தோற்றத்தை, சாதிப் பிறப்பினை, பதவிப் பெருமையை நோக்காமல், அன்பினால் வணங்கித் தன் மறுப்பு, தன்னடக்கத்தால் தொண்டு செய்து நிறைவும் இன்பமும் காணும் ஆன்மீக வீரப் பொதுமையைச் சேக்கிழாரும் பாடி, தேசியத்தில் அக வளர்ச்சியைக் காட்டினார்’’.

—சுப, அண்ணாமலை; பன்னிரண்டாம் திருமுறை; தெய்வத் தமிழ்; ந. சஞ்சீவி (பதி); ப. 235.

என் மனைவி*, தமிழ் என் தந்தை** எனும் பாடல்களைச் சுட்டலாம். 'தமிழே எல்லாம்' எனும் நூலுள் தமிழ் 32 நிலைகளில் போற்றப்படுவது*** நவிலத்தக்கது.

தம் மொழியைச் சிறப்பித்தற்காக, அதன் எதிர் மொழியை இகழ்ந்துரைத்தலையும் இங்கு நினைக்கலாம்.****

### காட்சிப் பொருள்

தம் கண்ணையும் கருத்தையும் கவர்ந்த, இயற்கையல்லாத பொருட்களை வியந்து பாடுதல் இதன் பாற்படும். நாட்டுப்புறப் பாடல்களில் காணப்படும் மோட்டார் வண்டி, ரெயில்வண்டி, ஆகாயவிமானம், மின் நிலையம், அணைக்கட்டு போன்றவை பற்றிய பாடல்கள் எடுத்துக்காட்டாக அமைகின்றன.***** இன்று வளர்ந்து வரும் வருணனையிலக்கியத்துடன் இதனை இணைத்து நோக்கலாம்.

### நிகழ்ச்சி

ஒவ்வொரு நாளும் பலரையும் கவரும் வகையில் சில நிகழ்வுகள் ஆங்காங்கே நிகழ்கின்றன. அவற்றைப் பாடற் பொருளாக்கிச் சிறப்பிக்கின்றனர் புலவர். நிகழ்வின் இன்பமோ துன்பமோ புலவரைப் பாதிக்கும் பொழுது இத்தகு கவிதைகள் முகிழ்க்கின்றன. அவை இயல்பானதாகவோ, சிறப்பு விழவாகவோ, அன்றி வரலாற்றுச் சிறப்புப் பெற்றனவாகவோ அமையலாம்.

இதில் நிகழ்வு பற்றிய, கவிஞரின் எண்ணங்கள் பொருளாகச் சிறப்புறுதலின், இது தனித்த பொருளாக இங்கு மேற்கொள்ளப் பட்டுள்ளது. நிகழ்ச்சிக்குரியவர்களைவிட, நிகழ்ச்சியும் அதன் விளைவும் இங்கு முதன்மை பெறுகின்றன.

நாமக்கல் கவிஞரின் 'வடநாட்டில் கொடுமை' (நவகாளி அட்டூழியத்தின்போது பாடியது) எனும் பாடல் சான்றாகும்.

---

* முடியரசன்; தமிழ்க் கவிதைகள்.

** முடியரன்; பாமாலை.

*** கரு. நாகராசன்; தமிழே எல்லாம்; 1980.

**** இந்தி எதற்கு?; பாரதிதாசன்; வேங்கையே எழுக; 1978; பக். 126.

***** தமிழக நாட்டுப்புறப் பாடல்கள்; பக். 106-109.

அன்றன்று நடக்கும் நிகழ்வுகளைக் கவிதை புனைவதில் விருப்புடையவர் பாரதிதாசன் என்பதனை அவரது 'நாள் மலர்கள்' தொகுப்பு உணர்த்துகிறது.

### வரலாற்றுப் புலனவு

வரலாற்றுக் குறிப்புகளை இயல்பாக அல்லது கற்பனை நயத்துடன், கதையுடன் கூடியதாகப் படைத்தலை இது சுட்டும். கவிமணியின், 'அன்பின் வெற்றி', 'ஓர் இராணியின் சாபம்' போன்றன சான்றுகள் (மலரும் மாலையும்). செகவீர பாண்டியனாரின் 'வீரபாண்டியம்' (பாஞ்சாலங்குறிச்சி வீரகாவியம்) போன்ற காப்பிய வடிவும் இதனுள் அமைதல் உண்டு. இது போன்றவற்றில் வரலாற்றுத் தலைவனின் பண்பும் செயல்களும் 'வெற்றியும் விளக்கம் பெறுகின்றன.

நாட்டுப்புற விலக்கியத்தில் அமையும் 'கான் சாகிபு கதை', வீணாதிவீணன் கதை'; 'ஐவர் ராசாக்கள் கதை' போன்ற கதைப் பாடல்களும் இதன் பாற்படுவன.

### புதிய கொள்கைசார் கற்பனை

ஏதேனும் ஒரு கொள்கையின் அடிப்படையில் தாம் காண விரும்பும் சமுதாயத்தினை, அது நடைமுறைக்கு ஒவ்வுமா, ஒவ்வாதா என்பது பற்றிக் கவலாது முழுமையும் நல்லவற்றால் ஆட்கொள்ளப்பட்டு இன்பம் ஒன்றினையே காண்பதாக அமையும் கற்பனையைப் புலவர் சிலர் தம் பாடற்குப் பொருளாக்கியுள்ளனர். பாரதியின் 'போகின்ற பாரதமும் வருகின்ற பாரதமும்', 'கற்பனையூர்' ஆகிய கவிதைகளும், கே. சி. எஸ். அருணாசலத்தின் 'வெற்றிப் பயணம்' எனும் கீதமும்* இதற்குச் சான்று பகருகின்றன.

உலகிலும், சிறப்பாகப் பாரதத்திலும் நடைபெற்ற வரலாற்று நிகழ்வுகளைக் கருத்துட் கொண்டு, எதிர்காலத்தில் எப்படி இருப்பின் மானிட சமுதாயம் நலம் பெறும் எனத்தாம் கனவு காணும் உலகினைக் காட்டுவதாகக் கவியோகி சுத்தானந்த பாரதியார் படைத்துள்ள 'பாரத சக்தி மகா காவியம்' எனும் பெரும் நூலும் இங்குக் குறிக்கத்தக்கது.

புலவர் தாம் வாழும் சமுதாயத்தின்பாற் கொண்ட எதிர்பார்ப்புகள் நிறைவேறாமை; சமுதாயத்திடம் மனநிறைவின்மை

* தமிழ்க் கவிதைகள் நூல்.

போன்றன இதற்கு அடிப்படையாக அமைகின்றன எனலாம். கம்பன் கண்ட கோசலம் இவ்வகைப் பாடல்களுக்கு வித்து எனக் கருதலாம்.

### செய்யுள் இலக்கியச் சிறப்புக் கூறுகள்

ஒரு நூல் நுவலும் பொருளுக்கு எதிராக, அதனை மறுத்து எதிர் நூல் படைத்தலை நீலகேசி உணர்த்துகிறது. இது, பௌத்த காவியம் குண்டலகேசிக்கு மறுப்பாக அதனை எதிர்த்து எழுந்த தாகும்.* புலவர் குழந்தை படைத்த இராவண காவியம், இராமாயணத்திற்கு எதிர்ப்பாகத் தோன்றியதாகும்.

ஓர் இலக்கியத்தின் பொருட் கூறுகளைத் தம் கொள்கைக்கு ஏற்றாற்போல் மாற்றி அமைத்துக் கொள்வதும் சுட்டற்பாலது. பாரதிதாசனின், 'கண்ணகி புரட்சிக் காப்பியம்' சான்று.

ஒன்றன் பொருள், பிறிதொரு இலக்கியமாக விரிதற்குப் பயன்படலையும் பரவலாகக் காண முடிகிறது. சிவனின் திருவிளையாடல்களை விளக்குவதாக அமையும் கல்லாடம், பிற்காலத் திருவிளையாடல் நூல்களுக்கு அடிப்படை எனலாம். திருத்தொண்டத்தொகை, திருத்தொண்டர் திருவந்தாதி ஆகியன பெரிய புராணத்தின் தோற்றக் காரணிகளாக அமைதலும் கூறத்தக்கது.

புதுமைவிழைவும் புலமைப் போட்டியும் சூழலும் தோற்று வித்த புலமை விரிவால் தமிழிலக்கியம் பெரும்பயன் பெற்றுள்ளது. தற்காலம் அதில் செழித்து வளர்ந்து வருகிறது. இன்று விரைந்து சமுதாயத்தைக் கவர்ந்து கொண்டிருக்கும் புதுக்கவிதைகள், ஹைக்கூக் கவிதைகளின் பொருட்களும் இணைத்து ஆராயத் தக்கன.

### உரைநடையிலக்கியம்

உரைநடையின் விதையினைத் தொல்காப்பியத்துள்ளும் (பொருள் 475); அதன் முளையினைச் சிலப்பதிகாரத்துள்ளும் (ஆய்ச்சியர்குரவை உரைப்பாட்டு மடை. கருப்பம்) காணலாம். பின் எழுந்த சம்பு காவியங்களும் இங்கு எண்ணத்தக்கன. வீரமா முனிவரின் 'பரமார்த்தகுரு கதையில்' தளிர்க்கத் தொடங்கிய உரைநடை, பத்தொன்பதாம் நூற்றாண்டின் காலச் சூழலில் தன் எழுச்சியைக் காட்டித் தொடர்ந்து வளர்ந்து வருகிறது.

---

* பொ. வே. சோமசுந்தரன்; நீலகேசி; கழகம்; 1973; ஆராய்ச்சி முன்னுரை

உரைநடையிலக்கியப் பகுப்பு

உரைநடையிலக்கியத்தை அதன் பொருள் தன்மையில் மூன்று வகையாகப் பிரிக்கலாம்.

முன்னுரை

1. இயல்பியல்
2. புனைவியல்
3. இயல்புப் புனைவியல்.

### இயல்பியல்

உண்மை நிகழ்வுகளின் தொகுப்பினை, இலக்கியச் சுவைபடத் தருவன இதன் பாற்படும். இதனுள் வாழ்க்கை வரலாறு, பயண இலக்கியம் இரண்டும் இடம் பெறுகின்றன.

### வாழ்க்கை வரலாறு

தன் வரலாறு, பிறர் வரலாறு என இரு வகைப்படுகிறது. தன் வரலாறு என்பது ஒருவர் தம் வரலாற்றைத் தாமே உரைத்த லாகும். மற்றவரின் வரலாற்றினைப் பேசுதல் பிறர் வரலா றாகும். அமைப்பால் இவை வேறுபட்டு நிற்கின்றன. இதன் தோற்றம், வளர்ச்சி முதலானவற்றைத் 'தமிழ் வாழ்க்கை வரலாற் றிலக்கியம்' நூலுள் விரிவாகக் காணலாம்.* இவ்வகையின் பொருட் பகுப்பாய்வும் அதனுள் விரிவாகக் காட்டப்பட்டுள்ளது.

ஒருவர் வாழ்வில் நிகழ்ந்த முக்கிய நிகழ்வுகளை, அவற்றின் சிறப்பு வெளிப்படும்படி. காலக் குறிப்புக்கும் பெருமையளித்து, கோவைப்படுத்தி யுரைக்குங்கால், அவற்றினூடே அவர் பண்பு மிளிரும்படி அமைத்தல் இதன் பொதுவான பண்பாகும்.

வரலாற்றுத் தலைவரின் நாட்குறிப்புகள், அவர் பற்றி அவருடன் வாழ்ந்தவர், குறிப்பிட்ட நிகழ்வின்போது அதில் பங்கு கொண்டவர் அல்லது உடனிருந்தவர் போன்றோர் தரும் குறிப்பு கள்; அவர் பற்றிய மற்றவரின் எண்ணங்கள்; குறிப்பிட்ட துறை யில் அவர் பெற்ற செல்வாக்கு; பெற்ற வெற்றிகள் போன்றன இதன் ஆக்கத்திற்குத் துணை நிற்கின்றன.

---

* ச. சிவகாமி; தமிழ் வாழ்க்கை வரலாற்றிலக்கியம்; உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்; 1986.

வரலாற்றுத் தலைவர் எத்துறையினரோ அத்துறை பற்றிய செய்திகள் அதிகமாக இடம் பெறுகின்றன. சான்றாக அவர் அரசியல்வாதியாயின் அரசியலில் அவரது வெற்றிகள் சிறப்பிக்கப் படுகின்றன; அறிவியல் அறிஞராயின் கண்டுபிடிப்புகளின் விளக்கங்கள், அதற்கு அவர் பட்ட இன்னல்கள், வெற்றி பெற்ற முறை போன்றன தரப்படுகின்றன.

வாழ்க்கை வரலாற்று நூல்களில் ஓரளவு முழுமையான வரலாறு எதிர்பார்க்கப்படினும் குறிப்பிட்ட தலைவருக்குச் சிறப் புடையதாகக் கருதப்படும் ஒரு பகுதி வாழ்க்கையினை அல்லது எழும் நோக்கத்தினை நிறைவு செய்வதாக அமையும் வாழ்க்கைப் பகுதியினை மட்டும் படைத்தலும் உண்டு. சி. ஞானமணியின் ‘எழுத்தாளர் ம. பொ. சி.’இத்தகையதே. இதனுள் வரலாற்றுத் தலைவரின் எழுத்துலகு மட்டுமே சிறப்புப் பெறுகிறது.

சோ. சிவபாதசுந்தரத்தின் ‘கௌதம புத்தர் அடிச்சுவட்டில்’ என்ற நூல் இதனுள் புதுமை விருந்தாம். வரலாற்றுத் தலைவரின் வரலாற்றை, அவருடன் தொடர்புடைய அனைத்து இடங்களுக் கும் பயணம் செய்து குறிப்புகள் திரட்டி, வரலாற்றுடன் தம் பயண அனுபவத்தையும் இணைத்திருப்பது இதன் சிறப்பு.

பெரியோர் வாழ்வுடன் அவர்தம் அனுபவ மொழிகளையும் இணைத்துத் தரும் போக்கை, கே. எஸ். லெட்சுமணனின் ‘மேதைகளின் வாழ்வும் வாக்கும்’ போன்ற நூல்களில் காணலாம்.

பெரியோர் வாழ்வினை, கொள்கைகளை, அறிமுகம் செய்யும் வகையில் ஓரிரு நிகழ்வுகளை, குறிப்புகளை மட்டுமே சுட்டிச் செல்லும் சுருங்கிய அமைப்பினையும் இதனுள் காணலாம்.

உரைநடையிலக்கிய வகையைச் சார்ந்ததாகக் கருதப்படினும் வாழ்க்கை வரலாற்றில் கவிதை (பாரதிஅறுபத்தாறு-பாரதி); புதுக்கவிதை (கவிராஜன் கதை-வைரமுத்து); காப்பியம் (மனித தெய்வம் காந்தி காதை-அரங்க சினிவாசன்) நாடகம் (குணங்குடி மஸ்தான் வரலாறு—குணங்குடிதாசன்); கடிதம் (அவள் பிரிவு—வெ. சாமிநாதசர்மா) எனும் வடிவங்களும் அமைகின்றன.

கண்ணதாசன் தம் வரலாற்றைப் படர்க்கை நிலையிலிருந்து ‘வனவாசமாக’ப் படைத்திருப்பது குறிப்பிடற்பாலது. மிகவிரி வாகத் தம் வரலாறு படைக்கும் பொழுது தம்முடன் தொடர் புடையோரின் வரலாற்றையும் ஓரளவுச் சுட்டிச் செல்லல் தவிர்க்க இயலாததாகிறது.

நாட்குறிப்புகள், நினைவுக் குறிப்புகள், போன்றனவும் இதனுடன் இணைத்து நோக்கத்தக்கன. இவை தமிழுள் சிறப்பான வளர்ச்சி பெறவில்லையாயினும், எதிர்காலத்தில் சிறப்புறும் என்பதற்கான அறிகுறிகளை உ. வே. சாமிநாதையரின் 'நினைவு மஞ்சரி' ஜெயகாந்தனின் 'நினைத்துப் பார்க்கிறேன்' போன்றவற்றால் உணரலாம்.

## பயண இலக்கியம்

ஏதேனும் காரணம் பற்றி ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட இடங்களுக்குச் சென்றோர் அங்குத் தான் பெற்ற அனுபவங்கள், கண்டவை, கேட்டவை, உணர்ந்தவை முதலானவற்றைப் பிறருக்கும் பயன்படும் பொருட்டுச் சுவைபட அமைத்தல் பயண இலக்கியமாகும். இவற்றை உணர்த்திக் கொண்டு வருங்காலை, அவற்றினூடே அவர் சென்ற நோக்கத்தின் நிறைவேற்றமும் இலைமறைகாயாய்ப் பின்னப்பட்டிருக்கும்.

சென்ற இடத்தின் புதுமைகள், மரபுகள், பழக்க வழக்கங்கள், நம்பிக்கைகள், சிறப்பு வாய்ந்த வரலாற்றுக் குறிப்புகள் மற்றும் பொதுவான சமுதாய நிலை முதலானவற்றையும் இதனுள் அறியக் கூடுமாதலின் பொதறிவிலக்கியமாகவும் இது திகழ்கிறது. வாழ்க்கை வரலாறு தனிப்பட்ட மனிதரின் பண்பினை, சிறப்பினை உணர்த்துகிறது என்றால் இவை ஒரு நாட்டினரின், ஓரினத்தவரின் பண்பினை, சிறப்பினை அறிவிப்பனவாக விரிகின்றன.

ஆற்றுப்படைகளில், ஆற்றுப்படுத்துவோர் தலைவனை அடைவதற்குரிய வழிகளைப் பற்றிப் பேசுவதனைப் (மலைபடு கடாஅம் 95-190) பயண இலக்கியக் கூறின் தோற்றமாகக் கருதலாம். காப்பியங்களில் பல வழிச் செலவுகள் அமையக் காண்கின்றோம். சீதையைத் தேடிச் செல்லும் அனுமன் குழுவினரின் பயணத்தைச் சான்றாக்கலாம் (கம்பராமாயணம்—கிட்கிந்தா காண்டம்—ஆறு செல்படலம்).

பயண அனுபவங்கள் பற்றிய சிறு சிறு கட்டுரைகள் முதலில் தோற்றம் காட்ட,* முழுமைப்படுத்தித் தந்தவர் சேலம் பகடாலு நாயுடு ஆவார். இவரது 'ஸ்ரீ ஆரிய திவ்ய தேச யாத்திரை சரித்திரம்' முதல் பயண இலக்கியம் எனும் சிறப்பைப் பெறுகிறது.

---

* தமிழ்நாடு (பயணக்கட்டுரைகள்): ஏ. கே. செட்டியார் (தொகு); 1968,

இறைவனின் திருத்தலங்களுக்குச் செல்லுதல்*; பொழுது போக்காகப் பலவிடங்களையும் கண்டு அவற்றின் இன்பங்களைப் பெறல்**, தொழில் வளம் காணச் செல்லுதல்;*** பிறநாட்டவரின் பல்வகைக் கலாசாரங்களையும் அறிதல்**** ; கல்வி கற்கச் செல்லுதல் பிறர் அழைப்பை ஏற்றுச் சிறப்பு விருந்தினராகச் செல்லுதல்***** என்பன நோக்கங்களாக அமைகின்றன. இவை நூலுள் அவற்றிற்கேற்றபடிச் சிறப்பு பெறுகின்றன.

ஒருவரின் பயண அனுபவத்தை உடனிருந்த மற்றவர் எழுதும் புதுமையை எம். எஸ். உதயமூர்த்தியின் நூலில் காணலாம். (அமெரிக்காவில்—அண்ணா எம். ஜி. ஆர்—1975) இதனுள் பயணத்தலைவரின் பண்புகளைச் சிறப்பித்திருப்பதும் சுட்டத்தக்கது.

காவிரியின் தோற்ற முதல், அது கடலுள் கலக்கும் வரையுள்ள பகுதிகளை அதன் போக்கில் சென்று, அவ்விடங்களில், தாம் பெற்ற பயண அனுபவத்தை விளக்குவதாக அமையும் 'நடந்தாய் வாழி காவேரி' எனும் நூலும் குறிப்பிடத்தக்கது.

### புனைவியல்

படைப்பாளர், தம் கற்பனை நிகழ்வுகளால் ஒரு கதையினைப் படைத்துச் சொல்லுதல் இதன்பாற்படும். உண்மை நிகழ்வுகளாயினும் அவற்றிலும் தம் கற்பனையைக் கலந்து படைப்பதால் அவையும் இங்கு உட்படுகின்றன எனலாம். புதினம், குறுநாவல், சிறுகதை, நாடகம், ஓரங்க நாடகம் முதலியன இதனுள் இணைவு பெறுகின்றன.

ஏதேனும் ஒரு நிகழ்ச்சி அல்லது உணர்வினை மையமாகக் கொண்டு சிறுகதை அமைகிறது; பல நிகழ்ச்சிகளின் கதைப் பின்னலாக. பலசிக்கல்களுடன் நீண்ட கதையமைப்பில் புதினமும் நாடகமும் அமைகின்றன; ஏதேனும் ஒரு சிக்கல் மட்டுமே

---

* பரணீதரன்; கேரள விஜயம்—பாகம் 1; விகடன் பிரசுரம்; 1977.

** சாவி;இங்கே போயிருக்கிறீர்களா?;பூம்புகார் பிரசுரம்;1977

*** வி. ஜி. சந்தோஷம்; உலகம் சுற்றி வந்தோம்; வானதி பதிப்பகம்; 1976.

**** மணியன் இதயம் பேசுகிறது...; விகடன் பிரசுரம்; 1969.

***** சிவசங்கரி; மனம் கவர்ந்த மலேசியா; திருமகள் நிலையம்; நிலையம் 1979.

முதன்மை பெறுவதாக அமைவன குறுநாவல், ஓரங்க நாடகம் ஆகியன என மேலோட்டமான பார்வையில் பொதுவாகப் பகரலாம்.

அறிவுரை வழங்குவதனையும், பொழுது போக்குவதனையும் முதன்மையாகக் கொண்டமைந்த கதையிலக்கியத்தின் வளர்ச்சி நிலையாக இவற்றைக் கொள்ளலாம்.

இவற்றின் பொருள் அனைத்திற்கும் ஒன்றுபட்டு அமைதலின் இங்கு இணைத்து நோக்கப்படுகின்றன. வடிவநிலையிலேயே இவை தம்முள் வேறுபட்டமைகின்றன. குறிப்பிட்ட எப்பொருளையும் படைப்பாளரின் மனநிலைக் கேற்பச் சிறுகதையாகவோ புதினமாகவோ படைக்க வியலும்.

இவற்றுள் இடம் பெறும் பொருள்களாக,

1. சமுதாயம்
2. வரலாற்றுப்புனைவு
3. வாழ்க்கை வரலாறு
4. அரசியல்
5. அறிவுரை
6. அறிவியல்
7. துப்பறிதல்
8. உளவியல்
9. புதிய கொள்கைசார் கற்பனை
10. கொள்கை விளக்கம்

போன்றன அமைகின்றன.

### சமுதாயம்

பெரும்பான்மைப் படைப்புகள் சமுதாயத்தைத் தம்பொருளாகக் கொண்டு எழுந்துள்ளன. செய்யுளிலக்கியத்துள் காணப்படும் சமுதாயப் பொருட்கூறுகளே இங்கும் சிறப்பிக்கப்படுகின்றன. தாம் எடுத்தாளும் சமுதாயச் சிக்கலுக்குக் கதை முடிவின் மூலம் தீர்வு தரலும் உண்டு.*

### வரலாற்றுப்புனைவு

வரலாற்றில் நிகழ்ந்த ஓர் உண்மை நிகழ்வு இதன் அடிப்படையாகிறது. இதன் தலைமை மாந்தர் தவிர ஏனையோரில் ஒரு

---

* ஜெயகாந்தன்; யுகசந்தி; கதைக் கனிகள்: தமிழ் எழுத்தாளர் கூட்டுறவுச் சங்கம்; 1965

சிலர் கற்பனை மாந்தராக அமைதல் வழக்காகும். குறிப்பிட்ட நிகழ்வு, நடந்த இடம், அதன் முடிவு இவை உண்மையாயிருக்க, அதன் தோற்றம், வளர்ச்சி, விளைவு முதலானவற்றைப் படைப் பாளர் முற்றிலும் தம் கற்பனையின் பாற்படுத்தி அமைத்தல் இதன் பாங்காகிறது.*

வரலாறு நிகழ்ந்த காலத்திய நம்பிக்கைகள், பழக்க வழக் கங்கள், அக்காலச் சூழல், சிறப்புகள், வாழ்க்கை வசதிகள் முதலிய வற்றைப் பெருமளவு அக்காலக் கண்ணோட்டத்தில் தரல் இதன் சிறப்பாகும். இதற்குக் கல்வெட்டுகள், வரலாற்று நூல்கள், இலக்கியங்கள் போன்றன பெருமளவு உதவுகின்றன.

வாழ்க்கை வரலாறு

தம்மைக் கவர்ந்த ஒருவரைத் தலைவராகக் கொண்டு அவரின் வாழ்க்கை வரலாற்றுக் கூறுகளுள் சிலவற்றைத் தம் புனைந்துரையுடன் தருவன இதன் பாற்படும்.**

அரசியல்

நாட்டின் அரசியல் நிலைமையை, இயக்கங்களை அடிப்படை யாகக் கொண்டு, அவற்றை ஆசிரியர் தம் மனநிலைக் கேற்ப ஏற்றோ, மறுத்தோ புனைந்துரைத்தல் இப்பொருளாம்.*** இந்திய விடுதலைப் போராட்டமும், இன்றைய அரசியல் சூழலும் இதற்கு அதிகமாகத் துணை செய்கின்றன.

அறிவுரை

கதையமைப்பு, கதை இவற்றைவிட அறிவுறுத்தும் பண்பு மேலோங்கி நிற்பது இதன் சிறப்பாகும். இவ்வகைப் படைப்பு களில் இதற்கென ஒருபாத்திரத்தை ஆசிரியர் உருவாக்குதலும் உண்டு.****

அறிவியல்

அறிவியல் கண்டுபிடிப்புகளை மையமாகக் கொண்டு அறிவியல், உலகினை எவ்வாறு மாற்றக்கூடும் என்பதனைக்

---

* கல்கி; பொன்னியின் செல்வன்; மங்கள நூலகம்; 1974

** மா. வழித்துணைவன்; திருவள்ளுவர் (தமிழ் வரலாற்று நாடகம்); பாரிநிலையம்; 1968

*** அகிலன்; எங்கே போகிறோம்; பாரிபுத்தகப் பண்ணை; 1974

**** மு. வரதராசன்; அகல் விளக்கு; பாரிநிலையம்; 1966

கற்பித்துரைத்தல் இதனுள் எண்ணப்படுகிறது. இது வியப்பான கண்டுபிடிப்புகளின் நன்மை தீமையின் அடிப்படையில் அமைகிறது.*

துப்பறிதல்

தலைமைப் பாத்திரத்தின் அறிவுக்கூர்மை சிறப்பாகத் தெரியும்படி அரிதின் முயன்று, பல்வகைச் சிக்கல்களுக்கிடையே ஏதேனும் ஒரு குற்றத்தினை, கொடுமையை அதன் கர்த்தாவான எதிர்த் தலைவனைக் கண்டுபிடித்தல் இதன் பொருளாகும்.** இத்தகு படைப்புகளில் படைப்பாளர் தம் கதைத் தலைவராக ஒருவரையே பயன்படுத்துதல் வழக்கம்.***

உளவியல்

எடுத்துச் சொல்லும் கதையினை விட அதனுள் இடம் பெறும் பாத்திரங்களின் மனநிலைகளுக்குச் சிறப்பளிப்பனவாக, உளவியல் அடிப்படையில் அமைதல் இதன் தன்மையாகும்.**** இப்பொருள் சிறுபான்மையதாகக் காணப்படுகிறது.

புதிய கொள்கைசார் கற்பனை

மிக அருகிய நிலையில் இப்பொருள் இங்கும் கையாளப்படுகிறது*****

கொள்கை விளக்கம்

தமது கொள்கையை விளக்கு முகமாகக் கதை மாந்தர்களைப் படைத்து, அதற்கேற்பக் கதை படைத்தல் இதன் சிறப்பாகும்******

இவை தவிர குறிப்பிட்ட வட்டாரத்தில் அமைந்துள்ள இனத்தவரின் வாழ்க்கைச் சிக்கல்களையும், பழக்கவழக்கங்களையும்

---

* சுஜாதா; தேவன் வருகை; குமரிப் பதிப்பகம்: 1977.

** தமிழ்வாணன்; இரும்புக்கை மனிதன், மணிமேகலை பிரசுரம்; 1978

*** தேவன்; துப்பறியும் சாம்பு; மங்கள நூலகம்; 1971.

**** இந்துமதி; தரையில் இறங்கும் விமானங்கள்;க லைஞன் பதிப்பகம்; 1981

***** மு. வரதராசன்; கி.பி. 2000 (சிந்தனைக் கதை); பாரி நிலையம்; 1973.

****** நா. பார்த்தசாரதி; ஆத்மாவின் ராகங்கள்; தமிழ்ப் புத்தகாலயம்; 1969

மையமாகக் கொண்டு அவர்தம் மொழிநடையில் இடம் பெற்று வரும் வட்டாரக் கதைகளும்* இங்கு நோக்கத்தக்கன.

இதழ்களில் வெளிவந்த செய்திகளை அடிப்படையாகக் கொண்டு கதை படைத்தலும் காணப்படுகிறது.**

முன் தோன்றியுள்ள இலக்கியங்களின் கதைகள் மீண்டும் மாற்று வடிவம் கொள்வதை உரைநடையிலும் காண முடிகிறது. மாற்று வடிவம் பெறும்பொழுது படைப்பாளரின் கற்பனை நயமும் இணைகிறது. சிலம்பின் ஆய்ச்சியர் குரவையை, 'ஒரு முல்லை' எனும் புதினமாக எஸ். பி. மணி புனைந்துள்ளார். நாடகவாக்கம் இதனுள் சிறப்பு பெறுகிறது.

### இயல்புப் புனைவியல்

உண்மை நிகழ்வுகள் அல்லது கற்பனை நிகழ்வுகள் அல்லது இரண்டும் இணைந்தவற்றைப் படைப்பாளர்தம்புனைவாற்றலால் இலக்கியமாகப் படைத்துத் தருவன இதன் பாற்படும். கட்டுரை, கடிதம் போன்றன இதனுள் நினைக்கப்படுகின்றன. அறிவுறுத்துதல் இவற்றின் முக்கிய நோக்கமாக அமைதல் குறிப்பிடற்பாலது.

மனிதரிடையே இயல்பாகக் காணப்படும் பழக்கவழக்கங்கள் பண்பு முதலானவற்றின் குறைபாடுகளை எள்ளல் சுவையுடன் சுட்டிச் சிரிக்கச் செய்து சிந்திக்க வைத்தல் கட்டுரையிலக்கியத்தில் மேலோங்கி நிற்கிறது. இதற்காகப் பறவைகளையும், விலங்குகளையும் உட்புகுத்தி அவற்றின் வாயிலாக உணர்த்தலும் உண்டு***

பொது அறிவு பெறச் செய்வதனைக் கடிதயிலக்கியம் தன்னுள் முதன்மைப் படுத்துகிறது. வாழ்த்துதல் அல்லது வேண்டுதல் இதன் இறுதியில் இடம் பெற்றிருக்கும்.****

குடும்பம், இனம், நாடு, பொருளாதாரம், அரசியல், மதம் முதலான பலவும் இவற்றுள் பங்கேற்கின்றன. இவற்றுள் ஏதேனும் ஒன்றின் நிகழ்வுகள் ஆசிரியரைக் கவரும் பொழுது, அவை பற்றிஅவர் எண்ணுவன,

---

* நீல. பத்மநாபன்; தலைமுறைகள்; ஜெயகுமாரி ஸ்டோர்ஸ்; 1973.

** கண்ணதாசன்; செய்திக் கதைகள்; வானதி பதிப்பகம்; 1980.

*** விந்தன்; ஓ, மனிதா; பூம்புகார் பிரசுரம்; 1977.

**** மு. வரதராசன், நண்பர்க்கு; பாரி நிலையம்; 1967.

கலை நயத்துடன் இலக்கியமாக உருக்கொள்கின்றன. பொது நிலையில் இவை பற்றிய தம் மன உணர்வினை வெளியிடற்கும் இவை பயன்படுகின்றன.

இவை இப்பொழுதுதான் வளம் பெற்றுக் கொண்டிருக்கின்ற இலக்கியங்களாதலின் பொதுநிலையில் மட்டுமே உணர்த்தப் பட்டுள்ளன.

## முடிபு

ஒன்றன் பொருட்கூறு பிறிதொன்றிலும் அமைதல் காணப் படுகிறது. சான்றாக 'நிலையாமை' பொதுநிலையில் அகப் பாடல்களில் தலைவனைப் பொருட்பிரிவினின்று தடுக்கவும் (நற்றிணை 16); புறப்பாடல்களில் ஈகையை வலியுறுத்தவும் (புறம். 27); அறப்பாடல்களில் விரைந்து அறம் செய்தலை உணர்த்தவும் (நாலடியார். 29); பக்திப் பாடல்களில் இறைவனை நாடும்படி வேண்டவும் (சிவவாக்கியார். 20) பயன்படுகிறது.

பொருட்கூறுகள் பொருளாக வளர்ச்சி பெறலை 'இயற்கை' போன்றவற்றால் அறியலாம்.

செய்யுளிலக்கியம், உரைநடையிலக்கியம் இரண்டிற்கும் பொதுவான பொருட்களாகச் சமுதாயம், அரசியல் எனப் பல உள. ஒன்றற்கே சிறப்பாக உரியதாகவும் சில அமைதல் காணப் படுகிறது. சான்றாக அகப்பொருள், செய்யுளிலக்கியத்திற்கு உரியதாக அமைதலைச் சுட்டலாம்.

இங்குக் காட்டியுள்ள பொருட்கள் தவிர, வேறு சிலவும் அமையக்கூடும். இன்று பெருகியுள்ள இலக்கிய வகைகள் இதனை உணர்த்துகின்றன, கால மாற்றத்திற்கேற்பப் புதிய பொருட்கள் தோன்றலையும் இவை காட்டுகின்றன.

இங்குச் சுட்டியுள்ள பொருட்கள் ஒவ்வொன்றினைப்பற்றியும் மிக விரிவாக ஆயும்பொழுது அகம், புறம் போன்று அவற்றின் பொருட்கூறுகளையும் தெளிவாக வரையறுக்கவியலும்.

# பக்தி

சமுதாயத்தில் மிகுந்த செல்வாக்குப் பெறும் ஒன்று இலக்கியத்துள் இடம் பெறல் இயல்பு. இந்நிலையில் சமுதாயத்தினை ஆட்கொண்டிருந்த இறை வழிபாடு இலக்கியத்துள் புகுந்தது. தனித்த சிறப்புடன் வளர்ந்தது. காலந்தோறும் மெய்யடியார்கள், துதிப்பாடல்களாகவும், காப்பியங்களாகவும், பிரபந்தங்களாகவும் பாடித் தமிழிலக்கியத்துள் இதனை முதன்மைப்படுத்தியுள்ளனர். இருபதாம் நூற்றாண்டின் தொடக்கம் வரை இதன் ஆட்சி மிகுந்த வலுவுடன் காணப்படுகிறது.

### பக்தி—விளக்கம்

ஒன்றன்பால் கொள்ளும் ஆழ்ந்த பற்றினைப் பக்தி எனக் கொள்ளலாம். பற்று என்பது பத்து→பத்தி→பக்தி என்பதாக மாறியுள்ளது எனக் கருதலாம். எற்று, அற்று போன்றன, முறையே எத்து, அத்து எனத் திரிதல் போன்று இதுவும் அமைவதாகக் கொள்ளலாம். 'பத்து' எனும் வினை, பெயராகுங்கால் பத்தி எனவாகி, பக்தியாகப் பின் மாற்றங் காண்கிறது எனலாம்.

இறைவன்மீது கொண்ட நம்பிக்கையுணர்வும் அதன் வாயிலாகப் பிறக்கும் பற்றுணர்வும் உள்ளத்தினின்று சொற்களாக உருவெடுத்து இலக்கியமாக மலர்கின்றன. அக்காலத்தில் அவை பக்திப் பொருளாகின்றன.

### ப. அருணாசலம் கருத்து

பக்தி என்பது பற்றி விரிந்த ஆய்வொன்றினை இவர் மேற்கொண்டுள்ளார்.* அதனின்றும் இவரது கருத்தாக,

1. பக்தி என்ற வடசொல்லைப் பத்தி எனத் தமிழ்ப்படுத்தலாம்.
2. பக்திக்குச் சமமான சொல்லாக அன்பினைக் கொள்ளல் பொருந்தாது.

---

* அருணாசலம். ப; பக்தி இலக்கியம்; 1973; பக். 129-131.

3. பக்தி என்பதுஇறைவனிடத்தும் அவன் அடியாரிடத்தும் கொள்ளும் அன்பு. இறைவனோடு கலந்து நிற்றலைக் குறிக்கும்.
4. பக்தி, பல பொருளில் இன்று வழங்கப்படினும் பக்தி யியக்கக் காலத்தில் சமய வட்டத்திற்குள்ளேயே பயன் படுத்தப்பட்டது.

என்பன பெறப்படுகின்றன.

பக்தி என்பதனைப் பத்தி என்பதாக இவ்வாசிரியர் அமைத் துள்ள போதிலும் வழக்குக் கருதி, பக்தி எனும் சொல்லே இங்குப் பின்பற்றப்படுகிறது.

இவற்றுள் மூன்றாவது கருத்தினைச் சற்று விரித்து ஏற்றுக் கொள்ளலாம். அதாவது இறைவனிடம் கொள்ளும் அன்பு, அவன் அடியாரிடம் மட்டுமின்றி அவனுடன் தொடர்புடைய வாகனங்கள், ஆயுதங்கள் போன்றவற்றிற்கும் விரிவதாக அமை கிறது. சான்றாக அருணகிரிநாதரின் மயிலலங்காரம், வேலலங் காரம் தண்டபாணி சுவாமிகளின் வீரபாகுத் தேவர் வாளலங் காரம் போன்றவற்றைக் குறிப்பிடலாம்.

இப்பொருட்கள் இறைச்சார்புடையவை ஆதலின் இறை வனைப் பாடுதல் எனும் பொழுது இவையும் அதனுள் அடங்கி யவையே என்பது அவர் கருத்தாகலாம். மற்றும் இவற்றைப் பாடும் பொழுது மிகுதியும் இறைவனின் புகழே வெளிப்படுதலும் குறிப்பிடற்பாலது.

'பக்தி பல பொருளில் இன்று வழங்கப்படினும்' என்பதில் உள்ள பல பொருள் யாவை என்பது பற்றி ஆசிரியர் விளக்கம் தரவில்லை. அப்பல பொருள்களைப் பெரியோர், மொழி, நாடு என்பனவற்றின்மீது கொண்ட பற்று என உய்த்துணரலாம். பெரியோர் என்பதில், இலக்கியம், அரசியல் போன்ற துறைகளில் தம்மைக் கவர்ந்தவர், என்பது நினைக்கப் படுகிறது. நூல்களுக்குக் காப்புச் செய்யுள் அமைக்கும் பொழுது இவற்றை உட்படுத்து வதினாலும் தனி நிலையில், இறைமீது கொள்ளும் பற்றினை, இறைக்கு அளிக்கும் மதிப்பினை இவற்றிற்கு நல்கிப் பாடுவதி னாலும்* இவ்வுணர்வு ஏற்படுகிறது.

---

* எஸ். ஆர். சின்னமணி; புவித்தாய் வணக்கம்; கவிதைக் கதம்பம்; மலர்விழி பதிப்பகம்; 1969.

நாரண. துரைக்கண்ணன்; பாரதி அருளுகவே; பாசறைக் கவிதைகள்-1; செங்கை அழகன் (தொகு.); பாவலர் பாசறை; 1973.

சங்க காலத்தில் நடைபெற்ற இயற்கை வழிபாடும் (பரிபாடல். 11) முன்னோர் வழிபாடும் (புறம். 9) இவற்றுடன் இணைத்து நோக்கத் தக்கன.

இவற்றால் பக்தியின் பாட்டுடைத் தலைமையாக, இறைவன், அடியார், அவனைச் சார்ந்தன, பெரியோர், மொழி, நாடு ஆகியவற்றைக் கருதலாம். பக்திப் பாடல்கள் மிகுதியும் தன்னுணர்வின் பாற்படுவதால், தம்மைப் பாடுதலும் தவிர்க்க முடியாதொன்றாகக் காணப்படுகிறது. எனவே புலவரும் இங்குப் பாட்டுடைத் தலைமை பெறும் சிறப்படைகின்றனர்.

**பக்திப் பொருட்கூறுகள்**

பக்திப் பொருளுள் அடங்கும் பொருட்கூறுகளை வரையறுக்கும் முயற்சி ஓரளவு காணப்படுகிறது. அவற்றுள் சில குறிப்பிடத் தக்கன. அவையாவன:

**அகத்தியர் கருத்து**

அகத்தியர் என்பார், சுந்தரர் தேவாரத்தை, குருவருள், வெண்ணீறு, அஞ்செழுத்து, கோயில், சிவன் உருவம், திருவடி, அருச்சனை, அடிமை என எண் வகையாகப் பிரித்துத் தருகிறார் என்பர்.*

**உமாபதி தேவநாயனார் கருத்து**

இவரது கருத்துப்படி, பதிமுதுநிலை, உயிரவைநிலை, இருள் மலநிலை, அருளது நிலை, அருளுருவ நிலை, அறிவுநெறி, உயிர் விளக்கம், இன்புறுநிலை, அஞ்செழுத்தருள் நிலை, அணைந்தோர் தன்மை ஆகியன அமைகின்றன என்பர். **

இவ்விரு பகுப்புகளும் இலக்கியத்தின் பொருட்கூறுகளைத் தெளிவுபடுத்தாது, சைவ சமய விளக்கத்தினை அளிப்பதாக உள்ளன என்பதை, இவற்றை எடுத்துக் காட்டுபவர் தரும் விளக்கம் உணர்த்துகிறது.***

**ஔவை சு. துரைசாமிபிள்ளை கருத்து**

இவர் திருஞானசம்பந்தரின் பாடற்கூறுகளாக, 1. இறை இயல்பு, 2. உயிரியல்பு, 3. அறிவுரை, 4. வரலாற்றுக் குறிப்புகள் (புராண வாலாறு, அடியார் வரலாறு), 5. பிற சமயத்தவர்

---

* சொ. சிங்காரவேலன்; மூவர் தமிழ்: 1966; ப. 122.

** மேற்படி, ப. 123.

*** மேற்படி, பக். 122-138.

குறிப்பு, 6. இயற்கை நலம் (வருணனைக் கூறுகள்), 7. சமய ஒழுக லாற்றுக் குறிப்புகள் 8. தொல்லிலக்கியக் குறிப்புகள் என்ப வற்றைக் காட்டுகிறார்.*

ஆழ்வார் பாடல்களில் பொருட்கூறுகள்

ஆழ்வார் பாடல்களிலும் பொருட்கூறுகளை அறுதியிடும் முயற்சி இடம் பெற்றுள்ளமையை, 1. அடியார் அனுபவங்களை விளக்குதல், 2. திருநாமமகிமை, 3. தலமகிமை, 4. அடியார் பெருமையுரைத்தல், 5. பிராட்டியாரின் தன்மையைத் தம் மேலிட்டுக் கூறுதல் என்பவற்றின் மூலம் எடுத்துக்காட்டுவர்.**

மேற்காணும் இரு கருத்துகளும், மேற்போக்கான நிலையில் அமைந்துள்ளன. பக்திப் பொருளின் அனைத்துக் கூறுகளும் இங்கு உணர்த்தப்படவில்லை. எனவே புதிய பகுப்பு முயற்சி தேவையாகிறது.

பகுப்பாய்வின் அடிப்படையியல்புகள்

(1) இவ்வாய்வு 1. கதைத் தொடர்பற்ற பாடல்கள், 2. கதைத் தொடர்புடைய பாடல்கள், 3. ஒப்பீடு என, தெளிவு கருதி மூன்று பகுதிகளில் அமைகிறது. முதல் பகுதிக்கு இராம லிங்கரின் திருவருட்பாவும்***

இரண்டாம் பகுதிக்கு மீனாட்சிசுந்தரம் பிள்ளையின் திருஅம் பர்ப் புராணம்**** வல்லூர் தேவராசப்பிள்ளையின் குசேலோ பாக்கியாணம்***** ஆகியனவும், மூன்றாம் பகுதிக்குத் தண்ட பாணி சுவாமிகளின் திருவரங்கத் திருவாயிரம்******, கிருஷ்ணப்

* சைவ இலக்கிய வரலாறு (கி.பி. 7 முதல் 10-ஆம் நூற் றாண்டு வரை); 1958.

** ப. அருணாசலம்; பக்தி இலக்கியம்; ப. 106.

*** திருஅருட்பா; ஊரன் அடிகள் (பதி); சமரச சன்மார்க்க ஆராய்ச்சி நிலையம், வடலூர்; 1972.

**** திருஅம்பர்ப்புராணம்; டாக்டர். உ. வே. சாமிநாதையர் நூல் நிலையம்; 1965.

***** குசேலோபாக்கியானம்; தி. சங்குப்புலவர் (உரை); கழகம்; 1965.

****** திருவரங்கத் திருவாயிரம்; திருவாமாத்தூர் கௌமார சபை.

பிள்ளையின் இரட்சணிய மனோகரம்* மஸ்தான் சாகிபுவின் பாடல்கள்** ஆகியனவும் கருவி நூல்களாகக் கொள்ளப் பட்டுள்ளன.

(2) பக்திப் பொருளின் பாற்படும் எந்நூலும் இலக்கியவகை, காலம், சமயம் ஆகிய வேறுபாடின்றி இங்குத் தரப்படும் பகுப்பு முறைகளுக்கு ஏற்புடையதாக அமைதல் வேண்டும் என்பது கருத்தில் கொள்ளப்பட்டுள்ளது. புலவரின் புலமைக்குத் தக ஆங்காங்கே வேறுபாடுகள் இருக்கலாம். அவை தவிர்க்க முடியாதன என்பதுடன், அவை, இலக்கிய வளர்ச்சியைச் சுட்டுவ தாகவும் கொள்ளலாம்.

(3) தெளிவு கருதி. பக்திப் பொருட்கூறுகள் அட்டவணை கள் 1-5இல் முதலில் அமைகின்றன. அவற்றின் விளக்கங்கள் சான்றுகளுடன் பின் தொடர்கின்றன.

(4) பத்தொன்பதாம் நூற்றாண்டின் முற்கால, பிற்கால நூல்களுக்கும் இப்பகுப்பு முறை உடன்பாடாய் அமைவதற்கு ஒவ்வொன்றிற்கும் ஒவ்வொரு சான்று தரப்பட்டுள்ளது. அதனை அட்டவணை-6இல் காணலாம்.

(5) பொருட்கூறுகள் பற்றிய பொதுநிலை விளக்கத்தை இங்களித்தலும் கட்டுரைத் தெளிவிற்கு இன்றியமையாததா கிறது: (அ) பொருட்கூறுகள், பாடல்களில் முதனிலை, துணை நிலை என இரு நிலையில் அமைகின்றன. (ஆ) முதனிலை எனுங் கால், அப்பொருட்கூறே பாடற் பொருளாக அமைகிறது. (இ) இம் முதனிலை, ஒரு பாடலில் தான் மட்டுமே அமைந்து, நேரிடையாக பாடற் கருத்தைப் புலப்படுத்தி விடலாம். சான்றாக,

அன்பெனும் பிடியுள் அகப்படும் மலையே
அன்பெனும் குடில் புகும் அரசே
அன்பெனும் வலைக்குட் படு பரம் பொருளே
அன்பெனும் கரத்தமர் அமுதே
அன்பெனும் கடத்துள் அடங்கிடும் கடலே
அன்பெனும் உயிர்ஒளிர் அறிவே
அன்பெனும் அணுவுள்ளமைந்த பேர் ஒளியே
அன்புருவாம் பரசிவமே (திருவருட்பா. 3239)

---

* இரட்சணிய மனோகரம்; வீ. ஞானசிகாமணி (பதி.); வேதா கம மாணவர் பதிப்பகம்.

** ஞானவள்ளல் குணங்குடி மஸ்தான் சாகிபு; பாடலும் உரை யும்; என். ஏ. ரஷீத்; ஞானவள்ளல் பதிப்பகம்; 1977.

என்பது போன்று தனித்து அமைதலைக் குறிப்பிடலாம். இங்கு, 'இறையியல்பு' எனும் பொருட்கூறு, முதனிலைப் பொருட்கூறாக —நேரிடையாக வெளியிடப்பட்டுள்ளது.

(ஈ) இஃதன்றி, இம்முதனிலைப் பொருட்கூறு பிறிதொரு பொருட்கூறின் வழி விளக்கம் பெறுதலும் உண்டு. அவ்வாறு உதவும் பொருட்கூறே துணைநிலைப் பொருட்கூறு எனப்படுகிறது. சான்றாக,

ஆறடுத்துச் சென்ற எங்கள் அப்பருக்கா அன்று கட்டுச்
சோறெடுத்துச் சென்ற துணையே சுயஞ்சுடரே
ஊறெடுத்தோர் காணரிய ஒற்றி அப்பா உன்னுடைய
நீறடுத்த எண்தோள் நிலைமைதனைப் பாரேனோ

(திருவருட்பா. 953)

எனும் பாடலின் முதனிலைப் பொருட்கூறு, நீறெடுத்த எண் தோள் நிலைமைதனைப் பார்க்க ஏங்கும் 'ஏங்கல்' ஆகும். இங்கு இறைவனின் எண்தோள் அழகினைக் காணவேண்டும் என்பதில் அவ்விறைவன் யார் எனும் வினா எழுகிறது. விடையாக, திருநாவுக்கரசர்க்குப் பசி தீர்க்க அன்று, கட்டுச்சோறு எடுத்தவன் என்பது அமைகிறது. இவ்விடை 'அடியவர்க்கருளியது' எனும் பொருட்கூறின் பாற்படும். இவ்வாறு முதற்பொருளை விளக்குவதாக இது அமைதலின், துணைநிலைப் பொருட்கூறாகிறது.

(உ) ஒரே பாடலில் ஒன்றுக்கு மேற்பட்ட துணைநிலைப் பொருட்கூறுகள் அமைதலும் உண்டு. நீண்ட பாடலாக அமையும் நெஞ்சறிவுறுத்தல் (திருவருட்பா. 1965) போன்றவற்றில் இவ்வமைப்பு இயல்பான ஒன்றாகக் காட்சியளிக்கின்றது.

(ஊ) ஒரு பாடலின் முதனிலைப் பொருட்கூறு, பிறிதொரு பாடலில் துணை நிலையாக அமைதலும் உண்டு. ஒன்றன் துணைநிலைப் பொருட்கூறு மற்றொன்றில் முதன்மை பெறுதலும் உண்டு. சான்றாக, இறைவனைப் போற்றுதல் எனும் நிலையில், போற்றுதற் கூறு முதனிலையாக,

பசியாத அமுதே பகையாத பதியே
　　பகராத நிலையே பறையாத சுகமே
நசியாத பொருளே நலியாத உறவே
　　நடராஜ மணியே நடராஜ மணியே

(திருவருட்பா. 5226)

என அமைகிறது. இது, துணை நிலையாக,

முன்னவனே யானை முகத்தவனே முத்திநலம்
சொன்னவனே தூயமெய்ச் சுகத்தவனே என்னவனே
சிற்பரனே ஐங்கரனே செஞ்சடையஞ் சேகரனே
நிற்பரனே நின்தாள் சரண்.

(திருவருட்பா. 1966)

எனும் பாடலில் மாறி அமையக் காணலாம். இங்கு, 'அடைக்கலம் புகுதல்' எனும் முதனிலைப் பொருட்கூறின் விரிவிற்குத் (யாரிடம், எப்படிப்பட்டவரிடம் என்பனவற்றிற்கு விளக்கமாக) துணையாக அமைந்து துணை நிலையாகிறது. இவ்வாறே பிறவும் அமைகின்றன.

(எ) ஒன்றுக்கு மேற்பட்ட முதனிலைப் பொருட்கூறுகள் ஒரு பாடலில் அமைதலும் உண்டு. இவ்வாறு அமைவனவற்றைப் பொருட்கூறுகளின் இணைவுப் பாடல்கள் எனலாம்.

அருள்தரல் வேண்டும் போற்றி என் அரசே
அடியனேன் மனத்தகத் தெழுந்த
இருள்கெடல் வேண்டும் போற்றி எந்தாயே
ஏழையேன் நின்றனைப்பாடும்
தெருள் உறல் வேண்டும் போற்றி என்அறிவே
சிந்தை நைந்துலகிடை மயங்கும்
மருள் அறல் வேண்டும் போற்றி என் குருவே
மதிநதி வளர் சடைமணியே.

(திருவருட்பா. 2581)

எனும் பாடலில் வேண்டலும், போற்றலுமாகிய முதனிலைப் பொருட்கூறுகள் இணைந்து நிற்கக் காணலாம்.

## பகுப்பு அட்டவணைகள்

### அட்டவணை-1

பக்தி




### அட்டவணை-2

(1) இறை

இறை

- இறை நிலை
  - இறையியல்பு
  - வருணனை
  - தொழில்
- திருவடி
- திருநாமம்
- திருநீறு
- போற்றல்
- வாழ்த்து
- அடியார்
  - இயல்பு
  - இறையருளியது
  - போற்றல்
  - அருட் செயல்
  - வேண்டல்
  - ஏங்கல்
  - சிறப்பு
- இறை உடைமை
- தலம்
- புராணம்
- பக்தி
- இறையெதிர்ப்பிற்கு எதிர்ப்பு

அட்டவணை-3

(2) இறைக் கொள்கை

உயிரியல்பு | மனம் | நிலையாமை | சிற்றின்ப வெறுப்பு | அறிவுரை | முன்நூற் கருத்துகள்

அட்டவணை-4

(3) நேரிடை நிற்றல்






# I

## கதைத் தொடர்பற்றன

ஒரு நூலுள் அமையும் பாடல்கள் குறிப்பிட்ட ஒரு கதையின் துணை கொண்டு இணைவு பெறாது. தனித்து நிற்றல் இதன் பாற் படும். அடுத்தடுத்து வரும் பாடல்களிடையே பொருட்கூறின் தொடர்ச்சி அமையாது, அவை வேறுபட்டு நிற்கலாம். அல்லது ஒரே பொருட்கூறு தொடர்ந்து பல பாடல்களில் அமைந்தும் இருக்கலாம். ஆயின் ஒரு கதையின் தொடக்கம், வளர்ச்சி, முடிவு என்பதனை இவற்றில் காணலரிது. பக்தியிலக்கியத்தில் அமையும் தனிப்பாடல்கள் எனவும் இவற்றைக் கொள்ளலாம்.

இப்பாடல்களை இரு வகைகளில் பிரிக்கலாம். முதலாவதாக,

1. தன்னைப் பாடுதல்
2. தனக்காகப் பாடுதல்
3. பிறருக்காகப் பாடுதல்
4. இறைவனைப் பாடுதல்

எனப் பகுக்கலாம். தன்னைப் பாடுதல் என்பது, புலவர் தம் முடைய நிலைக்காக இரங்கி நிற்றல், இறையருள் பெற்றமை குறித்துப் பெருமிதம் கொள்ளல் போன்றன அமைகின்றன. தனக்காகப் பாடும்பொழுது இறைவனிடம் தன்னுடைய தேவை

களை நவின்று வேண்டி நிற்பதைக் குறிப்பிடலாம். அறிவுரைப் பகுதிகளையும். உலகிற்காக இறைமுன் இரங்கி நிற்றலையும் பிறருக்காகப் பாடுதலில் கொள்ளலாம். இறைவனைப் புகழ்ந்து நிற்றல், அவனருள் வியத்தல், அவனியல்பு நவிலல் போன்றன— இறைவனைப் பாடுதலின் கண் அமைகின்றன.

இரண்டாவது வகை (1) இறைமை, (2) தன்மை எனப் பிரிகின்றது. பக்திப் பொருட்கூறுகளை இவ்வகையின் பாற்படுத்தி நோக்குதல், முதல் வகையினைக் காட்டினும் பொருட்கூறுகளின் விளக்க நிலையில் ஏற்புடைத்தாக அமைதலால், இதுவே இங்கு மேற்கொள்ளப்பட்டுள்ளது.

## இறைமை

இறைவன் தொடர்புடைய அனைத்துக் கூறுகளும், அவன் சின்னங்களைச் சிறப்பித்தல் உட்பட இதனுள் நினைக்கப்படுகின்றன.

### 1. இறை நிலை

இறைவன் இத்தகையவன், இப்படிப்பட்டவன் என்று இயம்புவதை இது குறிக்கிறது. இதனை (அ) இறையியல்பு, (ஆ) இறை வருணனை, (இ) இறைத்தொழில் என மூன்றாகப் பகுத்துக் காணலாம்.

(அ) இறையியல்பு* : இறைவனின் அளப்பரிய தன்மை (5701), அநாதிப் பழமை (2985), எங்கும் நிறைந்துள்ளமை (4670), உயிர்கள் அனைத்திற்கும் ஆதாரமாய் உள்ளமை (3270), என்றைக்கும் தன்னிலையினின்றும் மாறுபடாமை (1382) போன்ற குறிப்புகள் இதன் பாற்படும்.

இவ்வியல்புக் கூறுகள், பாடலுள் தனித்தனியாக அல்லது சிலவாக இணைந்து காணப்படுகின்றன. பக்திப் பாடல்களில் மிக

---

* எல்லாந்தான் உடையதுவாய் எல்லாம் வல்லதுவாய்
எல்லாந்தான் ஆனதுவாய் எல்லாந்தான் அலதாய்ச்
சொல்லாலும் பொருளாலும் தோன்றும் அறிவாலும்
துணிந்தளக்க முடியாதாய்த் துரிய வெளிகடந்த
வல்லாளர் அனுபவத்தே அது அதுவாய் அவரும்
மதித்திடுங்கால் அரியதுவாய்ப் பெரியதுவாய் அணுவும்
செல்லாத நிலைகளினும் செல்லுவதாய் விளங்கும்
திருச்சிற்றம்பலந் தனிலே தெய்வம் ஒன்றே கண்டீர்.
(3274)

முக்கியமான, மிகுதியாகப் போற்றப்படும் பொருட்கூறுகளுள் இவ்விறையியல்பும் ஒன்றாகக் காணப்படுகிறது. இராமலிங்கர் பாடல்களில் மிகுதியும் நேரிடையாகவே இறையியல்புகள் எடுத்துக் காட்டப்படுகின்றன. பிற பொருட்கூறுகளின் விளக்கத்திற்கும் இது சிறப்பாகப் பயன்படுத்தப்படுகிறது.

(ஆ) இறை வருணனை* : இறைவனின் உருவச் சிறப்பினை எடுத்துக் காட்டுவது இப்பகுதியாகும். இஃது பெரியாழ்வாரின் முதற்பத்தில் அமைந்துள்ள, 'சீதக்கடல்' பகுதியில் இறைவனைப் பாதாதிகேசமாக வருணித்துள்ளமை போன்று, ஒவ்வொரு அங்கமாகத் தனித் தனியாக வருணித்தல் அல்லது ஒரே பாடலில் இறைவனை முழுவதுமாக வருணித்தல் என அமைகிறது. இறைவனின் அழகில் ஈடுபாடு கொண்ட அடியார்கள் அவனது கோலச் சிறப்பினை எடுத்துக் காட்டுவதில் பெருமகிழ்வு கொள்கின்றனர்.

இறைவனின் திருக்காட்சிக்கு ஏங்கும் பொழுதும் (*1348*); காட்சி கண்டதை வெளியிடும்போதும் (*42*); அறிவுறுத்தும் போதும் (*1965*) இறை வருணனை துணை நிலையில் அமையக் காணலாம்.

(இ) இறைத் தொழில்: ** உயிர்களைப் படைத்த இறைவன் அவற்றின் இயக்கத்திற்கும் காரணமாக அமைகின்றான். அவை இறைவனின் செயல்களாக, தொழில்களாக இங்குக் கருதப்படுகின்றன. எல்லோரும் இன்புற்றிருப்பதற்காக நடனமாடும் தொழிலை, இறைவன் மேற்கொண்டிருப்பதாகத் திருவருட்பா காட்டும் (*2946*).

---

* தோடுடையார் புலித்தோலுடையார் கடல் தூங்கும் ஒரு
மாடுடையார் மழுமான் உடையார் பிரமன் தலையாம்
ஓடுடையார் ஒற்றியூர் உடையார் புகழ் ஓங்கிய வெண்
காடுடையார் நெற்றிக்கண் உடையார் எம் கடவுளரே. (*824*)

** எத்தகை எவ்வுயிர் எண்ணின அவ்வுயிர்க்
கத்தகை அளித்தருள் அருட் பெருஞ்சோதி
எப்படி எவ்வுயிர் எண்ணின அவ்வுயிர்க்
கப்படி அளித்தருள் அருட்பெருஞ்சோதி
ஏங்கா துயிர்த்திரள் எங்கெங்கிருந்தன
ஆங்காங் களித்தருள் அருட்பெருஞ் சோதி
சொல்லுறும் அசுத்தத் தொல்லுயிர்க் கவ்வகை
அல்லலில் காத்தருள் அருட்பெருஞ்சோதி.
(அருட்பெருஞ்ஜோதி அகவல். 769-776)

2. திருவடி*

இறைவனுக்கு உருவம் கற்பிப்போர், அவன் திருவடி நிழலைச் சென்று சேர்வதைத் தம் நோக்கமாகக் கொண்டுள்ளனர். இறைவனுடன் இரண்டறக் கலத்தலாகிய முக்தி நிலையை இது குறிப்பதாகக் கொள்ளலாம்.

திருவடிச் செயல்களைச் சுட்டுதல் (1960); திருவடியினைப் போற்றுதல் (5218); அதன் சிறப்பினைக் காட்டுதல் (4336) எனும் நிலைகளில் இது இடம் பெறுகிறது. இறைவனுக்கு அளிக்கும் அனைத்துச் சிறப்பினையும் அவன் திருவடிக்கு ஏற்றியுரைத்தலும் (1960) காணப்படுகிறது.

எத்தகைய திருவடி என்பதுடன், அதனை உடையவனையும் சிறப்பித்து மொழிதல் இதன் ஒரு கூறாகக் காணப்படுகிறது. அத் திருவடியைச் சிறப்பித்துள்ள பிறரையும் சுட்டியிருத்தல் குறிப்பிடற்பாலது. இறைவனது திருவடிக்குச் சைவம், பிற சமயங்களைவிட மிகுந்த சிறப்பளித்துள்ளது. இறைவனின் திருவடித் தீட்சை பெறலை இன்றியமையாததாகச் சைவ சித்தாந்தம் கருதுதல் இதன் காரணம் எனலாம்.

3. திருநாமம்**

இறைவனை வழிபடலில் ஒரு கூறாக அவன் திருநாமத்தினை ஓதுதல் காணப்படுகிறது. எனவே அவன் திருநாமத்தினை நினைக்கும் பொழுதோ அன்றி ஓதும் பொழுதோ இறையருள் முழுமையாகக் கிடைக்கும் என்பதனை வலியுறுத்தும் வகையில் அமைகின்ற 'திருநாமப் புகழ்ச்சி' இதனுள் இடம் பெறுகிறது.

---

* ஆருயிர்க் காதாரம் ஆகிய பாதம்
அண்ட பிண்டங்கள் அளிக்கின்ற பாதம்
சாருயிர்க் கின்பம் தருகின்ற பாதம்
சத்திய ஞானதயாநிதி பாதம் (4331)

** பதியே எங்கும் நிறைந்தருளும் பரமசுகமே பரஞ்சுடரே
கதியே அளிக்கும் தணிகை அமர் கடம்பா உன்றன் ஆறெழுத்தை
உதியேர் மனத்தின் உச்சரித்திங்குயர்ந்த திருவெண்ணீ றிட்டால்
துதிஏர் நினது பதந்தோன்றும் துன்பம் ஒன்றும் தோன்றாதே (219)

இறைவன் நாமத்தை உச்சரிக்கும்பொழுது அதனால் கிடைக்கும் பயன்களைச் சுட்டுதல் (216); திருநாமம் ஓதியதால் பயன் பெற்றோரைக் காட்டல் (991); இறைவனைப் போற்று தற்குப் பயன்கொளல் (211) எனும் நிலைகளில் திருநாமம் ஓதுதல் மேற்கொள்ளப்படுகிறது. இறை நாமத்தினைச் சிறப்பிக்கும் பொருட்டுத் தனித்த இலக்கிய வகையாக வளர்ந்துள்ள 'நாமா வளி'யினை இங்கு இணைத்துப் பார்க்கலாம் (1938).

4. திருநீறு*

சமயக் குறியீடாகக் கருதப்படும் நீறு சிறப்பிக்கப்படுதல் இதன் பாற்படும். திருநீறு அணிவதால் வரும் பயன் இங்கு எண் ணப்படுகிறது. இகபரம் இரண்டிற்கும் துணையாக நிற்கும் நீறு; சிறப்பிக்கப்படும்பொழுது, அதனுடன் அதன் நோக்கமாகிய இறை வனும், இணைத்துப் புகழப்படுதல் இயல்பாகிறது (357).

5. போற்றல்**

ஒருவரைப் பற்றிய புகழ் மொழிகள் போற்றுதல் எனப்படு கின்றன. இங்கு, புகழ்ந்து பாடுதல் போற்றிப் பாடல்களா கின்றன. பாடப்படுகின்ற ஆண்மகனின் சிறப்புகளை நவிலும் பாடாண் திணையுடன் தொடர்புடையதாகத் தோன்றிடினும் இரண்டிற்கும் வேறுபாடுண்டு. வணங்குதல், துதித்தல் எனும்படி யாக இங்கமைகிறது. அங்குப் பாட்டுடைத் தலைவன் சிறப்புகள் இயல்பு நிலையிலும், கற்பனை வளத்துடன் உயர்வு நவிற்சியிலும் இறைவனுடன் இணைத்தும் பேசப்படுதல் காணலாம். வீரமும் கொடையும் மிகுதியாகக் காட்டப்படுகின்றன. எனவே பகை வரின் வீழ்ச்சியும், இரவலரின் வறுமையும் அதனுள் முக்கியத்துவம் பெறுகின்றன. அப்பாடல்கள் வாழ்த்துடன் முடிதலும் குறிப் பிடத்தக்கது (புறம். 55).

---

* துயில் ஏறிய சோர்வும் கெடும் துயரம் கெடும் நடுவன்
கையில் ஏறிய பாசம் துணி கண்டே முறித்திடுமால்
குயில் ஏறிய பொழில்சூழ் திருக்குன் றேறி நடக்கும்
மயில் ஏறிய மணியே என வளர் நீறணிந்திடிலே. (358)

** கோதிலாக் குணத்தோய் போற்றி குகேச நின்பாதம் போற்றி
தீதிலாச் சிந்தை மேவும் சிவபரஞ்சோதி போற்றி
போதில் நான்முகனும் காணாப் பூரண வடிவே போற்றி.
ஆதிநின் தாள்கள் போற்றி அநாதி நின் அடிகள் போற்றி.
(518)

புறப்பாடலுள் பாட்டுடைத் தலைவனின் புகழ் பாடும் பொழுது அவனது, நாடு, நகர், தலைவி, பிற சின்னங்கள் முதலியன சிறப்பிக்கப்படுதல் போன்று, பக்திப் பாடல்களில் இறைவனைப் போற்றும் பொழுது அவனைச் சார்ந்தனவும் சிறப்பிக்கப் படுதல் இரண்டன் ஒற்றுமைக் கூறாக அமைகிறது.

இறைவன் தனக்கருளியது கூறல் (4753); அவன் பெருமையைப் புகலுதல் (5226); போற்றுதற்குக் காரணம் காட்டல் (5312); அவன் அவதாரப் பெருமையைச் சிறப்பித்தல் (1952); அவன் உடைமைகளை நவிலுதல் (766); அவனைத் தான் அழைக்க விரும்பும் விளிகளால் அடுக்கிக் கூறல் (56); அவன் அருட் செயலைச் சிறப்பித்தல் ( 044); அவனியல்பு காட்டல் (2095); அவனை வருணித்தல் (4810); எழுந்தருளியிருக்கும் தலத்தின் சிறப்புரைத்தல் (1962:92-95) புராணங் கூறல் (512) போன்றவற்றின் துணை கொண்டு இப்போற்றுதல் அமைகிறது.

இக்கூறுகள் தனித்த நிலையில் அல்லது ஒன்றுக்கு மேற்பட்டன இணைந்த நிலையில் அமைந்து துணை செய்கின்றன.

## 6. வாழ்த்து*

என்றும், எங்கும் நிலைத்து நிற்கும் இறைவனையும், ஆன்றோர் தம் அன்பின் மிகுதியால், அவன் அருட் பெருமையை உணர்ந்த களிப்பால் வாழ்த்தத் தலைப்படுகின்றனர். போற்றுதலுக்கும் இதற்கும் நெருங்கிய தொடர்புண்டு. இறைவனைப் போற்றுதற்குப் பயன் சொல்லும் காரணிகள் அவனை வாழ்த்துதற்கும் பயன்படுகின்றன. சிறப்பினை இயம்புதல் போற்றல் எனவும்; நீண்ட காலம் வாழவேண்டுதல், ஒன்று மேன்மையுறும்படி விழையும் தம் மன உணர்வினை வெளிப்படுத்தல் ஆகியன வாழ்த்து எனவும் ஒன்றிலிருந்து மற்றொன்று வேறுபட்டமைகின்றன.

இறையியல்பு (5062); அவன் தனக்கருளியது (3857); அவன் பெருமை (2536) போன்றன வாழ்த்துதற்கு ஏதுவாகின்றன. இறைவனை வாழ்த்தும் பொழுது அவனைச் சார்ந்தவற்றையும் இணைத்து வாழ்த்துதல் காணப்படுகிறது (3871).

---

* வாழி என் ஆண்டவன் வாழி எங்கோன் அருள் வாய்மை என்றும்
வாழி எம்மான் புகழ் வாழி என் நாதன் மலர்ப் பாதங்கள்
வாழி மெய்ச் சுத்த சன்மார்க்கப் பெருநெறி மாண்பு கொண்டு
வாழி இவ்வையமும் வானமும் மற்றவும் வாழியவே. (3871)

மங்களம் என்பது நற்செயல் முடிவில் வாழ்த்துதலைக் குறிக்கும். இது இறைவனைப் புகழும் நிலையிலும் காணப்படுகிறது (2564). பெரியாழ்வாரின் திருப்பல்லாண்டு போன்றமையும் பல்லாண்டு பகுதிகளும் இதன் பாற்படுவனவே.

7. அடியார்*

இறைவனிடம் மிகுந்த ஈடுபாடு கொண்டு, தன்னை அவனிடம் ஒப்படைத்து வாழும் பக்தர்கள் இறையடியார் எனப் படுகின்றனர். இத்தகையவர் இறைவனுக்குச் சமமான சிறப்பினைப் பெறுகின்றனர். அடியாரில் இறைவனைக் காணுதல் இயல்பான ஒன்றாகக் காணப்படுகிறது. எனவே இப்பொருட் கூறு இதனுள் இணைக்கப்பட்டுள்ளது. சுந்தரர் பாடிய திருத் தொண்டத்தொகை, திருவரங்கத் தமுதனாரின் இராமாநுச நூற்றந்தாதி போன்றன இங்கு எண்ணத் தக்கன.

அடியார் இயல்புரைத்தல் (1965:651—656); இறைவன் அவருக்கருளியது (829); அடியாரைப் போற்றல் (3246); அடியாரருட்செயல் (3234); அவரிடம் வேண்டல் (3261); ஏங்கல் (3252); அடியார் சிறப்பு (3266) போன்றன இங்கு நவிலப்படுகின்றன.

8. இறை உடைமை**

இறைவனுக்கு உரியதாக அமைவனவற்றைச் சிறப்பித்துப் பாடுதலை இதனுள் கொள்ளலாம். இறைவனைப் பாடுவதாக அமையும் தசாங்கத்தினை இங்கு எண்ணலாம்.

---

* வண்ணப்பல் மாமலர் மாற்றும்படிக்கு மகிழ்ந்தெமது
திண்ணப்பர் சாத்தும் செருப்படி மேற்கொண்டு தீஞ்சுவைத்
தாய்
உண்ணப் பரிந்துநல் ஊன்தர உண்டு கண் ஒத்துக் கண்டே
கண்ணப்ப நிற்க எனக் கைதொட்டார் எம் கடவுளரே (825)

** தொடுக்கின்றேன் மாலை இது மணிமன்றில் நடிக்கும்
துரை அவர்க்கே அவருடைய தூக்கியகால் மலர்க்கே
அடுக்கின்றோர்க்கருள் அளிக்கும் ஊன்றிய சேவடிக்கே
அவ்வடிகள் அணிந்த திரு அலங்காரக் கழற்கே
கொடுக்கின்றேன் மற்றவர்க்குக் கொடுப்பேனோ அவர்தாம்
குறித்திதனை வாங்குவரோ அணிதரம் தாம் உளரோ
எடுக்கின்றேன் கையில் மழுச்சிற்சபை பொற்சபை வாழ்
இறைவர் அலால் என்மாலைக்கின்றவர் இலை எனவே.
(5794)

9. தலச் சிறப்பு*

இறைவனைப் பாடுங்கால் அவன் எழுந்தருளியிருக்கும் தலங்களைச் சிறப்பித்துக் கூறுவது இஃதாகும். இறைவனைப் புகழு தற்கு ஒரு வழியாக இது பயன்படுகின்றது.

இந்தத் தலம் இத்தகையது எனல் (1962-1-6); போற்றல் (4053); அத்தலத்தில் எழுந்தருளியிருக்கும் இறைவனை நாடுங்கால் ஏற்படும் பயனைக் கூறல் (1357); அத்தலத்தால்தான் பெற்ற சிறப்பு நவிலல் (4053) போன்றன இதனுள் அமைகின்றன.

பிள்ளைத் தமிழ், தூது போன்ற பிரபந்தங்களில் பக்தி, பொருளாகும் பொழுது குறிப்பிட்ட தலத்தின் மகிமை சாற்றல் சிறப்பிடம் பெறுதல் நினைத்தற்பாலது.

10. புராணம்**

இறைவன் தொடர்பான பழங்கதைகள் புராணங்கள் எனப் படுகின்றன. இறைவனின் பெருமை பேசுதற்கு இவை பெரிதும் பயன்படுகின்றன. இவை தனித்த நிலையில் (832) அல்லது ஒன்றுக்கு மேற்பட்டன இணைந்த நிலையில் அமைகின்றன (2781).

11. பக்தி***

இறைவன்மீது கொள்ளும் அன்பின் சிறப்பினை (1 65:232-237) அதனால் அடையும் பயனை [28] நவிலுதல் இங்குக் குறிக்கப் படுகிறது. இறைவனைப் பற்றி நிற்கும் அடியாரின் மிகுந்த களிப்பு நிலையையும் இதன் பாற்படுத்தலாம் [1965: 121-124].

---

* ஊற்றம் உற்றுவெண்
நீற்றன் ஒற்றியூர்
போற்ற நீங்குமால்
ஆற்ற நோய்களே.

** எல்லாம் செயவல்ல சித்தரின் மேவி எழில் மதுரை
வல்லாரின் வல்லவர் என்றறியா முடிமன்னன் முன்னே
பல்லாயிர அண்டமும் பயம் எய்தப் பராக்கிரமித்துக்
கல்லானை தின்னக் கரும்பளித்தார் எம் கடவுளரே. (881)

*** தொண்டடைந்து
பாட்டால் அவன் புகழைப் பாடுகின்றோர் பக்கம்நின்று
கேட்டால் வினைகள் விடை கேட்கும் காண்—நீட்டாமல்
ஒன்னார் புரம்பொடித்த உத்தமனே என்றொருகால்
சொன்னாலுலகத் துயரறுங்காண் (1965;233-235)

## 12. இறையெதிர்ப்புக்கு எதிர்ப்பு*

இறைவன் ஒருவன் இருப்பதை ஏற்றுக் கொள்ளாது அவனை மறுப்பவரை எதிர்த்துரைத்தல் இங்கு எண்ணப்படுகிறது. இது பொதுநிலையில் இறைவனை மறுத்தலை எதிர்த்தல் அல்லது தன், வழிபடு கடவுளை மறுப்பாரை மறுத்தல் என அமைகின்றது. பின்னிலை பிறசமயக் காழ்ப்பிற்கும், கண்டனங்களுக்கும் வழி காட்டியாகிறது எனலாம்.

### இறைக் கொள்கை

இறைவனைப் பாடும்பொழுது, அவன் பற்றிய . உண்மைகள் தத்துவங்கள், உயிர், மனம் போன்ற பலவும் பேசப்படுகின்றன அவை இங்கே எண்ணப்படுகின்றன. அவை, அவரவர் சார்ந்த சமயங்களின் கொள்கைகளுக்கு ஏற்ப வேறுபடுகின்றன.

## 13. உயிரியல்பு**

உயிர்களிடம் அமையும் சில பொதுத் தன்மைகள் இங்கு உயிரியல்பாக எண்ணப்படுகின்றன. உயிர்களை வருத்துவன [2376]; அவற்றால் உயிர்கள் அடையும் துன்பம் [5562]; உயிர்களின் செயல் [5330] போன்றன இதனுள் இடம் பெறுகின்றன.

## 14. மனம்***

பக்திக்கு நிலைக்களனாய் அமைவது மனம். இம்மனத்தின் இயல்பும் (246), செயலும் (1965:557–560) இங்கே பக்திப் பொருட் கூறுகளாய் அமைவதில் சிறப்புக் கொள்கின்றன.

---

* வீட்டுத் தலைவ நின்தாள் வணங்கார் தம் விரிதலை சும்
மாட்டுத்தலை பட்டி மாட்டுத்தலை புன் வராகத் தலை
ஆட்டுத்தலை வெறிநாய்த்தலை பாம்பின் அடுந்தலைகற்
பூட்டுத்தலை வெம்புலைத்தலை நாற்றப் புழுத்தலையே
[2310]

** பண்ணாத தீமைகள் பண்ணுகின்றீரே
பகராத வன்மொழி பகருகின்றீரே
நண்ணாத தீயினம் நண்ணுகின்றீரே
நடவாத நடத்தைகள் நடக்க வந்தீரே
கண்ணாகக் காக்கின்ற கருத்தனை நினைந்தே
கண்ணார நீர்விட்டுக் கருதறியீரே
எண்ணாத தெண்ணவும் நேரும் ஓர்காலம்
எத்தனை கொள்கின்றீர் பித்துலகீரே. (5565)

*** வாழும்படி நல் அருள்புரியும் மருவுந் தணிகைமலைத்தேனைச்
சூழும் கலபமயில் அரசைத் துதியாப் பவமும் போதாமல்
வீழும் கொடியர் தமக்கன்றி மேவா நினைவும் மேவி இன்று
தாழும்படி என்தனை அலைத்தாய் சவலைமனம் நீ சாகாயோ
(243)

15. நிலையாமை*

பாரினில் இறைவன் ஒருவனையன்றி ஏனைய நிலைத்து நிற்கவோ, என்றும் ஒன்று போலிருக்கவோ முடியாது என்பதனை நிலையாமைத் தத்துவம் உணர்த்துகின்றது. இளமை, யாக்கை, செல்வம் போன்றவற்றின் நிலையாமையினை உணர்ந்து நிலை பெற்ற இறைமையை நாடவேண்டும் என்பதால் அனைவராலும் பத்திப் பனுவல்களில் நிலையாமை போற்றப்படுகின்றது.

16. சிற்றின்ப வெறுப்பு**

இறைவனை அடைவதற்குத் தடையாய் நிற்கும் காரணி களுள் சிற்றின்பம் ஒன்றாகும். எனவே அதன் இழிவு இங்குப் பேசப்படுகிறது.

17. அறிவுரை***

பக்திக் கவிஞர் அனைவரும் தாம் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம் எனும் நினைவுடையவராக, உலகை,தனக்குப் பேரின்பம் தந்த ஆண்டவனிடத்து ஆற்றுப்படுத்துவதில் கவனம்

---

* மாகாதல்
பெண்டிருந்து மாழ்கப் பிணங்கொண்டு செல்வாரைக்
கண்டிருந்தும் அந்தோ கலங்கிலையே—பண்டிருந்த
ஊரார் பிணத்தின் உடன் சென்று நாம்மீண்டு
நீராடல் சற்றும் நினைந்திலையே– சீராக
இன்றிருந்தார் நாளைக்கிருப்பது பொய் என்றறவோர்
நன்றிருந்த வார்த்தையும் நீ நாடிலையே. *(1965:462-465)*

** புண்ணைக் கட்டிக்கொண்டே அதன்மேல் ஒரு
புடவைக்கட்டிப் புதுமைகள் காட்டிடும்
பெண்ணைக் கட்டிக்கொள்வார் இவர் கொள்ளிவாய்ப்
பேயைக் கட்டிக் கொண்டாலும் பிழைப்பர் காண்
மண்ணைக் கட்டிக்கொண்டே அழுகின்றஇம்
மடையப் பிள்ளைகள் வாழ்வினை நோக்குங்கால்
கண்ணைக் கட்டிக் கொண்டுர் வழிபோம் கிழக்
கழுதை வாழ்வில் கடை எனல் ஆகுமே. *[2778]*

*** சாதியிலே மதங்களிலே சமய நெறிகளிலே
சாத்திரச் சந்தடிகளிலே கோத்திரச் சண்டையிலே
ஆதியிலே அபிமானித் தலைகின்ற உலகீர்
அலைந்தலைந்து வீணே நீர் அழிதல் அழகலவே
நீதியிலே சன்மார்க்க நிலைதனிலே நிறுத்த
நிருத்தமிடும் தனித்தலைவர் ஒருத்தர் அவர்தாமே
வீதியிலே அருட்சோதி விளையாடல் புரிய
மேவுகின்ற தருணம்இது கூறுகின்றேன் உமையே.
*[5566].*

செலுத்துகின்றனர். அவர் ஆற்றுப்படுத்தும் வழி அறிவுரையாக, அறம் போதித்தலாக அமைகிறது. இறைவனை அடைதற்குரிய வழிகள் யாவை என்பன அறிவுரைகளில் முதன்மையானவையாக அமைகின்றன. உயிர்களை இறைவனுடன் ஐக்கியப்படுத்துதல் என்பது முக்கிய நோக்கமாதலின், பக்திப் பொருளுள், அறம் இடம் பெறுகிறது. இது இறைவனோடு ஒன்றி நிற்பதனால் இங்கு இறைக் கொள்கையின் கீழ் எண்ணப்படுகிறது.

பக்தியிலக்கிய மரபில் அறிவுரைகள் இரு நிலைகளில் அமைகின்றன. ஒன்று தன் நெஞ்சிற்குக் கூறுதல்; மற்றொன்று உலகிற்கு உரைத்தலாம். யாருக்குக் கூறுதல் என்பதில்தான் வேறுபாடே தவிர, கூறும் கருத்திலோ, நோக்கிலோ வேறுபாடில்லை. பக்திப் பாடல்கள் தன்னுணர்வின் வடிகாலாதலின் பிறருக்கு உரைக்கும் அறிவுரைகளைக் கூடத் தம் நெஞ்சின் வழி உரைக்கின்றனர் எனலாம். தன்னைத் திருத்திக் கொண்டுதான், பிறரைத் திருத்த வேண்டும் என்ற நோக்கத்தால் நெஞ்சிற்குரைத்தல் காணப்படுகிறது எனவும் கொள்ளலாம்.

இவ்வறிவுரைகள், இறைவனை அடைதற்குரிய வழிகள் *[367, 1352]*; மனதினை நல்வழிப்படுத்தற்குரியன *[1128 1280[*; வாழ்வில் கடைப்பிடிக்க வேண்டியன *[4289, 5527]* போன்றவற்றினை நவில்கின்றன.

இவ்வறிவுரைகளை உலகியல் சுட்டல் *(848)*; இறையியல்பினை நவிலல் *(5491)*; உயிரியல்பு காட்டல் *(5548)*; அடியார்க்கு அவன் அருளியது சுட்டல் *(994)*; புராணம் தரல்*(1965:256—262)* இறை வழிபாட்டால் கிடைக்கும் பயன் கூறல் *(754)*; நிலையாமை உணர்த்தல் *(5332)*; உறுதி கூறல் *(883)*; விலக்க வேண்டியவற்றின் இழிவு காட்டல் *(5608)*; தாம் அறிவுறுத்துவதன் காரணம் தரல் (5594) போன்றவற்றால் வலியுறுத்தக் காணலாம்.

18. முன் நூற் கருத்துகள்*

தம்முடைய கருத்தினை, கொள்கையினை வலியுறுத்துவதற்காக அல்லது உறுதிப்படுத்துவதற்காக, அவற்றோடும் ஒத்த பிறர் கருத்துகளை எடுத்தியம்புதல் வழக்கு. அதனைப் பக்தியிலக்கியத்துள்ளும் பரவலாகக் காண முடிகிறது. இது முன்னூலாசிரியருக்குத் தம் மதிப்பாகவும் அமைகிறது. பிற நூலாசிரியர் எண்ணங்களை அவ்வாறே அவர்தம் மொழியாக அல்லது மாற்றித் தம் மொழியாகத் தருதல் அமைகிறது.

வள்ளுவர் *[1965:432 — 435]*; சம்பந்தர் *[1965:525]*; மாணிக்கவாசகர் *[1312]*; தாயுமானவர் *(353]* போன்றோர் மொழிகள் திருவருட்பாவில் காணப்படுகின்றன.

### தன்மை

பக்திப் பாடல்களில் தன்னுணர்ச்சிக் கவிதைகள் மிகுதியாகக் காணப்படுகின்றன. இறைவனின் அருளைப் பெறவேண்டும்; அவன் புகழினை ஓத வேண்டும், உலகினை அவன்பால் திருப்ப

---

* இச்சைவேறில்லை இங்கென் கருத்தெல்லாம்
என்னுள் அமர்ந்தறிந்தே இருக்கின்றீர்
விச்சை எலாம் வல்லநுந்திருச் சமூக
விண்ணப்பம் என்னுடல் ஆதியை நுமக்கே
நிச்சலும் தந்தனன் என்வசம் இன்றி
நின்றனன் என்றனை நீர் செய்வ தெல்லாம்
எச்செயல் ஆயினும் சென்று கொள்கிற்பீர்
எனைப்பள்ளி எழுப்பி மெய் இன்பந் தந்தீரே *[4724]*,

எனும் பாடலில் மணிவாசகரின்,

அன்றே யென்றன் ஆவியும்
உடலும் உடைமை யெல்லாமும்
குன்றே யனையாய் என்னையாட்
கொண்ட போதே கொண்டிலையோ
இன்றோரிடையூ றெனக் குண்டோ
எண்டோள் முக்கண் எம்மானே
நன்றே செய்வாய் பிழைசெய்வாய்
நானோ இதற்கு, நாயகமே [குழைத்த பத்து: 7]

எனும் பாடற்கருத்து பொதிந்திருக்கக் காணலாம்.

வேண்டும் எனும் மூன்று நோக்கங்களுள் முதலாவது மற்றிரண்டி னைவிட மேலோங்கி நிற்பது, தன்னுணர்வுப் பாடல்களின் மிகுதிக்குக் காரணமாகும். மற்றும், ஏனையவற்றினையும் தன்னு ணர்வின் வழிக்காட்டற்கு இயலுதலும் குறிப்பிடற்பாலது.

அகப்பாடலில் அமையும் தன்னுணர்வுப் பாடல்களில், புலவர் அவ்வப் பாத்திரமாகத் தம்மைக் கற்பித்துக்கொண்டு பாடுகின் றார். அத்தகு கற்பனைக்கு இடமில்லை. புலவர் நேரிடையாகவே நிற்கின்றார். வாழ்க்கை வரலாற்றுக் குறிப்புகள் பக்தியுள் இடம் பெறலுக்கு இதுவும் ஒரு காரணமாகும்.

தனிப்பாடல்களில் வரும் தன்னுணர்வுப் பாடல்களில் பிற பொருட் கூறுகளிருப்பினும், சிறப்பாகத் தம்மைக் கவர்ந்தவரின் இழப்பிற்கு வருந்துவது காணப்படுகிறது.

புலவர், தம்மைப் பாட்டுடைத் தலைமையாக்கிப் பாடியுள்ள பாடல்களே இங்குத் ‘தன்மை’ப் பாடல்கள் எனக் கருதப்பட் டுள்ளன. இது இருநிலைகளில் அமைகிறது. ஒன்று தலைவனாக நேரடியாக நின்று பாடுதல்; மற்றொன்று தன்னைத் தலைவி யாக்கி அகப்பொருள் மரபில் பாடுதல் என்பனவாம்.

### நேரிடை நிற்றல்

பாடலாசிரியர் யாரோ, அவரே தம்முடைய எண்ணம், செயல், நோக்கம், விருப்பம், வேண்டல் முதலானவற்றைத் தாமே முன்னின்று மொழிவது நேரிடை நிற்றலாம். புலவர், நான், தான் எனும் நிலைகளில் பாடியுள்ள பாடல்கள் அனைத்திலும் அவை அப்புலவரையே [மாணிக்கவாசகர் என்றோ, தாயுமானவர் என்றோ] குறிப்பிட்டு நிற்கும்.

### 19. நம்பிக்கை*

ஒன்றன் உண்மையினை ஐயத்திற்கிடமின்றி, பிறர் முரண் பட்ட எண்ணம் கொள்ளினும் அதனைக் கருத்துட் கொளாது,

---

* படுவேன் அல்லேன் நமன்தமரால் பரிவேன் அல்லேன்
பரமநிலை
விடுவேன் அல்லேன் என்னையும் நீ விடுவாய் அல்லை இனிச்
சிறிதும்
கெடுவேன் அல்லேன் சிறியார் சொல் கேட்பேன் அல்லேன்
தருமநெறி
அடுவேன் அல்லேன் திருஒற்றி அப்பா உன்றன் அருள்
உண்டே. (913)

ஒருவர் ஏற்றுக் கொள்ளுதல் நம்பிக்கையாகும். அது செய்தி யாகவும் இருக்கலாம், பொருளாகவும் அமையலாம். ஆயின் அவற்றிற்குப் பருப்பொருள் சான்று என்பது கிடைத்தற்கரியது. மன உணர்வே நம்பிக்கைக்கும், நம்பிக்கையின்மைக்கும் காரண மாக அமைகிறது.

கடவுள்மீது பற்றுக் கொள்வதற்கு, முதலில் அப்படி ஒருவன் இருக்கின்றான் என்பதிலும்; அவனைப் பற்றிய கொள்கைகளிலும் [எண்ணங்களிலும்] நம்பிக்கைத் தேவையாகின்றது. பின் அப் பற்று, ஆழ்ந்து செல்வதற்கும். அவன் அருள்மீது நம்பிக்கை கொள்ளுதல் இன்றியமையாததாகிறது. இங்கு, இறை நம்பிக்கை என்பது இறைவனுடன் கொள்ளும் நம்பிக்கையாக விரியக் காண லாம்.

யார்மீது யாருக்கு, எதில் நம்பிக்கை என்பன இப்பொருட் கூறின் தோற்றங்களாகின்றன. இறை நம்பிக்கைக்குரிய காரணம் [1343]; சமயக் கொள்கைகளில் உள்ள நம்பிக்கை [911] முதலி யன இங்கு வெளிப்படுகின்றன.

## 20. அடைக்கலம் புகுதல்*

இறைவன்மீது கொண்டுள்ள நம்பிக்கையின் விளைவே அவனிடம் அடியார்களை அடைக்கலம் புகத் தூண்டுகிறது. தன்னைத் துன்புறுத்தும் ஒன்றிலிருந்து அல்லது ஒருவரிடமிருந்து தன்னைக் காப்பதற்காக, அல்லது தன்னால் இயல்பாகப் பெற முடியாத ஒன்றைப் பெறுவதற்காக அதற்கு வல்லமை படைத்த ஒருவரிடம் தஞ்சம் அடைதல் அடைக்கலம் புகுதலாம்.

யாரிடம், யார், ஏன் அடைக்கலம் புகுதல் நிகழ்கின்றது என்பன இங்கு இப்பொருட்கூறினை உருவாக்குகின்றன.

இறைவனிடம் அடைக்கலம் புகுதலானது, அவனைப் போற்றுதல் [1966]; தம் நிலை சாற்றல் [642] இறைவன் தமக் கருளியது கூறல் [4874] முதலானவற்றால் உணர்த்தப்படுகிறது.

---

* பூவே மணமே சரணம் சரணம்
பொருளே அருளே சரணம் சரணம்
கோவே குகனே சரணம் சரணம்
குருவே திருவே சரணம் சரணம்

## 21. உள உறுதி*

இறைவனை நம்பினால் மட்டுமே அன்றி அவனிடம் அடைக்கலம் புகுதலினாலோ ஒருவர் அவனை எளிதில் அடைந்துவிட முடியாது. அவற்றில் ஆழ்ந்த உறுதிப்பாடும், பொறுமையும் தேவையாகும். கொண்ட நோக்கில் மனந்தளராது எவ்வகைச் சூழலையும் வென்று மேற்செல்வதே உள உறுதியாகும். இறையன்பை வளர்த்துக் கொள்வதற்கும், விடாது பற்றி நிற்பதற்கும் இஃது தேவையாகிறது. இதற்கு ஏற்படும் இடையூறினைத் தாங்கி நிற்பதற்கும் தேவையாம். எனவே இது பக்தி நூல்களில் பெரிதும் போற்றப்படுகிறது. இறை நம்பிக்கையுடன், தான் கொண்ட கொள்கையின் மீதுள்ள உறுதிப்பாடும் இங்குக் காட்டப்படுகிறது [4].

## 22. உட்பகை எதிர்வு**

இறைவனை அடையத் தடையாய் நிற்பவற்றுள் பல, ஒவ்வொருவரும் தம்முள் கொண்டுள்ள தேவையற்ற சினம், ஆணவம்,

---

தேவே தெளிவே சரணம் சரணம்
சிவசண்முகனே சரணம் சரணம்
காவேர் தருவே சரணம் சரணம்
கந்தா சரணம் சரணம் சரணம். [35]

* நாயினும் கடையேன் என்செய்வேன் பிணியால் நலிகின்ற நலிவினை அறிந்தும்
தாயினும் இனியாய் நீ வரவு தாழ்த்தனை என்கொலென் றறியேன்
மாயினும் அல்லால் வாழினும் நினது மலரடி அன்றி ஒன்றேத்தேன்
காயினும் என்னைக் கனியினும் நின்னைக் கனவிலும் விட்டிடேன் காணே [703].

** அகங்காரம் எனும் பொல்லா அடவாதிப் பயலே
அடுக்கடுக்காய் எடுக்கின்றாய் அடுத்து முடுக்கின்றாய்
செகங் காணத் தலைகாலும் தெரியாமல் அலைந்து
திரிகின்றாய் நின்செபந்தான் சிறிதும் நடவாது
மகங்காண அடங்குக நீ அடங்காயேல் கணத்தே
இருந்த இடம் தெரியாதே எரிந்திடச் செய்திடுவேன்
சுகங்காண என்றனை நீ அறியாயோ நான்தான்
சுத்தசிவசன்மார்க்கம் பெற்ற பிள்ளை காணே [4841]

ஆசை போன்ற பண்புகளாகும். இவை உட்பகைகளாகக் கருதப் படுகின்றன. தன்னுள்ளே அடங்கி நின்று, தன் நோக்கத்தைத் தடை செய்வதாய், தன் உயர்விற்குத் தாழ்ச்சி செய்வதாய் இவை அமைதலின் உட்பகை எனப்படுகின்றன. இவற்றை வென்றாலே இறைவனின் திருவடி நிழலைப் பெறமுடியுமாதலின் உட்பகை எதிர்ப்புப் போராட்டத்தைப் பக்திப் புலவர் மேற்கொள்கின்றனர்.

உட்பகைவரின் செயலும், அவை ஒருவரைக் கெடுக்கும் நிலைகளும் இப்பொருட் கூறினை ஆக்குபவைகளாக அமைகின்றன.

**23. தன்னிலை**

தம்மைப்பற்றி, தம் இயல்புகள் பற்றி, பக்திக் கவிஞர் பரவலாகப் பேசுகின்றனர். தம் உருவம், இயல்பு, இறைத்தொடர்பு, இறையருளின் முன் தம் நிலை, இறையருளின் பின் தம் நிலை, கைமாறின்மை, இறையருளின் காரணம் என்பனவற்றை உள்ளடக்குவதாக இது அமைகிறது. இவற்றை, (அ) பொதுவாக அமைவன, (ஆ) இறையருளின் முன், (இ) இறையருளின் பின் என முந்நிலைகளின் பாற்படுத்தி நோக்கலாம்.

(அ) பொதுவாக அமைவன*: இறையருளின் முன்னும் பின்னும் ஒன்றாக அமைவனவாகக் காணப்படுவன இதனுள் இடம்பெறுகின்றன. தம் உருவ வருணனை (847): தமக்கென்று உரிய தனித்த இயல்புகள் [3461]; இறைவனுடன் உள்ள தொடர்பு [2143] முதலியன இங்கு அமைகின்றன. தமக்கென்று உரிய தனித்த இயல்புகள் என்பது, ஒவ்வொருவரும் தமக்கெனக் கொண்டுள்ள நடையுடைபாவனைகளின் தனித்தன்மை(Nature) ஆகும். அவை, விருப்பம் [3394]; வெறுப்பு (3441); பண்பு [5374]; நடைமுறை [3476] போன்றன இறைவனுக்கும் தமக்கும் உள்ள தொடர்பினைச் சுட்டிப் பாடுவதில் பக்திப் புலவரிடையே

---

* என்னுயிர்நீ என்னுயிர்க்கோர் உயிரும் நீ என்
இன்னுயிர்க்குத் துணைவன் என்னை ஈன்ற
அன்னைநீ என்னுடைய அப்பனீ என்
அரும்பொருள் நீ என்னிதயத்தன்பு நீ என்
நன்னெறிநீ எனக்குரிய உறவு நீ என்
நற்குரு நீ எனைக் கலந்த நட்பு நீ என்
தன்னுடைய வாழ்வு நீ என்னைக் காக்குந்
தலைவன் நீ கண்மூன்று தழைத்த தேவே. (2138)

மிகுந்த விருப்புக்காணப்படுகிறது. இறைவன் தமக்கு, அனைத்து மாய் நிற்றலுடன், தம் செயல்கள், சிறப்புகள் அனைத்திற்கும் உரிமையுடையவனாகவும் அவன் நிற்பதும் இயம்பப்படுகிறது 2143).

(ஆ) இறையருளின் முன்* : இறையருளுக்காக ஏங்கி நிற்கும் புலவர், தம்மை மிகத் தாழ்வாக, தம் நிலையினின்றும் இறங்கிப் பேசுதல் மரபு. உயிர்களிடததே காணப்படும் அனைத்துக் குற்றங் குறைகளையெல்லாம் தம்மிடம் ஏற்றிக் கூறுதல் இயல்பாக அமைகிறது. இதுவே இறையருளின் முன் தம் நிலையாகக் கூறுபவற்றுள் மிகுதியாகக் காணப்படுகிறது. (2765) மற்றும் இறைவன் திருவருளைக் குறிக் கொள்ளாது நிற்றல் (401); அதற்குக் காரணம் உரைத்தல் (2344) ஆகியனவும் உள.

(இ) இறையருளின் பின்** இக்கூறு இறையருள் பெறுவதன் முன் தம் நிலை எப்படியிருந்ததோ அதனின்றும் முற்றிலும் மாறு பட்டதாக அமைதலைக் காட்டுகிறது. தாம் மேனிலை அடைந் ததை நவிலல் (5222); இறையருளால் கிடைத்த பேறுகளைப் பேசுதல் (4903, 5442); இறைவனின் அருள் கிடைத்தபோதும், அதன் பின்பு அதனுள் ஊறி நின்றபொழுதும் கிடைத்த பேரின்பத்தை வடித்தல் [3897] போன்றன இதன்பாற் சேர்கின்றன.

இறையருளால் தாம் பெற்ற பேற்றிற்கும் அதனால் அடைந்த இன்ப நிலைக்கும், கைம்மாறாக இறைவனுக்குத் தாம்

---

* நன்றறியேன் தீங்கனைத்தும் பறியேன் பொல்லா
நங்கையர் தம் கண்மாய நவைவலையச் சற்றும்
வென்றறியேன் கொன்றறிவார் தம்மைக் கடும்
வேடனேன் திருத்தணிகை வெற்பின் நின்பால்
சென்றறியேன் இலையென்பதறிவேன் ஒன்றும்
செய்தறியேன் சிவதருமம் செய்வோர் நல்லோர்
என்றறியேன் வெறியேன் இங்கந்தோ அந்தோ
ஏன் பிறந்தேன் புவிச் சுமையா இருக்கின்றேனே.
(296)

** ஒழித்தேன் அவலம் அச்சம் எலாம் ஓடத்துறந்தேன் உறுகண் எலாம்
கழித்தேன் மரணக்களைப்பற்றேன் களித்தேன் பிறவிக் கடல் கடந்தேன்
பழித்தேன் சிற்றம்பலம் என்னாப்பாட்டை மறந்தேன் பரம்பரத்தே
விழித்தேன் கருத்தின்படி எல்லாம் விளையாடுதற்கு விரைந்தேனே (5481)

திருப்பிச் செய்ய ஏதும் இல்லையே என ஏங்கும் கைமாறின்மைக் கூற்றும் (920); இறையருளைத் தாம் பெற்றமைக்குக் காரணம் காட்டும் கூற்றும் (5485) இதனுள் இணைகின்றன.

## 24. எதிர்கால நிலை*

தம்முடைய எதிர்காலம் எப்படி இருக்கும் எனத் தாம் எண்ணுவது இப்பொருட் கூறாம். மிக அருகிய நிலையில் இது காணப்படுகிறது. தம் நிலை பற்றிய எண்ணமாக இது அமைதலின் அதன் பின் வைக்கப்பட்டுள்ளது.

## 25. இரங்கல்**

இறைவனைத் தேடி நிற்கும் அடியார்கள் தம்முடைய இழிநிலைக்காக வருந்திச் செய்வகை அறியாது மயங்கி நிற்றல் இரங்கலாகும். இதனைப் புலம்பல் எனவும் கொள்ளலாம்.

இவ்விரங்கல், அகம், புறம், தனிப்பாடல் இவற்றினின்றும் மாறுபட்டது. அகப் பாடலில் நெய்தல் திணையின் உரிப்பொருளாக அமையும் இரங்கலில் தலைவி, தலைவனின் வரவிற்காக இரங்கி நிற்றல் அமைகிறது. இங்குத் தலைவனுக்காக ஆன்மா காத்திருந்தபொழுதிலும் அதனை அடைவதற்குத் தடையாயிருக்கும் தன்னுடைய குறைபாடுகளைச் சுட்டி வருந்துதல் பொருளாக அமைகிறது.

புறப்பாடல்களில் அமையும் கையறுநிலைப் பாடல்களும், தனிப்பாடல்களில் அமையும் இரங்கற்பாக்களும், ஒருவரின் பிரிவிற்கு வருந்துவதாக அமைவனவாகும். இங்கு இறைவனின் பிரிவிற்கு வருந்தினாலும் அவனை அடைய முடியும் என்ற நம்பிக்கை உண்டு. அங்கு மீண்டும் இணைவு இன்மையாகிய நிலைத்த பிரிவுத்துயர் பொருளாகிறது.

---

* எவ்வுலகும் அண்டங்கள் எத்தனையும் நான் காண
இவ்வுலகில் எந்தை எனக்களித்தான்—எவ்வுயிரும்
சன்மார்க்க சங்கம் தனை அடையச் செய்வித்தே
என்மார்க்கம் காண்பேன் இனி. (5514)

** வெம்புழுயிருக் கோருறவாய் வேளைநமனும் வருவானேல்
தம்பி தமையன் துணையாமோ தனையர் மனைவி
—வருவாரோ
உம்பர் பரவும் திருத்தணிகை உயர்மாமலை மேலிருப்
—பவர்க்குத்
தும்பைக் குடலை எடுக்காமல் துக்க உடலை எடுத்தேனே
(520)

இவ்விரங்கல் தமக்காக இரங்குதல், பிறருக்காக இரங்குதல் என இரு நிலைகளில் அமைகிறது. தமக்காக இரங்கும்பொழுது இறை வணக்கம் புரியாது குறையுடன் வீணே நாட்களைக் கழித்தமை (1372); தன் அறியாமை (3316); நற்பண்புகளின்மை (1301); நல்லோர் நட்பின்மை (600); எமன் வருகைக்கு அஞ்சும் அச்சம் (105) போன்றன காரணமாகின்றன. பிறருக்காக இரங்குதல் அவர் படும் துன்பத்திற்காகவும் (5019); இறையருளினை அவரும் பெறுதற்காகவும் (4626) அமைகின்றது.

இத்தகு இரங்கல்கள் ஒருவரிடம் (இறை) கூறுவது போன்று அமையுங்கால் முறையீடு எனக் குறிக்கலாம் (603).

**26. விழைவு***

ஒவ்வொருவரும் தாம் எப்படி வாழவேண்டும்; எவற்றைப் பெறவேண்டும் என்பனவற்றில் அவா கொள்கின்றனர். பக்திப் புலவர் தம் அவாவினைத் தம் விழைவாகப் பாடல்களில் உணர்த்துகின்றனர். இறைவனை வாயாரப் பாடிப் பரவ வேண்டும்(231);இறையடியாருடன் இணைந்து இணையற்ற இன்ப வாழ்வு வாழவேண்டும் (238); இறைவனுடன் இணைய வேண்டும் (2848); நற்பண்புகளைப் பெறல் வேண்டும் (3407) போன்றன பொதுவாக இப்புலவரின் விழைவுகளாக அமைகின்றன.

**27. வேண்டல்****

தான் விழைந்த ஒன்றை உரியவரிடம் கேட்டு நிற்றல் வேண்டலாகும். இதனை விண்ணப்பம் என்றும் நவிலலாம்.

---

* எவ்வுயிர்த் திரளும் என்னுயிர் எனவே எண்ணி நல் இன்புறச் செய்யவும்
அவ்வுயிர்களுக்கு வரும் இடையூற்றை அகற்றியே அச்சம் நீக்கிடவும்
செவ்வையுற்றுனது திருப்பதம் பாடிச் சிவசிவ என்று கூத்தாடி
ஒவ்வுறு களிப்பால் அழிவுறாதிங்கே ஓங்கவும் இச்சைகாண் எந்தாய். (3403)

** ஆறாத்துயரம் தருங் கொடியார்க் காளாய் உழன்றிங் கலையாதே
கூறாப்பெருமை நின் அடியார் கூட்டத்துடன் போய்க் குலாவும் வண்ணம்
தேறாப் பொருளாம் சிவத்தொழுகும் தேனே தணிகைத் திருமலைவாழ்
மாறாச்சுகமே நின்திருத்தாள் அடியேன் முடிமேல் வைப்பாயே. (265)

மானிடரது எண்ணங்களை நிறைவேற்றுபவர் இறைவனாக அடியாரால் கருதப்படுதலின் பக்திப் பாடல்களில் வேண்டல் இடம் பெறுகிறது. இதுவும் தமக்காக வேண்டல், பிறருக்காக வேண்டல் என இரு வகைப்படுகிறது.

தமக்காக வேண்டல் இவ்வுலக வாழ்விற்குத் தேவையானவை யாகவும், இறையுடன் கலத்தற்கு வேண்டப்படுவனவாகவும் அமைகின்றது. நோய் நீங்க வேண்டும் (1255); சிறுமையுற்றோர் பால் செல்லக் கூடாது (2247); உள்ளத்துள் பயம், இடர்கள் ஆகியன நீங்க வேண்டும் (3541)போன்றன இவ்வுலக வாழ்விற்குத் தேவையாகின்றன. மெய்ஞ்ஞானம் வேண்டும் (4679); இறைவன் திருத்தாள் தம் முடியினை அழகு செய்ய வேண்டும்(262);இருளுடை பவக் கடலினின்றும் கரையேற்றவேண்டும் (2170) போன்றன இறைவனுடன் கலத்தற்கு வேண்டப்படுவனவாக அமைகின்றன.

உன்னதமான வாழ்வு வேண்டுவோர் தமக்கு மட்டுமின்றிப் பிறரும் அதனைப் பெறுதலை விரும்புவர். ஆன்றோர் உலகின் மேனிலைக்கு விரும்பி நிற்றல் இயல்பு. இவ்வாறு உயிர்களுக்காக இறைவனிடம் வேண்டிநிற்றல், பிறருக்காக வேண்டுதலின் கண் அடங்கும். உயிர்கள் நற்பண்புகளைப் பெறல் (4083); நல்வாழ்வு அடைதல் (5382) போன்றன இங்கு வேண்டப்படுகின்றன.

இவ்வேண்டல்கள், இறைவனிடம் சரண் புகுதல் [2369]; வஞ்சினம் உரைத்தல் (3538); இறை தமக்கருளியது காட்டல் [4176]; தம்நிலை கூறல்(3639); உறுதி கூறல்[3365]; இறையியல்பு காட்டல் [1168]; போற்றல் [262]; உலகியல் பேசல் [3386]; புராணம் சுட்டல் [2516]; இறையடியாருக்கு அருளியது காட்டல் [2516] முதலானவற்றின் துணைகொண்டு நிற்கின்றன.

## 28. ஏங்கல்*

ஒன்றைக் குறித்து அது கிடைக்கப் பெறாவிடின் அதை நினைந்து நினைந்து மனம் வாடுதல் ஏங்கலாகும். விருப்பங்கள் நிறைவேறாத நிலையில், விருப்பத்தின் வேகம் அதிகரிக்கும்

* கொடிய நச்சமுதாக்கிய உமக்குக்
  கொடியனேனை ஆட்கொள்ளுதல் அரிதோ
அடியர் தம் பொருட் டடிபடுவீர் எம்
  ஐயனும்மடிக் காட்பட விரைந்தேன்
நெடிய மால் அயன் காண்கிலரேனும்
  நின்று காண்குவல் என்றுளம் துணிந்தேன்
பொடிய நீறணிவீர் ஒற்றி உடையீர்
  பொய்யன் என்னில் யான்போம் வழி எதுவோ. [1084]

நிலையில் இந்நிலை ஏற்படுகிறது. ஒன்றைப் பெற விழைவதும், பெறாத காலையில் அதற்காக ஏங்குவதும் உயிர்கள் இயல்பு. புலமையாளரிடம் அஃது கவிதையாகக் கனிகிறது. உயிர்கள் உலகயின்பங்களுக்காக ஏங்க, ஆன்றோர் இறையருளுக்காக ஏங்குகின்றனர்.

எதிர்கால நிலை என்னாகுமோ என்ற வேதனை (369); நீண்ட காலமாகியும் இறையருள் கிட்டாமை (1319); தம் மனத் தாழ்வு (862) போன்றவை இப்பொருட் கூறினைத் தோற்று விக்கின்றன.

இப்பொருட் கூறும், இறையியல்பு காட்டி (1178); இறை வனைப் போற்றி (1341); தம் நிலைக்கு இரங்கி (1319); தமக்கும் இறைக்கும் உள்ள தொடர்பு உணர்த்தி [2767]; அடியாருக்கு அருளியது காட்டி [953]; புராணம் பேசி [1162]; உலகியல் சுட்டி [574] எனப் பலவற்றின் துணை கொண்டு வெளியிடப்படுகிறது.

இவ் ஏங்கல் உச்சநிலை அடையும்பொழுது வஞ்சினம் மொழியவும்* வசை பாடவும்** வைக்கின்றது. வசைபாடல் என்பது நிந்தாத்துதியாக அமைகிறது. பக்திக் கவிஞர் தம் பக்தியின் உச்சநிலையில் இவ்வாறு இறைவனை நிந்தனை செய்யவும் உரிமை பெறுகின்றனர்.

---

* பெறுவது நுமை அன்றிப் பிறிதொன்றும் விரும்பேன்
பேசல் நும் பேச்சன்றிப் பிறிதொன்றும் பேசேன்
உறுவது நும் அருளன்றிப் பிறிதொன்றும் உவவேன்
உன்னல் உம்திறன் அன்றிப் பிறிதொன்றும் உன்னேன்
மறுநெறித் தீர்த்தெனை வாழ்வித்துக் கொண்டீர்
வள்ளலே நும் திருவரவு கண்டல்லால்
அறுசுவை உண்டி கொண்டருந்தவும் மாட்டேன்
அருட்பெருஞ் சோதியீர் ஆணை நும் மீதே. [3791]

** தண்ணார் நீபத் தாரானொடும் எம்தாயோடும் தான் அமர்கின்ற
கண்ணார் கோலம்கண்டு களிப்பான் கருதும் எமக் கொன்றருளானேல்
பண்ணார்இன் சொல் பதிகம் கொண்டு படிக்காசளித்த பரமன் ஓர்
பெண்ணார் பாகன் ஒற்றித் தியாகப் பெருமான் பிச்சைப் பெருமானே. [775]

## 29. இறையருளியது*

தன்னுடைய வேண்டல்களுக்கும், ஏங்கல்களுக்கும் செவி சாய்த்து இறைவன் அருளியவற்றைப் பெருமையுடன் இவர்கள் பாடுகின்றனர். இறைவன் தம்மை ஆட்கொண்ட விதம் [455]; தவிர்த்த இன்னல்கள் [4137] அவனது அருளுரைகள் [3679] போன்றன இங்குச் சிறப்பிக்கப்படுகின்றன.

## 30. இறையருள் வியப்பு**

தம்முடைய விருப்பிற்காக, இறையருளுக்காக ஏங்கிய ஏக்கம், அவை கிடைத்தவுடன் வியப்பாக மாறுகிறது. தம்மையும் ஒரு பொருட்டாகக் கருதிய பெருமையை எண்ணிச் சிந்தை களிக்க, அது வியப்பாகப் பாடல்களில் வெளிப்படுகின்றது. இவ்வியப்பு மொழி, திருக்காட்சி கண்ட களிப்பில் அதனைக் கூறவியலா நிலையிலும் (2773); அவன் அருளியவற்றை நினைக்குந்தொறும் இடம் பெறுகிறது. [4754].

## 31. தற்புகழ்ச்சி***

தம்மைத் தாமே வியந்து போற்றிக் கொள்ளும் தற்புகழ்ச்சி, மானிடரின் நற்பண்பிற்கு இழுக்கான ஒன்றாகப் பொதுவாகக் கருதப்படினும் பக்தியில் அது சிறப்பிடம் பெறுகிறது. இறைவ

---

* உடுத்த துகில் அவிழ்த்து விரித்தொரு தரையினில் தனித்தே
உன்னாதும் உன்னி உளத்துறு கலக்கத்தோடே
படுத்தயர்ந்த சிறியேன்றன் அருகணைந்து மகனே
பயமுனக் கென் என்றென்னைப் பரிந்து திருக்கரத்தால்
அடுத்தணைத்துக் கொண்டெழுந்துபோய்ப் பிறிதோர் இடத்தே
அமர்த்தி நகைத்தருளிய என் ஆண்டவனே அரசே
தொடுத்தணி என்மொழி மாலை அணிந்து கொண்டென் உளத்தே
சுத்தநடம் புரிகின்ற சித்த சிகாமணியே. [4762]

** கண்டேன் களித்தேன் கருணைத்திரு அமுதம்
உண்டேன் உயர்நிலைமேல் ஓங்குகின்றேன்—கொண்டேன்
அழியாத் திருஉருவம் அச்சோ எஞ்ஞான்றும்
அழியாச் சித்றம் பலத்தே யான் [3896].

*** நோவாது நோன்பெனைப்போல் நோற்றவரும் எஞ்ஞான்றும்
சாவாவரம் எனைப்போல் சார்ந்தவரும் தேவாநின்
பேரருளை என்போல் பெற்றவரும் எவ்வுலகில்
யார் உளர் நீ சற்றே அறை [5624]

னால் ஆட்கொள்ளப் பெற்ற நிலையில், அவனே அனைத்துமாய் தமக்கு நிற்கும் நிலையில், உலகில் பிற எதவும் எமக்குத் தேவை யில்லை என்ற கருத்தில், விருப்பு வெறுப்பற்ற மனநிலையில் தோன்றும் இறுமாப்பில் இது எழுகிறது.

32. பிறசமயக் காழ்ப்பு*

ஒன்றன் மீது பற்று அதிகரிக்கும் பொழுது அதற்கு எதிரி-டையான மற்றொன்றின்மீது காழ்ப்புக் கொள்ளுதல் இயல்பு. இக்காழ்ப்பு பக்தி நிலையிலும் அவரவர் சமயத்திற்கு அப்பாற் பட்ட பிறவற்றின் மீது காணப்படுகிறது.

33. தன் வரலாற்றுக் குறிப்பு**

தம்முடைய வரலாற்றில் நிகழ்ந்த நிகழ்வுகளைக் குறிப்பிடு-தல் தன் வரலாற்றுக் குறிப்பாகும், தம் நிலை உணர்த்தல், இறைவனைப் போற்றல் இவற்றிற்காக இப்பொருட்கூறு மேற் கொள்ளப்படுகிறது.

34. கொள்கை***

எவ்வகையிலக்கியமாயினும், அஃது எப்பொருளதாயினும், அதனுள் புலவர் தம் எண்ணங்களை, கொள்கைகளை இயன்ற

---

* நித்தனைத் தூய நிமலனைப் புலியூர் நிருத்தனை ஒருத்தனை வாய்மைச்
சுத்தனை ஒற்றித் தலம்வளர் ஞான சுகத்தனைச் சூழ்ந்து நின்றேத்தா
மத்தரைச் சமண வாதரைத் தேரவறியரை முறியரை வைணவ
நத்தரைச் சுணங்க நாவரைக் கண்டால் நடுங்குவ நடுங்குவ மனமே. [907]

** முறைப்படி நினது முன்பு நின்றேத்தி முன்னிய பின்னர் உண்ணாமல்
சிறைப்படி வயிற்றில் பொறைப்பட ஓதிபோல் சென்று நின்முன்னர் உற்றதனால்
கறைப்பட ஓங்கும் கண்டனே எவர்க்கும் கருத்தனே ஒருத்தனே மிகுசீர்
தறைப்படர்ந்தோங்கும் ஒற்றியில் உன்னால் தண்டிக்கப் பட்டனன் அன்றே. [1056]

*** எத்துணையும் பேதமுறா தெவ்வுயிரும்
தம் உயிர்போல் எண்ணி உள்ளே
ஒத்துரிமை உடையவராய் உவக்கின்றார்
யாவர் அவர் உளந்தான் சுத்த
சித்துருவாய் எம்பெருமான் நடம்புரியும்
இடம் என நான் தெரிந்தேன் அந்த
வித்தகர் தம் அடிக் கேவல் புரிந்திட என்
சிந்தைமிக விழைந்த தாலோ. [5297]

நிலையில் புகுத்துதல் பொதுவாக இலக்கிய மரபாகும். பக்திப் புலவர் உலகினையும் கருத்துட் கொண்டே பாடல்களைப் பாடியுள்ளமைக்கு இப்பொருட்கூறு சான்றாகும். இறைவன் [4605]; அவனை அடையும் வழி [3269]; வழிபாட்டு முறை [12]; கடைப்பிடிக்க வேண்டிய கொள்கைகள் [5612] போன்றன இதன் உள்ளிடாகின்றன.

### மறைந்து நிற்றல்

புலவர் நேரிடையாக நின்று உரைத்தவற்றைத் 'தலைவி' ஆக மாறி நின்று புலப்படுத்தலே மறைந்து நிற்றலாகும். வெளியீட்டு நிலையில் தலைவி எனும் நிலைக்கேற்பச் சில மாற்றங்கள் இருந்தபோதிலும் பெரும்பான்மை ஒன்றுபட்டமைகின்றன. பக்திப் பாடல்களில் அகப் பொருளாக இவை அமைகின்றன. தலைவன்பால் மையல் கொண்ட தலைவியின் நிலை கூறுதல் பொதுக் கூறாக இங்கமைந்து, உட்பகுப்பிற்கு இடமளிக்கிறது.

#### தலைவன் யார்*

தலைவி தன் உளங்கவர்ந்தவன் யார் என்பதனைக் கூறுதல் இதுவாகும். அவனின் பெருமையும், அவன் திருவடியின் பெருமையும் இதனுள், அவன் எத்தகையவன் எனுங்கால் இணைகின்றன.

#### தலைவி காமுற்ற நிலை**

அகப்பாடல்களில் தலைவனும், தலைவியும் ஒருவரையொருவர் காண்பதற்குப் பல சூழல்களிருப்பினும் இங்கு உலா, தலைவனைக் கண்டு தலைவி காமுறுதற்கு ஏற்ற வாய்ப்பாக அமைகிறது.

---

* பொன்னார் புயவரீர் புகழும் புகழார்
புலியின் அதளார் புயம்நாலார்
தென்னார் சடையார் கொடிமேல் விடையார்
சிவனார் அருமைத் திருமகனார்
என்நாயகனார் என்னுயிர் போல்வார்
எழில் மாமயிலார் இமையோர்கள்
தந்நாயகனார் தணிகாசலனார்
தனிவந்திவண் மால்தந்தாரே. [403]

** மான்கண்ட கை உடையார் தருமகனார் தமைமயில் மேல்
நான் கண்டனன் அவர்கண்டனர் நகைகொண்டதும் உடனே
மீன்கண்டன விழியார் அது பழியாக விளைத்தார்
ஏன் கண்டனை என்றாள் அனை என் என்றுரைக்கேனே. [445]

தலைவி நிலை*

தலைவன்பால் தன்னை இழந்த நிலை இங்குக் கருதப் படுகிறது. இது (1) தலைவி தன்னிலையைத் தானே உரைப்ப தாகவும், (2) தலைவனுக்கு உரைக்குமாறு தூது விடுப்பதாகவும், (3) தாய் தன் மகள் நிலையைக் கூறுவதாகவும் ஆக முந்நிலை-களில் காணப்படுகிறது.

தலைவி தன்னிலையைப் பிறருக்கு உரைக்குங்கால், தான் தலைவனிடம் தன்னை இழந்த நிலை [1708]; இவன்மீது கொண்டுள்ள மாறாக் காதல் [1688]; இதனால் பிறரால் புறக்-கணிக்கப்பட்ட நிலை [4231] போன்றன அமைகின்றன. தலைவனுக்குத் தான் அவனால் கவரப்பட்டு உளமழிந்த நிலையில் இருப்பதை அறிவிக்கத் தூது பயன்படுகிறது [1505].

தாய் தன் மகள் நிலைபற்றிப் பேசும் சொற்களில், தலை-வியின் நிலைமைக்கு வருந்திச் செய்வதறியாது இரங்கி நிற்றல் காணப்படுகிறது. அவ்விரங்கல் தலைவனின் இயல்பினைச் சுட்டி, இத்தகு தலைவனிடம் நீ மயங்கினாயே என்பதாகவும் [1694]; தலைவனின் செயல்களை விளம்பி வருந்துவதாகவும் [1576]; தலைவியின் பொருந்தாச் செய்கை குறித்து வருந்துவதாகவும் அமைகின்றது [2997].

ஏங்கல்**

தலைவி; தன் தலைவனின் அருளுக்காக ஏங்கித் தவித்துக் காத்திருத்தல் இங்கு உணர்த்தப்படுகிறது. இவ்வேங்கல் தலைவி-

---

* மான்கொள் கரத்தார் தலைமாலை மார்பில் அணிந்தார் என்றாலும்
ஆன்கொள் விடங்கர் சுடலை எரி அடலை விழைந்தார் என்றாலும்
வான்கொள் சடையார் வழுத்துமது மத்தர் ஆனார் என்றாலும்
கான்கொள் குழலாய் நான் அவர்மேல் காதல் ஒழியேன் கனவினுமே. [17(4]

** பெற்றம் இவரும் பெருமானார் பிரமன் அறியாப் பேர் ஒளியாய்
உற்றசிவனார் திருஒற்றியூர் வாழ் உடையார் உற்றிலரே
எற்றென் றுரைப்பேன் செவிலி அவள் ஏறாமட்டும் ஏறுகின்றாள்
செற்றம் ஒழியாள் என்னடி நான் செய்வ தொன்றும் தெரிந்திலனே. [1628]

யிடம் இரு நிலைகளில் காணப்படுகிறது. ஒன்று தலைவன் வரவிற்காக ஏங்கல் [1610]; மற்றொன்று, மணந்த தலைவன் பின் தன்னை விட்டகன்றதைக் குறித்து ஏங்கல் [1536] எனவாகும்.

**சோதிடம் நாடல்***

தலைவன் பிரிவால் அழுங்கும் தலைவி அவன் வரவினை அறியும் வேட்கையில் சோதிடம் பார்த்தலை நாடுகிறாள். இங்கு, இத்தலைவி, தலைவன் வரவிற்காக, கழங்கு, கட்டு முதலியன பார்த்து நிற்கும் சங்கத் தலைவியை ஒத்தமைகிறாள். குறி பார்த்தல் போன்றனவும் [1635] இதன்பாற்படும்.

**வேண்டல்****

தலைவி தனக்காக, தலைவனிடம் சென்று தன் விருப்பினை நிறைவேற்றும்படிப் பிறரை வேண்டுதல் இங்கு இடம் பெறுகிறது. இதனைத் தூதனுப்புதலாகவும் கொள்ளலாம்.

**வஞ்சினம்*****

தலைவனுக்காக வேண்டியும் தன்னிலை இழந்த தலைவி, தன் விருப்பினை நிறைவேற்றிக் கொள்வதாகச் சூளுரைத்தல் இதனுள் அமையும்.

---

* பைத்த அரவப்பணி அணிவார் பனைசூழ் ஒற்றிப் பதி மகிழ்வார்
மைத்த மிடற்றார் அவர் தமக்கு மாலை இடவே நான் உளத்தில்
வைத்த கருத்து முடிந்திடுமோ வறிதே முடியாதழிந் திடுமோ
உய்த்த மதியால் சோதிடம் பார்த்துரைப்பீர் புரிநூல் உத்தமரே.
[1681].

** தேடும் கிளி நீ நின்னை விளம்பித் திரு அன்னார்
ஆடுந் தணிகையில் என் உயிர் அன்னார் அருகேபோய்க்
கூடுந்தனமிசை என் பெயர் வைத்தக் கோதைக்கே
ஈடும்கெட இன்றென்னையும் ஈந்தருள் என்பாயே. (500)

*** சேவார் கொடியார் ஒற்றிநகர் திகழும் செல்வத் தியாகர் அவர்
பூவார் கொன்றைப் புயங்கள் மனம் புணரப் புணர வரும் பவனி
ஓவாக் களிப் போடகங்குளிர உடலங் குளிரக் கண்டலது
பாவார் குதலைப் பெண்ணே நான் பரிந்து நீரும் பருகேனே.
(1558)

கற்பனைக் காட்சி*

தலைவன் மீதுள்ள ஆழ்ந்த பற்றின் விளைவாகத் தலைவி-யின் கனவுகள் அவருக்குக் காட்சிகளாகத் தென்படுகின்றன. அவற்றைத் தலைவி உணர்த்துதல் இப்பொருட் கூறாகும். இது தலைவியின் கூற்றாக மட்டுமின்றித் தாயின் கூற்றாகவும் அமைதல் உண்டு (5337).

இறையாட்கொண்டது**

தலைவியின் உளத் தூய்மையினையும் அவள் தன் ஆழ்ந்த பற்றினையும் உணர்ந்து தலைவன், அவனைத் தன் தண்ணளி-யால் ஏற்றுக் கொண்டதைக் கூறுவது இப்பொருட் கூறாகும். இதுவும் தாய் கூற்றில் அமைதலுண்டு(5685).

இறையருள் மொழி***

தலைவியை ஆட்கொண்ட இறைவன் அவளுக்கு அருளுரை புரிந்தமை இங்குக் குறிக்கப்படுகிறது. இம்மொழிகளில் அவன் இயல்பு (1937); செயல் (1729); அறிவுரை (6676) போன்றன அமைகின்றன.

---

* அரசு வருகின்றதென்றே அறைகின்றேன் நீதான்
ஐயமுறேல் உற்றுக்கேள் அசையாது தோழி
முரசு சங்கு வீணை முதல் நாத ஒலி மிகவும்
முழங்குவது திருமேனி வழங்கு தெய்வ மனந்தான்
விரச எங்கும் வீசுவது நாசி உயிர்த்தறிக
வீதிஎலாம் அருட்சோதி விளங்குவது காண்க
பரசி எதிர் கொள்ளுதும் நாம் கற்பூர விளக்குப்
பிரிந்தெடுத்தென்னுடன் வருக தெரிந்தெடுத்து
மகிழ்ந்தே. (5764)

** அன்னம் உண அழைக்கின்றாய் தோழி இங்கே நான்தான்
அம்பலத்தே ஆடுகின்ற அண்ணல் அடிமலர்த்தேன்
உன்னை நினைந்துண்டேன் என் உள்ளகத்தே வாழும்
ஒருதலைமைப் பெருந்தலைவர் உடைய அருட்புகழாம்
இன்னமுதில் என்னுடைய அன்பெனும் நறுங்கனியின்
இரதமும் என் தனிக் கணவர் உருக்காட்சி எனும் ஓர்
கன்னல் உளே தனித்தெடுத்த தேம்பாகும் கலந்தே
களித்துண்டேன் பசிசிறிதும் கண்டிலன் உள்ளகத்தே.
(5719)

*** விண்டு வணங்கு மொற்றியுள்ளீர் மென்பூ விருந்தும் வன்பூவில்
வண்டு விழுந்த தென்றேனெம் மலர்க்கை வண்டும் விழுந்த தென்றார்
தொண்டர்க் கருள்வீர் நீரென்றேன் றோகாய் நாமே தொண்டரென்றார்
அண்டர்க் கரியா ரென்னடியவ் வையர் மொழிந்த வருண் மொழியே. (1735)

**இறையருள் வியப்பு***

பெறற்கரிய ஒன்றினைத் தன் எளிமையிலும் பெறுங்கால் வியப்புத் தோன்றுதல் இயற்கை. இங்குத் தலைவி, தன் விருப்பினை இறைவன் நிறைவேற்றியமை குறித்து வியப்பு கொள்கின்றாள். தன் பெண்ணின் சிறப்புக் குறித்து, அவளுக்காக இரங்கிய தாயும் பூரிப்புக் கொள்கிறாள் (1598).

**இறையருள் பெற்ற தலைவி நிலை****

இறையருளின் பின் தலைவியின் நிலை, அவளின் முன்னைய நிலையிலிருந்தும் வேறுபட்டமைகிறது. இறையருளுக்காக ஏங்கிய நிலை, அதனைப் பெற்று உளங்குளிர்ந்த இன்ப நிலையாக மாறுகிறது. அவ்வின்ப நிலை, தாயின் கூற்றிலும் வெளிப்படுகிறது (5689).

**தற்புகழ்ச்சி*****

எல்லாம் வல்லவரின் துணை கிடைத்த பின் பிறரை ஒதுக்கும் உலகியல்படியே இத் தலைவியின் நிலையும் அமைந்து, தற்புகழ்ச்சியாக உருவெடுக்கிறது. தன்னைப் புகழ்ந்து கொள்ளுவதன் மூலம் தன் தலைவனின் பெருமையை உணர்த்துவதாக இப்பகுதி அமைகிறது.

---

* எந்தரமுட் கொண்ட ஞானசுந்தரர் என் மணவாளர்
எல்லாம் செயவல்ல சித்தர் நல்லோர் உளத்தமர்ந்தார்
மந்திர மாமன்றில் இன்பம் தந்த நடராஜர் உன்னை
மருவ வந்தார் வந்தார் என்று தெருவில் நாதம்
சொல்கின்றதே
என்ன புண்ணியம் செய்தேனோ—அம்மா நான்
என்ன புண்ணியம் செய்தேனோ. *(4491)*

** புண்ணிய பதியைப் புணர்ந்தனன் நான்செய்
புண்ணியம் புகல் அரிதென்றாள்
தண்ணிய மதியின் அமுதெனக் களித்த
தயவை நான் மறப்பேனோ என்றாள்
எண்ணிய அனைத்தும் ஈந்தருள்கின்றான்
என்னையோ என்னையோ என்றாள்
அண்ணிய பேரானந்தமே வடிவம்
ஆயினாள் நான் பெற்ற அணங்கே. *(5682).*

*** நயந்த நடநாயகர் உன் நாயகரே எனினும்
நாடும் மற்றைத் தலைவர் தமைக்கண்ட பொழுதெனினும்
வியந்தவர்க்கோர் நல்லுரையும் சொல்லாதே தருக்கி
வீதியிலே நடப்பதென் நீ என்கின்றாய் தோழி
வரை இவ்வண்ட பகிரண்ட மட்டோ நாத
வயந்தரும்யோ அப்பாலும் உளமா நாட்டார் தமக்கும்
பயந்தகுடி அல்லடி நான் திருச்சிற்றம்பலத்தே
பதிநடஞ்செய் அடிப்பணிக்கே பதித்த குடி அறியே.
*(5692)*

ஆற்றுப்படுத்தல்*

தன்னிலையில் உயர்ந்த தலைவி, தன்னைச் சார்ந்தோரும் தான் பெற்ற இன்பத்தினைப் பெற விழைகின்றாள். அதற்குரிய நெறிகளைக் கூறி ஆற்றுப் படுத்துகின்றாள். அது சிறந்த அறிவுரையாகவும் அமைகிறது. இறைவனின் தன்மையைச் சுட்டுதல் (5802) அவனை அடையும் வழியினைக் காட்டுதல் (5708) எனும் நிலைகளில் அது அமைகிறது.

# II

## கதைத் தொடர்புடையன

தலபுராணம், புராணம், காப்பியம் போன்றன இங்கு நினைக்கப்படுகின்றன. இவை அனைத்தும் ஏதேனும் ஒன்று அல்லது ஒன்றுக்கு மேற்பட்ட கதைகளைக் கொண்டமைகின்றன. ஒரு கதைக்கு முதன்மை கொடுப்பதாய்க் காப்பியம் அமைய, பல கதைகளைச் சிறப்பித்துப் பேசுவதாய்த் தலபுராணம் அமைகின்றது. அக்கதைகளின் பாட்டுடைத் தலைவன் ஒருவனே என்ற நிலையில் அவை இணைவு பெறுகின்றன.

கதைத் தொடர்பற்ற பாடல்களில் அமையும் பொருட்கூறுகள் இங்கும் அமைகின்றன (அட்டவணை-7). அப்பொருட் கூறுகளை ஒன்றுடன் ஒன்றை இணைப்பதாகக் கதை அமைகிறது. கதைத் தொடர்பற்ற பாடல்கள், கதைத் தொடர் பாடல்கள் இரண்டிலும் இப்பொருட் கூறுகள் அமைப்பு நிலையில் வேறுபட்டமைகின்றன.

புராணங்கள், வாழ்க்கை நிகழ்ச்சிகள் என்பன முதனிலையில் இங்கமைய, ஏனைய பொருட்கூறுகள் அனைத்தும் அவற்றை வளர்த்து, விளக்கிச் செல்லும் துணைப் பொருட் கூறுகளாக அமைகின்றன. அப்பொழுது அவை, கதையோடு தொடர்புடையனவாகவும் இருக்கக் காணலாம். இதனால், அங்குப் புலவர் கூற்றாக அமைந்த பொருட்கூறுகள் பல, கதைமாந்தரின் கூற்றாக இங்கு மாறுகின்றன. இவற்றினை ஒரு சான்றின்வழிக் காட்டலாம்.

---

* காரிகை நீ என்னுடனே காண வருவாயோ
கனகசபை நடுநின்ற கணவர் வடிவழகை
ஏரிகவாத் திருவடிவை எண்ண முடியாதேல்
இயம்ப முடிந்திடுமோ நாம் எழுத முடிந்திடுமோ
பேரிகவா மறைகளுடன் ஆகமங்கள் எல்லாம்
பின்னது முன் முன்னது பின் பின்முன்னா மயங்கி
பாரிகவா தின்றளவும் மிக எழுதி எழுதிப்
பார்க்கின்ற முடிவொன்றும் பார்த்ததிலை அம்மா.(5726)

மாறாத தீவினையேன் புரிந்த பிழை
யத்தனையு மறத்தல் வேண்டும்
தேறாத காரணத்தான் மறந்தும் யான்
பிரமமெனச் சொலாமை வேண்டும்
பாறாத பெரும்பத்தி நின்னடிக்கே
யெந்நாளும் பண்ணல் வேண்டும்
சீறாத நின்னருளா லிவ்வுருவி
னின்றும் யான் தீர்தல் வேண்டும்.

(அம்பர். 488)

இப்பாடல் திருஅம்பர்ப் புராணத்தில், பிரமபுரிப் படலத்தில் பிரமன் கூற்றாக இடம்பெறுகிறது. 'வேண்டல்' எனும் பொருட் கூறாக அமைகிறது'. இறைவனின் திருமுடியினைத் தான் அறிந்து வந்ததாகப் பொய் கூறியதற்காக, (418) இறைவனால் புள்ளுரு பெறும் சாபத்தினைப் பெற்ற (421). பிரமன், இறைவனிடம் அதனைத் தீர்க்க வேண்டுதல் இதனுள் அமைகிறது. இவ்வேண்டல் இங்குக் கதையோடு தொடர்பு பெற்றமைகிறது. இது நிறை வேறியதா என்பதனை மேல் அறிவித்துச் செல்லும் நிலையில், கதையை வளர்ப்பதற்கும் உதவுகிறது.

ஒருவர் பிறருக்கு வழங்குவதாக அமையும் அறிவுரையும், கவி, உலகத்திற்கு வழங்கும் அறிவுரையும் பெரும்பான்மைக் கதைத் தொடர்புடனே அமைகின்றன. சான்றாக, குசேலரிடம், கண்ண னைக் கண்டு தன் வறுமை நீங்கப் பொருள் பெற்று வருமாறு வேண்டும் மனைவிக்கு, அவர் செல்வத்தின் இழிவினையும், இரத் தலின் இழிவினையும் அறிவுறுத்தி இரப்பதற்காகச் செல்லலை மறுத்து நிற்றலைச் சுட்டலாம் (குசே. 103-113). இவ்வாறே பிறவும் அமைகின்றன.

இறைவன் தன் அடியவர்கட்குக் காட்சி யருளல் இங்கு மிகவும் இயல்பான பொருட்கூறாகக் காணப்படுகிறது. இறை-யருள் வேண்டி அடியவர் தவமிருக்க, அத்தவத்தினைப் பாராட்டி இறைவன் காட்சியளித்து அவர் வேண்டும் வரங்களை அளிப்ப தாகப் பெரும்பாலும் அமைகிறது (அம்பர். 474, 533; குசே. 715).

இறைவனை வேண்டி நிற்கும் பொழுதும், அவன் காட்சி யருளும் பொழுதும் அவனைப் போற்றுதல் மிகுதியாகக் காணப் படுகிறது. சான்றாகத் திருஅம்பர்ப் புராணத்தில் முக்தியடைய விழைந்த விமலன் இறைவனைப் போற்றி நிற்றலையும் (732); குசேலோபாக்கியானத்தில் இறைக்காட்சி கண்ட குசேலர் அவனைப் போற்றுதலையும் (723) குறிப்பிடலாம்.

கதைத் தொடர்பற்ற பாடல்களில் சுருக்கமாகச் சுட்டிச் செல்லப்படும் புராணக் கதை, வாழ்க்கைக் குறிப்பு, இறைநிலை, இறைக்கொள்கை போன்றன இங்கு விரிவாகப் பேசப் படுகின்றன.

இறைவனிடம், பக்தர்களை ஆற்றுப்படுத்துதலாகிய பொருட் கூறு இங்குச் சிறப்பாக அமைகிறது. குசேலரைக் கண்ணனிடம் அவர் மனைவி ஆற்றுப்படுத்துகிறாள் (குசே. 92). அம்பரனை அவனது குரு அவன் மேன்மையுறுவதற்காகப் பிரமபுரி சென்று இறைவனை வழிபடும்படி ஆற்றுப்படுத்துகிறார்(அம்பர். 520-522).

கதை கூறுவதாக இவை அமைவதினால் இயற்கை, இங்குச் சிறப்பிடம் பெறுகிறது. காப்பியங்களின் இயல்பாக நாட்டு, நகரப் படலங்கள் அமைந்திருப்பதும் இதற்குக் காரணம் எனலாம். நாட்டு, நகரப் படலங்கள் தவிரப் பிற இடங்களிலும் தேவைக் கேற்ப இயற்கை பயன்படுத்தப் பெறுகிறது. இயற்கையைப் பாடுதலும் பக்தியுணர்வுடன் அமைந்திருத்தல் சுட்டத் தக்கது. சோழநாட்டின் வளத்தினைச் சிறப்பிக்கப் புகுந்த புலவர், அதனை,

ஒரு கலிக் காமருக்கு முற்ற வாரூரருக்கும்
மருவுளம் வேறுபட்ட வண்ணம்போல் வேறுபட்ட
பெருநிலம் வேறுறாமலிடை நின்ற பெருமான் போல
வருபுனற் பொன்னி நீத்தம் வயறொரு மிடைநின்றன்றே

(அம்பர். 93)

என இறைவனின் பெருமையைக் காட்டுதல் வழியாகத் தருவதைச் சான்றாக உணர்த்தலாம்.

இவற்றால், பக்திப் பொருட்கூறுகள் அனைத்தும் கதைக்கும், கதை மாந்தருக்கும் ஏற்ப, இயல்பான மாற்றங்களுடன் அமைகின்றன; இவை தவிர, கதை மாந்தர் இயல்பு, சிறப்பு போன்ற பிற பொருட்கூறுகளும் உண்டு; அவை கதையமைப்பிற்கு இன்றியமையாததாகிப் பக்தியோடு தொடர்பு படுகின்றன என்பன புலனாகின்றன.

# III

## ஒப்பீடு

பக்திப் பொருட்கூறுகள், எல்லாச் சமயத்தாரின் பாடல்களிலும் எவ்வாறு அமைகின்றன என்பதனை இப்பகுதிபேசுகிறது. பத்தொன்பதாம் நூற்றாண்டுப் புலவரிடையே சைவம், வைணவம், கிறித்தவம், இசுலாம் முதலிய சமயப் புலவர் உள்ளனர். சான்றிற்கு அப்புலவரின் ஒவ்வொரு நூல் கொண்டு இவ்வொப்பீடு அமைகிறது.

பொதுவாக, இப்பொருட் கூறுகள் இச் சமயப் பாடல்களுக்குப் பொருந்துவனவாக உள்ளன. அட்டவணை—8 இதனை உணர்த்தும். அவை முதனிலை அல்லது துணைநிலையில் அமைகின்றன. அவ்வேறுபாடுகளும் சார்ந்த சமயத்தின் கொள்கைக்குச் சிறப்பளிப்பனவாக உள்ளன. அவை தவிர்க்க இயலாதனவும் ஆகும். சான்றாகத் 'திருநீறு' எனும் பொருட்கூறு, சைவ சமயத்தின் குறியீடாக நிற்கிறது. எனவே இதனைப் பிறவற்றுள் காண இயலாது. இது போன்று வைணவ பக்திப் பாடல்களில் திருமாலின் அவதாரங்களும்* கிறித்துவப் பாடல்களில் இறைவனின் அருள் வாக்கும்** சிறப்புப் பெறுகின்றன.

கிறித்தவர், இசுலாமியர் பாடல்களுக்கிடையே புராணக் கூறுகள் ஏனையவற்றைவிட மிகக் குறைவாகவே உள. இசுலாமியரிடம் உருவ வழிபாடின்மையின், இறை வருணனையை அவர் தம் பக்திப் பாடல்களில் காணலரிது. அவரவர்க்குரிய சமயம் சார்ந்த சிறப்புச் சொற்கள் பயன் படுத்தப்படுகின்றன. பொதுத் திருச்சபை; பாவமன்னிப்பு; நித்திய சீலன், விசுவாசம் முதலிய-

---

* நிலமளந்து வானளந்து நீடுநீல மேனியா
னலகில் சீர்பொறுத்துறங்க ரங்கமொன்றை யாசியார்
புலவரேனு மாதவஞ் செய் புனிதரேனும் புந்தியிற்
றிலவுகாத்த கிள்ளையே யெனத் தவிப்ப ரென்றுமே.

(திரு. பதிற்று. 36).

** செறுத்துமக்குமற்றவர் செயுந்தீமையைச் சிந்தை
நிறுத்திடாது மன்னீப்பிரேனீர் செய்தீமைகளும்
பொறுத்துமக்கு மன்னித்தருள் புரிவர் பூதலமுற்
றொருத்திடற்கதிகாரியா முன்னதத் தரசன்.

(இரட்சணிய மனோகரம், திருவாக்கு;14)

வற்றைக் கிறித்துவத்திலும் (இரட்சணிய மனோகரம். 544); சுபுஹாவி, அகியானி, பாதுஷா போன்றவற்றை இசுலாமியப் பாடல்களிலும் (மஸ்தான் சாகிபு பாடல்கள்; குருவணக்கம்: 2) காணலாம்.

இப்பொருட்கூறுகள் புலவரின் விருப்பிற் கேற்ப ஆளுமை பெறுகின்றன. எனவே ஒருவரிடம் அதிகமாகக் காணப்படுவது பிறிதொருவரிடம் குறைவாக அமைகிறது. புலவரின் தனித் தன்மையை உருவாக்குவதற்கு இவையும் பயன்படுகின்றன.

பக்திப் பாடல்கள் பிறமொழிகளிலும் அமைந்துள்ளன. இப்பொருள், ஆரம்பகாலத்தில் மானிடரைப் புகழ்வதிலும் அமைந்து, பின் இறைவனுக்கும், அவன் அடியார்க்குமாக ஏற்றம் பெற்றது என்பர்.* அப்பாடல்களின் பொருட்கூறுகளும் தமிழ் மரபுடன் ஒத்தமைவதனை அறிய முடிகிறது.** இறைவனைத் தலைவனாகவும் தம்மைத் தலைவியாகவும் கொண்டு பாடுதலும் பெரும்பான்மையான பக்தியிலக்கியங்களில் காணப் படுதல் எடுத்துக் காட்டப்படுகிறது.***

---

* "In defining the content of the h. (hymn) it must be observed that in classical antiquity the word might also be used to signify a song composed in honour of a hero or other famous man. In the Christian Church the Fathers accepted St. Augustine's definition which may be stated as "Praise of God in song". By a later (11th C.) definition praise was extended to His Saints".

—Princeton Encyclopaedia of Poetry and poetics (Enlarged Edition); Alex Preminger (Editor); 1975; pp. 356-357.

** "Theological literature consists mainly of invocations addressed to deities and didactic matter of various kinds, intended for the instruction of those who worshipped or recognised the deities. In the former elements of praise and prayer are commonly combined",

—H.M. Chadwick, & K. Chadwick Nora, The Growth of Literature; Vol.III;1968; p. 785.

*** ஜி. ஜான்சாமுவேல், இலக்கிய ஒப்பாய்வுக் களங்கள்; ப. 35.

முடிபு

இங்குக் காட்டியுள்ள பொருட்கூறுகள், பக்தியிலக்கியங்களை முழுமையாக ஆய்விற்கு உட்படுத்தும்பொழுது விரிதலுக்கு வாய்ப்புண்டு.

குறிப்பிட்டப் பக்திப் பாடல் எப்பொருட் கூறின் பாற்படும் என்பதில் ஐயப்பாடு வரலாம். அவை தவிர்க்க இயலாதன. சங்கப் பாடல்கள் பல, ஒன்றுக்கு மேற்பட்ட துறைகள் பெற்றிருப்பதும் குறிப்பிடற்பாலது. (புறம். 262; திணை: வெட்சி. துறை: உண்டாட்டு; தலைத்தோற்றமுமாம்.)

சங்க விலக்கியத்துள் அகப்பாடல்களில் இயற்கை பெரும் செல்வாக்குப் பெறுவதுபோன்று, பக்திப் பனுவல்களில் இறைமை பெருமை பெறுகிறது. முதனிலைப் பொருளுக்குத் துணையாகப் பெருமளவும் இது பயன்படுதல் இதற்குக் காரணம்.

இறையருளுக்காக ஏங்குதலும், பெற்றபின் பெருமிதம் கொள்ளுதலும், தலைவி நிலையில் தன்னைக் காட்டலும் பக்தி-யிலக்கிய மரபாக அமைகின்றன. தம்மையும், உலகையும் ஒருங்கே கருத்துட் கொள்வதும் இதன் சிறப்பாம்.

# அட்டவணை-6

## பிற இலக்கியக் காட்டு அட்டவணை

| எண் | பக்திப் பொருட்கூறு | புலவர் | இடம் |
|---|---|---|---|
| 1. | இறைநிலை | | |
| | அ) இறையியல்பு | மாணிக்கவாசகர் | திருவாசகம் திருவண்டப் பகுதி 39-57 |
| | ஆ) இறை வருணனை | திருநாவுக்கரசர் | 4 : 18 : 3 |
| | இ) இறைத் தொழில் | தாயுமானவர் | ஆக்குவை 1 |
| 2. | திருவடி | பெரியாழ்வார் | 1 : 2 : 2 |
| 3. | திருநாமம் | திருமங்கை ஆழ்வார் | பெரிய திருமொழி 1 : 1 : 9 |
| 4. | திருநீறு | திருஞான சம்பந்தர் | திருநீற்றுப் பதிகம் |
| 5. | போற்றல் | பாரதியார் | காக்கைச் சிறகினிலே |
| 6. | வாழ்த்து | தாயுமானவர் | பராபரக்கண்ணி: 224-227 |
| 7. | அடியார் | மதுரகவி யாழ்வார் | கண்ணிநுண் சிறுத்தாம்பு : 7 |
| 8. | இறை உடைமை | ஆண்டாள் | 7 : 4 |
| 9. | தலச் சிறப்பு | திருமங்கை யாழ்வார் | 1 : 8 : 8 |
| 10. | புராணம் | மாணிக்கவாசகர் | திருச்சாழல். 8 |
| 11. | பக்தி | அருணகிரிநாதர் | கந்தரலங்காரம் 72 |
| 12. | இறை எதிர்ப்புக்கு எதிர்ப்பு | சிவவாக்கியார் | 110 |
| 13. | உயிரியல்பு | மாணிக்கவாசகர் | போற்றித் திருவகவல் 11-26 |

| | | | |
|---|---|---|---|
| 14. | மனம் | பாரதியார் | மணப்பெண் 1-15 |
| 15. | நிலையாமை | சிவவாக்கியார் | 101 |
| 16. | சிற்றின்ப வெறுப்பு | பாம்பாட்டிச் சித்தர் | 54 |
| 17. | அறிவுரை | நம்மாழ்வார் | திருவாய்மொழி 2 : 8 : 4 |
| 18. | முன்நூற் கருத்து | தாயுமானவர் | உடல் பொய்யுறவு 34 (திருமந்திரம் 724-ஆம் பாடற் கருத்துடையது) |
| 19. | நம்பிக்கை | பாரதியார் | பக்திப்பாடல்கள் 39 |
| 20. | அடைக்கலம் புகுதல் | மாணிக்கவாசகர் | அடைக்கலப்பத்து 2 |
| 21. | உள உறுதி | குலசேகராழ்வார் | 5 : 4 |
| 22. | உட்பகை எதிர்வு | பட்டினத்தார் | 88 |
| 23. | தன்னிலை | | |
| | அ) பொதுவாக அமைவன | திருப்பாணாழ்வார் | அமலனாதிபிரான் 9 |
| | ஆ) இறையருளின் முன் | தாயுமானவர் | சிவன் செயல் 1 |
| | இ) இறையருளின் பின் | நம்மாழ்வார் | திருவாய்மொழி 4 : 5 : 3 |
| 24. | எதிர்கால நிலை | — | — |
| 25. | இரங்கல் | சிவவாக்கியார் | 77 |
| 26. | விழைவு | குலசேகராழ்வார் | 4 : 4 |
| 27. | வேண்டல் | பெரியாழ்வார் | 5 : 10 : 9 |
| 28. | ஏங்கல் | பத்திரகிரியார் | எக்காலக் கண்ணி 29-30 |
| | வஞ்சினம் | — | — |
| | வசை | சுந்தரர் | 7 : 95 : 2 |
| 29. | இறையருளியது | திருநாவுக்கரசர் | 6 : 228 : 2 |

| | | | |
|---|---|---|---|
| 30. | இறையருள் வியப்பு | திருப்பாணாழ்வார் | அமலனாதிபிரான் 5 |
| 31. | தற்புகழ்ச்சி | மாணிக்கவாசகர் | அச்சோப்பதிகம் 1 |
| 32. | பிறசமயக் காழ்ப்பு | திருஞானசம்பந்தர் | 3 : 366 : 3 |
| 33. | தன் வரலாற்றுக் குறிப்பு | திருநாவுக்கரசர் | 6 : 217 : 5 |
| 34. | கொள்கை | பட்டினத்தார் | 141 |
| 35. | மறைந்து நிற்றல் (தலைவி நிலை) | தாயுமானவர் | பைங்கிளிக் கண்ணி |

## அட்டவணை-7

### கதைத்தொடர் பாடல்கள்—பக்திப் பொருட்கூறுகள்

| | | | |
|---|---|---|---|
| 1. | இறைநிலை | — | அம்பர் : 399-402 |
| 2. | திருவடி | — | குசே. 199-211 |
| 3. | திருநாமம் | — | அம்பர். 727-728 |
| 4. | திருநீறு | — | அம்பர். 785 |
| 5. | போற்றல் | — | அம்பர். 434-436 |
| 6. | வாழ்த்து | — | குசே. 203 |
| 7. | அடியார் | — | குசே. 335 |
| 8. | இறை உடைமை | — | அம்பர். 342-353 |
| 9. | தலச் சிறப்பு | — | அம்பர். 342-353 |
| 10. | புராணம் | — | குசே. |
| 11. | பக்தி | — | அம்பர். 314 |
| 12. | இறை எதிர்ப்பிற்கு எதிர்ப்பு | — | அம்பர் 407 |

| | | | |
|---|---|---|---|
| 13. | உயிரியல்பு | — | குசே. 104-105 |
| 14. | மனம் | — | குசே. 201 |
| 15. | நிலையாமை | — | குசே. 144 |
| 16. | சிற்றின்ப வெறுப்பு | — | குசே. 115-116 |
| 17. | அறிவுரை | — | குசே. 66 |
| 18. | முன் நூற் கருத்து | — | குசே. 148 (குறள் 616) |
| 19. | நம்பிக்கை | — | அம்பர் 520 |
| 20. | அடைக்கலம் புகுதல் | — | அம்பர் 735 |
| 21. | உள உறுதி | — | அம்பர் 736-738 |
| 22. | உட்பகை எதிர்வு | — | அம்பர் 382 |
| 23. | தன்னிலை | — | குசே. 48-57 |
| 24. | எதிர்கால நிலை | — | அம்பர் 760 |
| 25. | இரங்கல் | — | அம்பர் 424 |
| 26. | விழைவு | — | அம்பர் 713 |
| 27. | வேண்டல் | — | அம்பர் 438 |
| 28. | ஏங்கல் | — | அம்பர் 975 |
| 29. | இறையருளியது | — | அம்பர் 978-980 |
| 30. | இறையருள் வியப்பு | — | குசே. 525 |
| 31. | தற்புகழ்ச்சி | — | அம்பர் 376 |
| 32. | பிறசமயக் காழ்ப்பு | — | — |
| 33. | தன் வரலாற்றுக் குறிப்பு | — | — |
| 34. | கொள்கை | — | குசே. 21 |
| 35. | மறைந்து நிற்றல் | — | — |

## அட்டவணை-8

பிற சமயங்களில் பக்திப் பொருட் கூறுகள்

| | சைவம் | வைணவம் | கிறித்தவம் | முகமதியம் |
|---|---|---|---|---|
| எண். | திருவருட்பா | திருவரங்கத் திருவாயிரம் | இரட்சண்ய மனோகரம் | மஸ்தான் சாகிபு பாடல்கள் |
| 1. | இறைநிலை | காவல்காரன் வகுப்பு | 261 | கண்மணி 11 |
| 2. | திருவடி | திருமகள் | 90 | மனோன். 101 |
| 3. | திருநாமம் | திருமந்திரா | 301 | கீர்த்தனை: அல்லாஹு |
| 4. | திருநீறு | — | — | — |
| 5. | போற்றல் | திரு. கட்டளை 34 | 447 | கண்மணி. 4 |
| 6. | வாழ்த்து | வாழிவிருத்தம் | 748 | நந்தி. 50 |
| 7. | அடியார் | திரு. நவ. 26 | 434 | குரு. 10 |
| 8. | இறை உடைமை | திரு. ஆயுத. 2 | 223 | — |
| 9. | தலம் | திரு. வெ. அந். 45 | — | — |
| 10. | புராணம் | திரு. திருப். 9 | 36 | குரு. 10 |
| 11. | பக்தி | திரு. மும். 23 | 125 | பராபர. 62 |
| 12. | இறை எதிர்ப்புக்கு எதிர்ப்பு | திரு. நவ. 53 | — | — |
| 13. | உயிரியல்பு | திரு. கட்டளை 11 | 115 | கண்மணி. 18 |
| 14. | மனம் | திரு. வெ. அந். 23 | 171 | நிராமய. 61 |
| 15. | சின்றின்ப | திரு. பெண். 7 | 52 | முகியி. சத. 85 |
| 16. | நிலையாமை | திரு. வெ. அந். 80 | 102 | ரகு 13 |
| 17. | அறிவுரை | திரு. கட்டளை 10 | 718 | தவமே. 1 |

| | | | | |
|---|---|---|---|---|
| 18. | பிற நூற் கருத்து | திருமணி. 5 (குறுந்தொகை பாடல் 3) | 7 (திருவாசகம்-அவனருளால் அவன் தாள் வணங்கி-சிவபுராணம்) | நிராமய. 17 தாயுமானவர் அங்கிங் கெனாதபடி-பரசிவ வணக்கம் |
| 19. | நம்பிக்கை | திரு. நவ. 41 | 500 | முகியி.சத.79 |
| 20. | அடைக்கலம் | திரு. பதிற்று 25 | 91 | அகத்.சத. 33 |
| 21. | உள உறுதி | திரு. நான். 40 | 77 | தவமே. 7 |
| 22. | உட்பகை எதிர்வு | புனி. 1 | — | றகு. 29 |
| 23. | தன்னிலை | திரு. பதிற்று. 92 | 77 | றகு. 91 |
| 24. | எதிர்கால | திரு. சத. 94 | — | — |
| 25. | இரங்கல் | திரு. பதிற்று. 81 | 327 | கண்மணி 20 |
| 26. | விழைவு | திரு. சத. 2 | 251 | பராபர 24 |
| 27. | வேண்டல் | திரு. வெ. அந். 1 | 695 | அகத். சத. 91 |
| 28. | ஏங்கல் | திரு.சீர.மாலை.41 | 63 | முகியி.சத.100 |
| 29. | இறை யருளியது | திரு. சத. 32 | 105 | ஆனந்த. 34 |
| 30. | இறையருள் வியப்பு | — | 599 | நிராமய. 35 |
| 31. | தற்புகழ்ச்சி | திரு. சீர. 15 | — | — |
| 32. | பிறசமயக் காழ்ப்பு | திரு. சத. 52 | 691 | — |
| 33. | தன் வரலாற் றுக் குறிப்பு | திரு. நவ. 55 | 124 | குரு. 10 |
| 34. | கொள்கை | திரு. சீர. 17 | 145 | ஆனந்த. 18 |
| 35. | மறைந்து நிற்றல் | திரு. நான். 30 | 468 | மனோன். 3* |

* மஸ்தான் சாகிபு, தாம் தலைவராக நின்று பாடும் பாடல் களும் அகப் பொருளை உட்கொண்டுள்ளமையால் இவண் சுட்டப்பட்டது.

# அறம்

தனிமனிதனாயினும், சமுதாயமாயினும் முழுமையான நிலையில் சிறப்புற வாழ வழிவகுப்பது அறமாகும். இலக்கியத்தின் நோக்கம் எதுவாயினும் அது, சமுதாயத்திற்குப் பயன்படுவதாக இருத்தல் வேண்டும் என்பது பொதுவான கருத்து. எனவேதான் தனிப்பாடல், காப்பியம், சிறுகதை, புதினம் என எவ்வடிவாயினும் அதன் படைப்பாளர், அதனுள் நல்ல பண்புகளை அல்லது பழக்க வழக்கங்களை, நேரிடையாக அல்லது குறிப்பாக உணர்த்து கின்றனர். இன்றைய புத்திலக்கியங்கள் சமுதாய அறத்தினை வலியுறுத்துவதற்குச் சிறப்பிடம் அளிக்கக் காண்கிறோம். தனி மனிதனை, அவன் சார்ந்த சமுதாயத்திற்குச் சீர் செய்தல் என்ற நோக்கில் அமையும் அறம், அதன் சிறப்பால், முக்கியத்துவத்தால் இலக்கியத்துள் நிலைத்த ஆட்சி பெற்றுள்ளது;அறப் பொருளாகச் சிறப்புற்றுள்ளது

அறம் — நீதி

அறத்துடன் தொடர்புடையதாக, அதற்கு ஒத்த சொல்லாக நீதி என்பது குறிக்கப்படுகிறது. நீதி என்பது வட சொல்லாகும். சங்க காலத்தில் அறம் என்ற சொல் வழக்கமாக அமைய* சமணர் காலத்தில் நீதி** என்பது வழக்காயிற்று. இவ்விரு சொற்களுமே இன்று வழக்கில் உள்ளன. அறம் என்பதே முதலில் தோன்றிற்று என்பதாலும், நீதி வடசொல் என்பதாலும் இங்கு அறம் என்ற சொல் பயன்படுத்தப் பட்டுள்ளது.

---

* நிலம்புடை பெயர்வதாயினும் ஒருவன்
செய்தி கொன்றோர்க்குய்தி யில்லென
அறம் பாடிற்றே யாயிழை கணவ. (புறம். 34:5-7)

** நீதிப் பெருமை நூல் ஓதியும் ஓராய். (பெருங்கதை 2: 1: 26).

அறம்—விளக்கம்

அறு-அம் என்பது அறம் எனல் ஆயிற்று. 'அறு' எனும் பகுதிக்கு 'முடிவு செய்' எனும் பொருள் உண்டு. ஒன்றன் நன்மை, தீமையை முடிவு செய்து அதற்கேற்ப ஒழுகுதல் என்ற நிலையில் 'அறம்' எனலாயிற்று எனலாம். அறி, அறிவு, அறுதி போன்றனவும் இதனுடன் தொடர்புடையவனாக அமைதல் குறிப்பிடத் தக்கது. ஒன்றன் இயல்பினை அறுதியிட்டு, அறிவுறுத்தி, நல்லாற்றுப் படுதலாக அமைதலின் அறமாயிற்று எனவும் கருதலாம்.

அறங்கூறுவோர் இயல்பு*, அறம் கேட்போர் இயல்பு** இவற்றை எண்ணியுள்ளமை, தமிழரிடத்தில் அறம் பெற்றுள்ள செல்வாக்கை உணர்த்துகிறது. பிறரைத் திருத்துவதற்கு, முதலில் தாம் குறைபாடற்றவராக இருத்தல் வேண்டும் என்பதனை அறங்கூறுவோரியல்பு புலப்படுத்துகிறது.

> மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்தறன்
> ஆகுல நீர பிற. (குறள். 34)

என வள்ளுவர் அறத்திற்குச் சிறந்த விளக்கமொன்றைத் தருகிறார். மனத்தில் எவ்வகை அழுக்குமின்றித் தூய்மையாகக் குற்றமற்றவனாக இருத்தல் எல்லாவகை அறமுமாகும் என்பது அவர் கருத்து.

மனிதனின் எண்ணங்களுக்கும், சொல், செயல்களுக்கும் அடிப்படையாக, அனைத்திற்கும் உரிய களனாக இருப்பது மனமாகும். மனம் தூயதாய் இருக்கும் பொழுது அவனது எண்ணம், சொல், செயல் ஆகியனவும் தூயதாய் அமைகின்றன. மனது மாசுறும்பொழுது அவையும் மாசுறுகின்றன. எனவே மனத்தின் தூய்மை மிக இன்றியமையாததாக வேண்டப்படுகிறது. மனத்தின் எண்ணத்திற்கு ஏற்றவாறு சொல்லும், செயலும் அமைதலின் வள்ளுவர் மனத்தின் தூய்மையை அறமாக்குகிறார்.

---

* அறங் கேட்டருள் புரிந்து ஐம்புலன்கள் மாட்டும்
இறங்காது இருசார் பொருளும்-துறந்து அடங்கி
மன்னுயிர்க்கு உய்ந்துபோம் வாயில் உரைப்பானேல்
பன்னுதற்குப் பாற்பட்டவன். (அறநெறிச்சாரம். 4).

** தடுமாற்றம் அஞ்சுவான் தன்னை உவப்பான்
வடுமாற்றம் அஞ்சித் தற்காப்பான்-படுமாற்றால்
ஒப்புரவு செய்து ஆண்டு உறுதிச்சொல் சேர்பவன்
தக்கான் தரும உரைக்கு.
(அறநெறிச்சாரம். 6)

அறநெறிச்சாரம் பாடிய முனைப்பாடியாரின் கருத்து அறத்தின் இயல்பினை விளக்குவதாக அமைகிறது.

வினை உயிர்கட்கு வீடின்ன விளக்கித்
தினையனைத்தும் தீமையின் றாகி-நினையுங்கால்
புல்லறத்தைத் தேய்த்து உலகினோடும் பொருந்துவதாம்
நல்லறத்தை நாட்டுமிடத்து.

(அறநெறிச்சாரம். 8)

என்பது அவர் கூற்று. இதனின்றும் உலகியலுக்கு ஏற்புடைத்தாக முழுமையாகத் தீய விலக்கியதாகத் தினையளவு கூட குற்றமற்றதாக அமைதல் நல்லறத்தின் இயல்பு என்பது பெறப்படுகிறது.

'நியதிகள் எல்லாம் அறம்'* 'அறம் என்பது இயல்பு, இயல்பாக உள்ள உயரிய பண்பாகிய உயரிய செயல்கள்தான் அறம்** போன்ற கூற்றுகளும் அறத்திற்கு விளக்கம் அளிப்பனவாக அமைகின்றன.

அறங்கூறும் நூல்கள் தம் பெயராலும் அறம் பற்றிய குறிப்புகளை உணர்த்துகின்றன. 'உலகநீதி' எனுங்கால் அறமானது அது தோன்றிய மொழிக்கோ, அல்லது இனத்திற்கோ தனித்த சிறப்புடையதாக நின்றுவிடாது, உலகம் முழுமைக்கும் பொதுவானது என்பதைப் பெறலாம். 'மூதுரை', 'முதுமொழிக் காஞ்சி', என்பன அறமானது காலத்தை வென்று நிற்கும் சிறப்புடையது, வழிவழி வழங்கி வருவது என்பதனைச் சுட்டுகின்றன. 'நல்வழி', 'நன்னெறி' என்பன வாழ்க்கைப் பாதையின் நல்வழியினைக் காட்டுவதை உணர்த்துகின்றன. இனியவை நாற்பது வாழ்வில் மேற்கொள்ள வேண்டியவை பல உள என்பதனையும். இன்னா நாற்பது தவிர்க்க வேண்டியவை பல உள என்பதனையும் அறிவுறுத்துகின்றன. ஆசாரக்கோவை வாழ்வில் மேற்கொள்ள வேண்டிய பழக்க வழக்கங்களைக் குறிப்பிடுகிறது.

இங்கு மேற்காட்டியுள்ள கருத்துகளினின்றும் அறம் என்றால் என்ன என்பதனைத் தெளிவாக உணரமுடிகிறது. அறம் எனப்படுவது, பகுத்தறியும் ஆறாவது அறிவினைப் பெற்ற மானிடர் தம் வாழ்க்கையினை இயற்கை நெறியினின்றும் பிறழாது, எக்குறையுமின்றி, நேர்மையான வழியில் சிறப்புற நடத்திச் செல்வதற்குத் தேவையான கொள்கையினை விளக்குவதும், நீக்க

* சோமசுந்தர பாரதியார், தமிழும் தமிழரும்; 1971 : ப. 159.

**. ஔவை சு. துரைசாமி பிள்ளை : பதிணென் கீழ்க்கணக்குச் சொற்பொழிவுகள், கழகம்; 1966: ப. 17.

வேண்டியவற்றை எடுத்துக் காட்டுவதும் ஆகும் எனலாம். மனிதனின் அகவாழ்வும், புறவாழ்வும் செம்மையுறும்படி அவன் வாழ்வு நெறியைச் சிறப்பித்தல் எனவும் கொள்ளலாம். இவை அனைவருக்கும் பொதுவானவை. காலந்தோறும் நின்று நிலவுபவை.

அறநூல் வகைகள்

அறநூல்கள் இருவகையாக அமைகின்றன. ஒன்று நேரிடையாக மிகச் சுருக்கமாகக் கூறவந்த கருத்தினைக் கூறுவது ஆகும். இதனுள் ஆத்திசூடி, கொன்றைவேந்தன் போன்றன அடங்கும். வஞ்சகம் பேசேல் (ஆத்திச்சூடி, 27): நீராக்கோபம் போராய் முடியும் (கொன்றை வேந்தன். 40) என்பன போன்று மிகச் சுருக்கமாக அறிவுரைகள் அடங்கிவிடுகின்றன.

இரண்டாவதாக அமையும் நூல்கள் சற்று விரிவாக, விளக்கமாக அமைவனவாகும் திருக்குறள் போன்று பலபாடல்களில் ஒன்றன் விளக்கம் தொடரவும் காணலாம்.

மடல் பெரிது தாழை மகிழினிது கந்தம்
உடல்சிறியர் என்றிருக்க வேண்டா-கடல்பெரிது
மண்ணீரு மாகாத தனருகே சிற்றூறல்
உண்ணீரு மாகி விடும். (மூதுரை. 12)

எனும் ஔவையார் பாடலில் 'உருவு கண்டு எள்ளாமை வேண்டும்' எனும் அறிவுரை, மகிழம்பூ, ஊற்று எனும் இரு சான்றுகள் வழி விளக்கப் பட்டிருத்தலைச் சான்றாகக் காட்டலாம்.

முதல் வகையைச் சுட்டிச் சொல்வன என்றும் இரண்டாம் வகையை விரித்துக் காட்டுவன என்றும் அவற்றின் இயல்பு நோக்கி உணர்த்தலாம். இரண்டாம் வகை தம் விளக்கத்திற்காகச் சிறப்பாக மூன்று காரணிகளைக் கொண்டுள்ளன.

1. பழமொழி
2. கதை
3. உலகியல்

என அவை அமைகின்றன. இவை இங்குத் துணைநிலைப் பொருளாகின்றன.

பழமொழி என்பன, மனித வாழ்க்கையில் பல்வேறு துறைகளைப் பற்றி அறிவிலும் அனுபவத்திலும் முதிர்ந்தவர் தாம் கண்ட உண்மைகளைத் திடமாகக் கேட்போர் உளத்தில் பதியுமாறு உரைப்பனவாகும். அன்றாட வாழ்வில் பலராலும் உரைக்கப்படுவதாகவும், கேட்கப்படுவதாகவும் அமைதல் இதன் உயர்

வினை உணர்த்தும். நாள்தோறும் நம் வாழ்வில் கேட்கின்ற மொழிகளை, அறிந்த ஒன்றைக் கொண்டே அறிவுறுத்தும் பொழுது அவை கேட்போருக்கு எளிதாகப் புலனாகின்றன. எனவே அறவிலக்கியத்துள், அதன் கருத்து விளக்கத்திற்குப் பயன் படும் சிறப்புக் கூறாக இது அமைகிறது.*

கதைகள் என்பன விலங்குக் கதைகளாகவும், பழங் கதைகளாகவும் அமைகின்றன. புராணக் கதைகளும் உண்டு. இக்கதைகள் செய்யுள் வடிவிலும், உரைநடை வடிவிலும்** இடம் பெறுகின்றன. அறிவுரை கேட்டல் என்பது பொதுவாகக் கேட்போருக்குச் சலிப்பினை உண்டுபண்ணுவதாகும். அதனையே ஒரு கதையுடன் இணைத்துத் தரும்பொழுது கேட்பதற்கு ஆவலை எழுப்புவதுடன் கூறும் கருத்தினை ஏற்றுக்கொள்ள வேண்டியதன் தேவையையும் எளிதாக வலியுறுத்தும்.*** சிறப்பாகச் சிறார் களுக்கு இம்முறை நல்விருந்தாகிறது.

ஒரு கருத்தினை ஏன் வலியுறுத்த வேண்டும் என்பதற்கு விடையிறுப்பதாக உலகியல் அமைகிறது. உலகில் அன்றாடம் நிகழ்வனவாகவும், யாவரும் கண்கூடாகக் காண்பனவாகவும் அமைவன உலகியலாகும். அறிந்த ஒன்றைக் கொண்டு அறியாத பிறிதொன்றைத் தெளிவாக்குதல், வலியுறுத்தல் இங்கமைகிறது. அறநூல்களில் பரவலாக இது பின்பற்றப்படும் சிறப்புடை யது.**** இவை தவிர வரலாற்று நிகழ்வு போன்றன அருகிய நிலையில் பயன்படலும் உண்டு (பழமொழி நானூறு).

---

* செய்த தீவினையிருக்கத் தெய்வத்தை நொந்தக்கால்
எய்த வருமோ இருநிதியம்—வையத்து
அறும் பாவம் என்னவறிந் தன்றிடர்க்கின்று
வெறும் பானை பொங்குமோ மேல். (நல்வழி. 17)

** அ. லெ. நடராஜன், (மொழி.); ஈசாப் நீதிக் கதைகள்; பாரி புத்தகப் பண்ணை; 1976

*** தொலையாப் பெருஞ்செல்வத் தோற்றத்தோமென்று
தலையாயவர் செருக்குச் சார்தலிலையால்
இரைக்கும் வண்டூது மலரீர்ங் கோதாய் மேரு
வரைக்கும் வந்தன்று வளைவு. (நன்னெறி. 14)

**** நல்லா றொழுக்கின் தலைநின்றார் நல்கூர்ந்தும்
அல்லன செய்தற்கு ஒருப்படார்—பல்பொறிய
செங்கண் புலிஏறு அறப்பசித்துந் தின்னாவாம்
பைங்கண் புனத்த பைங்கூழ். (நீதிநெறி விளக்கம். 61)

இவ்விருவகை அறநூல்களும், பிறமொழி அறவிலக்கியத்துள்ளும் அமைந்துள்ளமை சுட்டற்பாலது.*

அறம்– பொருட் பகுப்பு

பொதுவாக அறநூல்கள் அறம், பொருள், இன்பம் என மூன்று பிரிவுகளாக அமைகின்றன. பிங்கல நிகண்டு, அரசியலறம் ஆறு என நவின்று அவற்றுள் அறநிலையறம், அறநிலைப்பொருள், அறநிலை இன்பம் என மூன்றைச் சுட்டுகிறது. அவற்றிற்கு விளக்கமாக,

1. நான்கு வருணத்தாரும் தத்தம் வருணத்தில் பிறழாது நிலைபெறப் பாதுகாத்தல் அறநிலை அறம். (761)

2. நெறிவழிநின்று தத்தம் நிலையினால் முயன்று பெறு பொருள் அறநிலைப் பொருள். (763)

3. குலமும் ஒழுக்கமும் குணமும் பருவமும் ஒத்த கன்னிகையைத் தீவேட்டு இல்லறத் திருத்தல் அறநிலை இன்பம். (765)

எனத் தருகின்றது. இக்கருத்துகள் அரசியல் நிலையில் மட்டுமின்றிப் பொதுநிலையில், அறநூல்கள் கருத்திற்கு ஓரளவு பொருந்துவனவாக அமைகிறது.

மெய்ம்மை பொறையுடைமை ஒழுக்கம் தவம் அடக்கம்
செம்மை ஒன்றின்மை துறவுடைமை—நன்மை
திறம்பா விரதம் தரித்தலோடு இன்ன
அறம் பத்தும் ஆன்ற குணம் (அறநெறிச்சாரம். 12)

என முனைப்பாடியார் அறத்திற்குப் பத்து வகைகளைக் காட்டுகிறார். அவற்றைக் குணமாகவும் அவரே குறித்துள்ளார். இங்கு மனிதன் வாழ்வில் மேற்கொள்ள வேண்டியன என ஒரு கூறு மட்டுமே கருத்துட் கொள்ளப்பட்டுள்ளது வெளிப்படை.

---

* "In general, all d. (Didactic) poetry falls into one or the other of these two catagories; It instructs the reader either along general lines; objectively, telling him what he ought to know about hls world and its structure or along specific lines telling him how to do different kinds of things".

—Princeton Encyclopaedia of Poetry and Poetics; Alex Preminger (Editor); 1975; p. 191.

ச. சோமசுந்தர பாரதியார் கருத்து

அறத்தினை இயற்கையறம் (Natural law), மக்கள் அறம் (Law of humanities) என இரண்டாக இவர் பிரிப்பர். இயற்கை அறம் என்பது என்றும் மாறாதது. நிலைத்து நிற்பது. மக்கள் அறத்தின் ஒரு பகுதி ஆட்சி அறம் (State law) அல்லது இறை இயல் அறமெனப்படும். மற்றது ஒழுக்கறமாம். இவற்றுள், ஒரு நாட்டாரின் ஆட்சிக்கு ஏற்றபடி அந்நாட்டாளரால் அமைக்கப் பட்ட கட்டளைகளான ஆட்சி அறம் நிலைமாறக் கூடியது. ஒழுக்கறம் மக்கள் இன முழுவதற்கும் ஒத்தமையும் பொது நியதி யாகும் என விளக்கம் அமைக்கிறார்.* அறங்களின் இயல்பினைச் சுட்டுவனவாக இக்கருத்து அமைகின்றதே ஒழிய அதன் பாற்படும் பொருட்கூறுகள் பற்றிய விளக்கம் இதனுளில்லை.

க. த. திருநாவுக்கரசு கருத்து

பொருளடிப்படையில் அறநூல்களை நான்காக இவர் பகுக் கிறார்*.
1. துறவறம், இல்லறம் பேசுவன
2. சமயமும், சமயச் சார்பற்றதுமாக அமைவன
3. குழந்தைகளுக்கும் முதியோர்களுக்கும் உரியன
4. தொன்றுதொட்டு வரும் நெறிமுறைகளும், தத்துவ நெறிமுறைகளும் சிறப்புப் பெறுவன

என்பன அவை**. இப்பிரிவும் மேற்போக்காக அமைவதுடன், அற நூல்களின் இயல்பினையும் கருத்துட் கொண்டதாக அமைகிறது.

புறநானூற்று நீதிப் பாடல்களை ஆராய்ந்தோர். அவற்றுள் வாழ்வியல் கோட்பாடு, அரசியல் நெறி, உலகியல், அறம், ஆன்மீகத் தத்துவம் ஆகியன அடங்கியுள்ளதாகக் காட்டுவர்.***

---

* ச. சோமசுந்தர பாரதியார், தமிழும் தமிழரும்; ப. 159

** "We can classify these works on the basis of content also. They are:
1. Works on Ascetic & Householder Ethics.
2. Sectarian and non sectarian works.
3. Works for Children and Adults.
4. Works on Customary Morality and Moral philosophy.

—K. D. Thirunavukkarasu, Didactic Literature-II, Literary Heritage of the Tamils; International Institute of Tamil Studies; 1978; p. 580.

*** நா. செயராமன், தமிழ் இலக்கிய நெறிகள்; 1979; ப. 44.

இப்பகுப்புகள், மேற்போக்கானதாகவும், ஒன்றன்பாற் படுவனவாகவும், நூலியல்பினை இணைத்து நோக்குவனவாக அமைந்துள்ளன. எனவே அறநூல்களில் பொருட் கூறுகள் அனைத்தினையும் உட்கொண்டு வகைப்படுத்தும் புதிய பகுப்பின் தேவை எழுகின்றது.

பகுப்பாய்வு நெறி

(அ) அறப்பொருளின் பகுப்பிற்கு, சுட்டிச் செல்லலாக அமையும் முதல் வகைக்கு உலகநாத முதலியாரின் நன்னீதியும்* விளக்கிக் காட்டலாக அமையும் இரண்டாம் வகைக்கு வேதநாயகம் பிள்ளையின் நீதிநூலும்** கருவி நூல்களாகக் கொள்ளப்பட்டன.

(ஆ) கட்டுரைத் தெளிவிற்காக, ஆய்வாளரின் அறப் பொருட் பகுப்பு அட்டவணைகள்; முதலில் வைக்கப்பட்டுள்ளன. அவற்றிலிருந்து பொருட்கூறுகள் ஒவ்வொன்றாக விளக்கம் பெறுகின்றன.

(இ) பொருட் கூறு ஆய்வின்போது, அறப்பொருளின் அறிவுறுத்தும் வழி, சில வரையறைகளுக்குட்பட்டமைதல் புலப்பட்டது. அவற்றின் அடிப்படையில் இவ்வாய்வும் தொடரப் பட்டுள்ளதால் இவண் அவை பொதுநிலை விளக்கத்திற்கு அமைகின்றன.

1. இயல்பு
2. விளக்கம்
3. காரணம்
4. பயன்
5. எதிர்மறை

எனும் இவை, அறப்பொருளை அறிவுறுத்துதலுக்குப் பயன் பட்டுள்ள நெறியாகும்.

---

* உலகநாத முதலியார், நன்னிதி;பண்டிதமித்திர யந்திரசாலை; சென்னை; 1899.

** வேதநாயகம் பிள்ளை; நீதிநூல் மூலமும் உரையும்; சமகம்; 1960

இயல்பு என்பது அறிவுறுத்தும் கருத்தின் இயல்பு அதாவது அதன் தன்மை (nature) யாது என்பதாம். அக்கருத்தின் பாற்படுவன யாவை, அவற்றை எப்படி அறியலாம் போன்ற வற்றைக் காட்டுதல் ‘விளக்கம்’ (Explanation) ஆகும். கூறும் கருத்தினை ஏன் பின்பற்ற வேண்டும் அல்லது நீக்க வேண்டும் என்பதற்குரிய காரணத்தைத் தரல் காரணமாகும் (Reason). உரைக்கும் அறத்தினை மேற்கொள்வதால் அல்லது நீக்குவதால் வரும் பயனைச் சுட்டுவன பயன் (Result) ஆகும். அறிவுறுத்தும் கருத்தினை அதற்கு நேர் எதிர்நிலையினின்றும் விளக்கி அதன் மேன்மையை அல்லது தாழ்மையை எடுத்துக் காட்டுவது எதிர் மறையாகும் (Nagative approach).

எல்லா அறக்கருத்துகளும் இவ்ஐவகை நெறிகளையும் கொண்டமைகின்றன எனக் கூறவியலாது. இவற்றுள் ஒன்றினை அல்லது ஒன்றிற்கு மேற்பட்டவற்றை அக் கருத்துகளுக் கேற்பப் பெற்றுள்ளன. இவை இங்கு ஆய்விற்கு எடுத்துக் கொண்டுள்ள நூல்களுக்கு மட்டுமின்றி அனைத்து அறநூல்களுக்கும் பொருந்தும் பொது நெறியாகும். இதனை,

ஒறுத்தார்க்கு ஒருநாளை இன்பம் பொறுத்தார்க்குப்
பொன்றுந் துணையும் புகழ் (குறள். 156)

எனும் குறட்பாவின் வழி விளக்கலாம். இதனுள் பொறுமை அறிவுறுத்தப்படுகிறது. இப்பொறுமையை மேற்கொள்வதால் வரும் பயனாக, பொறுமை கடைப்பிடிப்பார் இறுதிவரை புகழுடன் திகழ்வார் என்பது தரப்படுகிறது. கருத்தினை மேலும் வலியுறுத்தற்பொருட்டு, எதிர்நிலையினையும் பயன்படுத்தி, பொறாது ஒறுத்தார்க்கு ஒரு நாளுக்குத் தான் இன்பம் என்பதும் காட்டப்படுகிறது.

(ஈ) பொருட்கூறுகள் பொதுநிலையில் அறநூல்கள் அனைத் திற்கும் உடன்பாடே என்பதனை இறுதியிலமையும் அட்டவணை உணர்த்துகிறது. அதனுள் ஒவ்வொரு பொருட்கூற்றிற்கும் பிற இலக்கியச் சான்று தரப்பட்டுள்ளது.

## பகுப்பு அட்டவணைகள்

### அட்டவணை-1




### அட்டவணை-2



## அட்டவணை-3

### (2) சொல்




## அட்டவணை-4

### (3) செயல்



அறங்கள் பொதுநிலையில் சமுதாய அறம், அரசியலறம் என அமைகின்றன. சமுதாயத்தில் அனைவரும் மேன்மக்களாகத் திகழ ஒவ்வொருவரும் கடைப்பிடிக்க வேண்டியவற்றை வரையறுத்துக் கூறுவன சமுதாய அறமாகும். சமுதாயத்தின் உயர்விற்கு ஆவன செய்ய வேண்டியது அரசியல் கடமையாகும். அவை அரசியலறமாக இங்குப் போற்றப்படுகின்றன.

## சமுதாய அறம்

தாமாக எந்தவிதமான வற்புறுத்தலுமின்றிச் சில நோக்கங் களை நிறைவேற்றுவதற்காக, சில பொதுவான உறவுகளையும், கட்டுப்பாடுகளையும் இயல்பாகத் தம் வாழ்க்கையில் கொண்டு இயங்கும் மக்கட் தொகுதியினைச் சமுதாயமாகக் கருதுவர்.* அச்சமுதாயம் பின்பற்ற வேண்டிய அறங்கள் சமுதாய அறமாகின்றன.

தனி மனிதனை நோக்கி மிகுதியாகச் சமுதாய அறம் இயம்பப்பட்டுள்ளமைக்குக் காரணம் சமுதாயத்தின் உறுப் பினனாக மனிதன் விளங்குவதாகும். அவன் தன்னைச் செம்மை செய்வது சமுதாயச் செம்மைக்கு முன்னோடியாதலின் அவனைத் திருத்துவதை, அவனுக்கு வழிகாட்டுவதை இது முதன்மைப் படுத்துகிறது. இச்சமுதாய அறம் இறைமை, வாழ்க்கை என மேலும் பகுப்பிற்குள்ளாகிறது.

## இறைமை

தமிழர் தம் வாழ்வோடு இறைவழிபாடு இரண்டறக் கலந்துள்ளமையின் அறநூல்களிலும் இது சிறப்பிடம் பெற்றுள்ளது. ஏதேனும் ஓர் அறக் கருத்தினை உரைக்குங்கால் அதனை இறைக் கருத்தோடு தொடர்புகாட்டல் பெருவழக்காக அமைதலும்** சான்றுகளில் புராணக் கதைகள் இடம் பெறுதலும் இங்கு எண்ணத்தக்கன.

---

* இலக்குமிரதன் பாரதி; நமது சமூகம் (சமூகவியல்); 1969. ப. 71.

** திரிஅழல் காணின் தொழுப விறகின்
எரிஅழல் காணின் இகழ்ப ஒருகுடியில்
கல்லாது மூத்தானைக் கைவிட்டு கற்றான்
இளமை பாராட்டும் உலகு.
(நான்மணிக்கடிகை. 63)

பொதுவாக, நமது நாட்டில் அறவியல் கடமைகளையும், பழக்க வழக்கங்களையும், சமயச் சார்பினின்றும் வேறுபடுத்திப் பார்க்கும் வழக்கம் இல்லை எனும் உரை* இக் கருத்தினை வலியுறுத்தக் காணலாம்.

பக்திக் கவிஞர் பலர் அறநூலாசிரியராகவும் இருத்தலும் (குமர குருபரர்-நீதிநெறி விளக்கம்; சிவப்பிரகாசர்-நன்னெறி); அறநூல்களின் தோற்றம் சமயத்தவரால் ஏற்பட்டமையும் இவண் குறிப்பிடற்பாலது.

இறைப்பற்று, இறை நம்பிக்கையை வற்புறுத்தும், முதன்மைப் படுத்தும் போக்கில் இங்கு இறைமை அமைகிறது. அன்றாட வாழ்வில் இடம்பெறும் வாழ்வியலோடு ஒன்றியதாயினும், அற நூல்களில் இதன் சொல்வாக்குக் குறித்து, இங்குத் தனித்துப் பகுக்கப்பட்டுள்ளது.

இறைமையானது இறை, இறைச் சார்பு என இருநிலைகளில் சிறப்பிக்கப் படுகிறது.

இறை**

இங்கு வழிபடு தெய்வமும், தெய்வநிலைக்கு ஏற்றிச் சிறப்பிக்கப்படுபவரும் அடங்குகின்றனர். தெய்வமுண்டெனல்' என்பதன் மூலம் நீதிநூல் இறை நம்பிக்கையை வளர்க்கிறது. நேரிடை நின்றும், எதிர்மறையிலும் (1:8) இறை உண்மை நவிலப்படுகிறது.

இறைவன் பிறப்பு இறப்பு இல்லாப் பெரியோன் (2:1); இத்தகை வடிவினை உடையவன் என்று இனஞ் சுட்டுவதற்கு அரியன் (2:2); எங்கும் எப்பொருளினும் நீக்கமற நிறைந்திருப்பவன் (2:8); உலகியற்கை வகுத்தவன் (2:4); அவற்றை இயக்குபவன் (2:20); யாவரும் முழுமையாக உணர்தற்கோ, வாழ்த்தற்கோ அரியவன் (2:5—6) என அவனியல்பு பேசப் படுகிறது.

---

* க.த. திருநாவுக்கரசு, திருக்குறள் நீதி இலக்கியம்; ப. 29.

** முகுந்தன் அடியை முன்னித் தொழுமின். (நன்னீதி. 93)

பூதம் யாவுக்கும் ஏணாய்ப் பொருந்திய விசும்பைக் காற்றை
வேதனூ லதனை மண்ணோர் மெய்யுரை யுயிரை நெஞ்சை
ஏதமிலறத்தைக் கண்ணாற் பார்த்திலோ மெனினும் உண்டென்று
ஓதல்போல் தெய்வந்தானொன்றுள தென்ல் தேற்றமம்மா.
(நீதிநூல். 1:5)

இறைவனை வழிபடுமுறையை விளக்குவதாக நன்னீதி, உருவவழிபாட்டையும் (அயன் அரி அரன் உருவமைத்து இறைஞ்சுமின்—25); அவன் புகழ் பேசலையும் (கிரியை எடுத்தான் கீர்த்தியைக் கூறுமின்—34); இறைத் திருவடிகளில் சரண் புகலையும் (பதுமவல்லியின் பாதம் பணிமின்—78); நாமத்தைப் பகர்தலையும் (ஓமெனும் பிரணவம் உச்சரித்திருமின்—111) காட்டுகின்றது.

நில்லா உலகத்து இயற்கை நோக்கி காலந் தாழ்த்தாது (2:14) வழிபட்டு, உளத்துள் அவனருள் காட்சியைக் கண்டு உய்தி பெறல் வேண்டும் (2:15) என வலியுறுத்தும் நீதிநூலார், இறைவனைத் தொழாத உறுப்புகளால் பயனின்று (2:17) எனவும் காட்டுகிறார். இறைவழிபாட்டினை மேற்கொள்வதற்குக் காரணமாக, அவனருளின்றி நால்வகைப் படைகொளினும் பகையை எதிர்த்து ஒழித்தல் இயலாது (2:12) என்பது உணர்த்தப் படுகிறது. இவர், இத்தகைய இறைவனைத் தொழுவதால் வரும் பயன்களாக, பாரெல்லாம் பகை செய்தாலும் பராபரன் கருணையினால் எத்துயரும் நேராது (2:11); அவனை உளத்தால் நினைக்க நினைக்கப் பேரின்பம் ஊற்றெடுக்கும் (2:13) என்பவற்றைத் தருகிறார்.

இறைச்சார்பு*

இறைத் தத்துவங்களும் இறைவனோடு தொடர்புடைய பிறவற்றையும் அறிவுறுத்துவன இதனுளடங்கும்.

நன்னீதி இறைத் தத்துவத்தினைப் பேச (சக்தி சிவத்தின் சாதன முணர்மின்—44); நீதிநூல் யாக்கை நிலையாமையைத் தருகிறது. நிலையாமை உணர்வு, ஒன்றன்பாலுள்ள பற்றுதலை ஒழித்து அறம் செய்தலை வற்புறுத்தற்காக அற நூல்களில் பயன்படினும், அவை இறைத் தத்துவத்தில் அடங்குகின்றமை

---

* நன்றாய் ஞான நாட்டங் கொண்மின். (நன்னீதி. 67).

எமதெனும் மெய்பிறக்குமுன் எங்கிருந்தது இன்னம்
　　சிலகாலத் தெங்கே செல்லும்
அமருயிர் நீங்கிய பின்வோர் கணமுமனை
　　சேயர தன் அருகே நில்லார்
தமர் சவமென் றெடுத்தெறிவார் பறவைவிலங்
　　கினம் கூடித் தத்திக் கொத்தி
அமர்செய்து புசிக்கும் அப்போதென்னென்று
　　கேட்பவரார் அறிவில் நெஞ்சே. (நீதிநூல் 40:16)

யாலும், எமன் போன்ற மீவியல்புக் கூறுகளோடு இணைத்துக் கூறப்படுவதாலும் இங்குப் பேசப்படுகிறது.

அழியக் கூடிய இவ்வுடலின்மீது யான், எனது எனும் பற்றொழித்தலை, இயல்பு கூறியும், காரணம் காட்டியும் வேண்டுகிறார். இவ்வுடல் எப்பொழுது என்ற காலம் கருதாது கூற்றுவனால் கவரும் தன்மையுடையது (40:5, 6, 7); உடலின் உயிர் நீங்கின் அவ்வுடலால் எப்பயனும் இன்று (40. 3) என்பன வற்றை இயல்பாகத் தந்து, உடலின் உயிர் நீங்குவதைத் தடுத்தற்கு மானிடர் அறியார் என்பதனைக் காரணமாக உணர்த்துகிறார்.

யாக்கை நிலையாமை மட்டுமின்றி, பொருள் நிலையாமை, இளமை நிலையாமை முதலானவற்றையும் பிற அற நூல்கள் காட்டுகின்றன. நாலடியாரின் முதல் மூன்று அதிகாரங்கள் நிலையாமைகளுக்குச் சிறப்பளித்திருக்கக் காணலாம்.

## வாழ்க்கை

ஒரு மனிதனின் பிறப்பு முதல் இறப்பு வரை நிகழும் நிகழ்வு களை, அவன் செய்யும் செயல்களையெல்லாம் இணைத்து வாழ்க்கை என்கின்றோம். அவ்வாழ்க்கையானது நிறைவுடைய தாக இன்பமானதாக அமைய அற நூலாசிரியர் விழைகின்றனர். அதற்குரிய நெறிகளை வகுத்துத் தருகின்றனர். அவை மனிதனை உள்ளும் புறமும் பண்படுத்துகின்றன. உயர்ந்த வாழ்க்கையினைத் தருகின்றன.

இரவு பகல், இன்பம் துன்பம் என்னும் உலகியலோடு இணைந்தவனாக மனிதனும், நல்லனவும் தீயனவும் கலந்தவனாகக் காட்சியளிக்கின்றான். நல்லனவற்றை வற்புறுத்தவும், தீயனவற்றை விலக்கவும் அறநூல்கள் முயல்கின்றன வாதலின், வாழ்க்கையில் சிறந்த பண்பாளராக முன்னேறிச் செல்வதற்கான நெறிகளைக் காட்டுகின்றன. அவற்றை அகநிலை, புறநிலை என இரண்டாகக் கொள்ளலாம்.

மனிதனின் இயக்கம், அவனது எண்ணம் (உணர்வு), சொல், செயல் இவற்றால் வெளிப்படுகிறது. இவற்றுள் ஒருவரது மனத்துள் நிகழும் எண்ணம் அல்லது உணர்வுகளைப் பிறரால் முழுமையாக அறிய இயலாது. எனவே அது அகத்தின் பாற்பட்டு இங்கு அகநிலையாகக் கருதப்படுகிறது. சொல்லும் செயலும் புறத்தாருக்கு அறியக் கூடியதாதலின் புறநிலையாகின்றன.

## அகநிலை

### எண்ணம் (உணர்வு)

சிந்தனையின் இருப்பிடமான மனது எண்ணும் எண்ணங்கள் அனைத்தும் தூய்மையானதுதான் என்று சொல்வதற்கில்லை. வெளியில் தனக்குக் கிடைக்கும் அனுபவத்திற்கு, பார்க்கும் காட்சிகளுக்கு, அறியும் செய்திகளுக்கு ஏற்பப் பலவிதமான உணர்வுகள், எண்ணங்கள் எழுகின்றன. சில இயல்பாகவே அவனது மனதுள் அமைகின்றன. இவை அனைத்தினையும் வேண்டியன, வேண்டாதன என இரண்டாகப் பிரிக்கலாம்.

#### வேண்டியன

வேண்டியன என்பன நல்வழிக்கு மனிதனை இட்டுச் செல்வனவாகும். அனைவராலும் வேண்டப்படுவனவாகும்.

#### மெய்யுணர்வு*

இது மிக இன்றியமையாததாய்க் கருதப்படுகிறது. ஒன்றன் உண்மை நிலையை ஓர்தல் மெய்யுணர்வாகும். இதனால் ஒன்றின் நன்மை, தீமை உணரப்பட்டு அதற்கேற்ப ஒழுக முடிகிறது.

'ஓதிய நூலின் உண்மையை உணர்மின்' என்று நன்னீதி (11) சுருக்கமாக இயம்பினும் இது மிக ஆழமான பொருளுடைய தாகும். ஒன்றன் இயல்பினை உள்ளபடி அறிதற்குச் சிறந்த அறிவு தேவை. அவ்வறிவினை நல்குவனவற்றுள் அறநூற்கல்வியும் ஒன்று. இவ்வறநூல்கள் உலகை, வாழ்க்கையை அறிந்து கூறியுள்ள அறக் கருத்துகளின் உண்மையை உணர்ந்துகொள்ளுங்கள் என்று வேண்டும் பொழுது, உணர்வுடன் நிற்காது வாழ்விலும் அதனைப் பயன்படுத்தல் தேவை என்பது பெறப்படுகிறது.

---

* அத்திருமுலகிற் சில்லோர்
  அகத்தொன்றும் வாக்கிலொன்றும்
வைத்திதஞ் சொல்லா லியாவும்
  வனச் செவி யேற்ப தன்றிச்
சத்திய மெனக் கொண்டேகல்
  சக்கினை மூடி நீண்ட
பித்திகை யேறிச் செல்லும்
  பேதைமை நிகர்க்குமாதோ.

(நீதிநூல். 37:6)

நீதிநூல் நவிலும், 'புகழும் இகழும் மதியாமை'யும் இதன் பாற்படுகிறது. நிலையிலா மக்கள் புகழும், புகழ்ச் சொற்களும் நீர்மேல் எழுத்தாம் இயல்பின (37:1). மாற்றான் உரைக்கும் கடுஞ்சொற்களால் வரும் தீங்கும் ஏதுமில்லை (37:3) ஆதலின் புகழ் மொழி கொண்டு பெருமையும், இகழ்மொழியால் தாழ்வும் கொள்ளாது அவற்றைச் சிறப்பிக்காது நீக்கிவிடும் மெய்யுணர் வினை நீதிநூலார் வேண்டுகிறார். பகைவர் உரைக்கும் தீச்சொல்லை ஆய்ந்து அவை உண்மையாய் இருப்பின், அவற்றை நீக்கித் தன்னைத் திருத்திக் கொள்வதால் பயனுண்டு என வழிகாட்டுகிறார் (37:7). உள்ளொன்றும், புறமொன்றுமாக அமையும் புகழ்ச் சொற்களை உண்மையென உணர்வது பேதைமைக்கு ஒப்பாகும் (37:6) என்று எதிர்நிலையின் வழியாகவும் வலியுறுத்துகிறார்.

ஔவையார் ஆத்திசூடியில் வேண்டும், பேதமை யகற்றவும் (83); மனத் தடுமாற்றம் நீக்கவும் (87) இம் மெய்யுணர்வு தேவை என்பது குறிப்பிடற்பாலது.

### அடக்கம்*

அமரருள் உய்விக்கச் செய்யும் அடக்கத்தினை, ஐம்புலன் களை, மனத்தினைக் கட்டுப்படுத்தித் தன்வழிப்படுதல் வழிப்பெற அறிவுறுத்துகிறார் நன்னீதியார் (9, 18). அடக்கத்தின் விளக்கத் தினை நீதிநூலார் காட்டுவார் (45:2). பல அற நூல்களாலும் பலவாக அடக்கம் சிறப்பிக்கப்பட்டுள்ளமையின், இதனை நீதிநூலார் விரிவாகப் பேசவில்லை எனலாம். திரிகடுகம் பாடிய நல்லாதனார், வாயடக்கம், செயலடக்கம், பொய்யற்ற மனவடக்கம் என மூவகையாக அடக்கத்தினைக் காட்டுதல்** சுட்டத் தக்கது.

---

* தேமலி சுவைக்கனி பல செறிந்துயர்
காமரம் வளைதல் போற் கலையுணர்ந்திடும்
தூமன மாட்சியோர் தொழுவர் யாரையும்
பாமர ரெவரையும் பணிந்திடார் களே.
(நீதிநூல். 45:2)

** வாயின் அடங்குதல் துப்புரவாம் மாசற்ற
செய்கை அடங்குதல் திப்பியமாம் பொய்யின்றி
நெஞ்சம் அடங்குதல் வீடாகும் இம்மூன்றும்
வஞ்சத்தின் தீர்ந்த பொருள். (43)

பொறுமை*

மெய்யுணர்வுடன் மனவடக்கம் அமைந்துவிட்டால் ஒருவருக்குப் பொறுமையும் இயல்பாகவே வந்துவிடும். பிறர் குறைகளைப் பொருட்படுத்தாது பொறுத்துக் கொள்வது பொறுமையாகும். பிறர் குற்றத்தைப் பொறுத்துக் கொள்ளுதல் அறிவுடையார் குணமென இதன் இயல்பு காட்டும் நீதிநூலார், இறைவன் ஒருவனை அன்றி மற்றனைவரும் பிழையுடையோரே எனக் காரணம் சுட்டி (31:1) இதன் தேவையை உணர்த்துகிறார். இன்னா செய்தார்க்கும் இனியவே செய்யும் பொறுமையைப் பெருமைப்படுத்துகிறார் (31:4).

இரக்கம்**

பிறர் துயர் கண்டு வருந்துவதும், அதனை நீக்க முனைவதும் இரக்கத்தின் பாற்படும். மனிதனை மனிதனாக்கும் பண்புகளுள் உயர்ந்த இதனை நன்னீதியார் சுட்டிச் செல்ல, நீதி நூலார் இவ்வெண்ணம் செயற்படும் நிலைகளை மட்டும் சிறப்பித்துரைக்கிறார். அவை, அவற்றிற்குரிய இடங்களில் உணர்த்தப் பட்டுள்ளன.

---

* எப்பிழைக்கா நீ பிறரைச் சினந்தவர்க்கின்
னாவியற்ற வெண்ணினாயோ
அப்பிழை நீ செய்திலையோ வுன்னைப்போ
லவர் பிழைக்க லாகா தோமா
வெப்பமுற நாணிலையோ நீயொருவன்
பிழைபுரிய விண் வேந்தன் கை
ஒப்பமுடனதிகாரம் பெற்றனையோ
மனமே நீயுரை செய்வாயே. (நீதிநூல். 31:1)

** நொந்தவர் தமக்கருள் நோக்கம் புரிமின்.
(நன்னீதி. 76)

பெரியவர் கேண்மை*

வாழ்க்கைக்கு வழிகாட்டியாக அறநூலமைவது போன்று, அதனைத் தம் வாழ்வில் கடைப்பிடித்து ஒழுகும் பெரியோரிடம் நட்புக் கொள்வதும் ஏற்றம் தருவதாம். ஒருவரை நல்வழியில் ஆக்கவும், தீவழிப்படுத்தி அழிக்கவும் கூடிய இயல்பினது நட்பாதலினாலும்; மாந்தர் அனைவருக்கும் அவ்வப் பருவத்தில் நண்பர் இருத்தல் இயல்பான தாதலாலும் அனைத்து அற நூல்களும் சிறப்பித்துப் பேசுதலாக நட்பு அமைகின்றது. அந்நட்பு சான்றோரிடம் அமையும்பொழுது நல்வழிப்படுத்துகிறது. கயவரை நட்புக்கொள்ளும் பொழுது அழிவிற்கு வழி காட்டுகிறது. பெரியோர் கேண்மை சிறப்புடைத்தாக வேண்டிய உணர் வாதலில் இங்கு நினைக்கப்படுகிறது. பெரியோரிடத்தில் சேர்வதற்குரிய காரணத்தை நீதி நூலார் தர (30:6) நன்னீதியார் 'மேன் மகனுறவை விழைந்து கொண்மின்' (96) என அறிவுறுத்து கிறார்.

உளநிறைவு**

இருப்பதில் நிறைவு கொள்ளும் உணர்வு இங்கு உளநிறை வாகக் குறிக்கப்படுகிறது. வேண்டாத ஆசையை எளிதாக ஒழிப்பதற்கு உதவும் உணர்வு இவ்வுளநிறைவாம். நிறைவேறாத ஆவல், நடைபெறாத எதிர்பார்ப்புகள், மேலும் மேலும் ஒன்றன் பாற் செல்லும் விழைவு போன்ற துன்பங்களுக்கு விடுதலை யாகவும் இஃது அமைகிறது. இதனையே நமது முன்னோர் 'போது மென்ற மனமே பொன் செய்யு மருந்து' என்றறிவுறுத் தியுள்ளனர். இதனை நீதிநூலார் இயற்கை வழி அறிவுறுத்து கிறார். அமைதியான இன்பமான வாழ்விற்கு இது உறுதுணையாம்.

---

* பாரினிற் பிறந்த போதெவரும் பண்பினார்
பூரியரெனப் பெயர் பூண்டதில்லையால்
சீரிய ரென்னலுந் தீயரென்னலுஞ்
சேரினத் தியல்பினாற் சேர்ந்த நாமமே. (நீதிநூல். 30:6).

** பறவையும் விலங்குந் தீனி
பசித்தபின் தேடும் நாளைக்
குறையெனுங் கவலையில்லை
உண்வின்றி இறந்த தில்லை
வறிய ரெம்மில் பல்லோர் இவ்
வையத் துளர் தேவு ஈந்த
சிறிதுமே பெரிதென் றெண்ணிச்
சிந்தையே மகிழ்ந்து கொள்ளே. (நீதிநூல். 45:10)

**வேண்டாதன**

மனிதனை அழித்து அதன் வாயிலாக வாழ்க்கையினைச் சீரழிக்கும் தீய எண்ணங்கள், உணர்வுகள் இங்கு எண்ணப் படுகின்றன.

**தீநட்பு***

மனிதனுள் இயல்பாகவே அமைகின்ற தீமையை மிகுவிப்ப தாகவும், பிற தீய எண்ணங்களை உண்டுபண்ணுவதாகவும் அமைவது தீநட்பு. எனவே நல்லோர் நட்பினை வலியுறுத்துவதை விட அதிகமாக, அறநூல்கள் தீநட்பை விலக்குதலைப் பேசுகின்றன. நல்லோர் நட்பு இன்றியும் சிறந்த, செவ்வையான வாழ்க்கையினை நடத்திவிடலாம். ஆயின், தீநட்பு சிறிதளவு இருந்துவிட்டாலும் அது முழுமையாக ஒருவனை அழித்துவிடும் இயல்புடையது. எனவே இதனை அறவே ஒழிப்பதில் அறநூல்கள் முயல்கின்றன எனலாம்.

கீழான அறிவுடைய தீயோர் (37): சூதர் (49); சோம்பர் (54); பிறரைத் துன்புறுத்தித் தான் இன்புறும் துட்டர் (60); தீய பழக்கவழக்கங்களை உடைய தூர்த்தர் (61); மூடர் (94) ஆகியோர் நட்பு ஒதுக்கப்பட வேண்டியது என்பது நன்னீதியின் கருத்தாகும். கெடுமதியாளரையும் வஞ்சனை யாளரையும், பிறருக்குத் தீங்கு புரிவோரையும் துணை கொள்வதனால், அவர்களால் தனக்கு விளைவதும் தீங்காக இருப்பதுடன், தீய வழிக்கே இட்டுச் செல்வதினால் தீநட்பை ஒழித்தல் தேவை யாகிறது. தன்னுடன் பழகுவோரின் பழக்கவழக்கங்கள் தன்னிடம் படிதல் இயல்பாதலின் தூர்த்தர் உறவும், சோம்பர் உறவும் கடியப்படுகின்றன. மூடரால் எவ்விதப் பயனும் இருப்பதில்லை. மற்றும் அவரால் இடர்ப்பாட்டில் சிக்கி விடுதலும் கூடுமாதலின் விலக்கப்படுகிறது.

தீயரே தீயரைச் சேர்வராதலாலும், மேலோரைச் சார்ந்த கீழோர் மேன்மையடையாவிடினும், மேலோர் அவரைச்

---

* சூதர் நேசஞ் சொல்லா தொழிமின். (நன்னீதி. 49).

கயவரைச் சேர்ந்தவன் கலந்த போதவர்.
செயலினை யெண்ணுவன் தினஞ் செலச்செல
மயல் மிகுந்தவர் செயல் மகிழ்ந்து அனுட்டிப்பன்
இயவரைச் சேர்தல் போல் இல்லைத் தீமையே.

(நீதிநூல். 30:7)

சார்ந்தால் அவரியல்பினைப் பெற்று இழிவடைதல் உறுதி (30:2) ஆகலின் தீநட்பு விலக்கப்படவேண்டும் என்று நீதிநூலார் அறிவுறுத்துகிறார்.

அவா*

பல தீய பண்புகளுக்கு வித்தாவது இதுவாம். ஒன்றன்மீது எழும் அவாவானது அதனை எப்படியேனும் பெறல் வேண்டும் என்ற முனைவில், பல தீய வழிகளுக்கும் அடிகோலுகிறது. பெற இயலாக் காலையில், துன்பம், சினம், அதனைக் கொண்டிருப் பாரைக் கண்டு பொறாமை, பெற்றவுடன் அதனைத் தாம் கொண்டுள்ளதால் செருக்கு எனப் பல ஒருவரைப் பற்றுதல் கூடும். மற்றும் ஒன்றன் மீதுள்ள அவா, ஒவ்வொன்றாக, பிறவற்றின் மீது சென்று மனநிறைவினை அழிக்கக் கூடியதாம். எனவே பல்வகைத் துன்பங்களுக்கும் விளைநிலமான இதனை ஒழிப்பதில் அறநூல்கள் முன்னிற்கின்றன. அவா, இரு நிலைகளில் ஏற்படுகிறது. ஏதேனும் ஒருபொருள்மீது கொள்ளும் விருப்பு; பிறருக்கு உடைமையான பொருள்மீது கொள்ளும் விருப்பு என்பன அவை. இரண்டுமே நல்வாழ்விற்கு வேண்டாதனவாம்.

அழக் கொண்ட பொருளில் ஆசையை ஒழிமின் (28) என்று நன்னீதி பொது நிலையில் வேண்ட, பொருளாசை ஒழித்தலை நீதிநூலார் சிறப்பித்துக் கூறுகிறார். இறக்கும்பொழுது உடல், சேர்ந்த பொருளும் வருவதில்லை; அதன் மீது உடையவரின் பெயரும் இருப்பதில்லை (39:1); உடற்பயனை அழிக்கும் அதனை ஆக்கமெனல் பொருந்தாது (39:3); அது நிலையாத் தன்மையது (23:6) எனப் பொருளின் இயல்பு காட்டுகிறார். இவ்வுலகப் பொருள் அனைத்தும், அனைவருக்கும் பொது என விளக்கமும் அளிக்கிறார் (39:7), தேவைக்கு மேல் பொருள் சேர்ப்பதனால் பகை, அச்சம் முதலான துன்பங்கள் வரும் (39:13) ;இரக்கமாகிய நற்பண்பினை அழிக்கக் கூடியது (23:12) எனக் காரணங்கள் காட்டிப் பொருளாசையை ஒழிக்க வேண்டுகிறார்.

---

* ஒப்பரும் நற்குணத்தவர்க்கும் கொலைகாமம்
　　கட்களவை உபதேசிக்கும்
அப்பனாய் நட்பினர்க்கு உட்பகை விளைக்கும்
　　சத்துருவாய் அகிலத்துற்ற
செப்பரிய துயர்க்கெல்லாம்
　　தீவினைக்கோர் செவிலியாய
இப்பொருளை நற்பொருளென்று எப்படி நீ
　　ஒப்புகின்றாய் ஏழை நெஞ்சே. (நீதிநூல். 39:2).

அழுக்காறு*

அவாவினால் அழுக்காறு விளைதலும், அழுக்காற்றினால் அவா விளைதலும் உண்டு. இவ்வாறு ஒன்றிற்கொன்று தொடர் புடைய தீய எண்ணங்களாக இவை அமைகின்றன.

என்றும் அழியாதனவற்றுள் ஒன்றாகி, துன்பத்தினை நாளுக்கு நாள் வளர்க்கக் கூடிய இயல்புடைத்து (26:5) என நவிலும் நீதிநூலார், அறிவுடையாரால் இது விலக்கப்படுதலை (26:6), துறக்க வேண்டியதன் காரணமாகக் காட்டுகிறார். இதனை மேற்கொள்வதனால் விளையும் பயன்பெருந் துன்பமும், பாவமுமாம் (10:2; 10:3).

சினம்**

சினமென்னும் சேர்ந்தாரைக் கொல்லியை, வெல்லுதலின் தேவை, அதனை மேற்கொள்ளுவதனால் வரும் தீவிளைவுகளை வலியுறுத்துவதன் வழியாக, உணர்த்தப் படுகிறது.

சினங்கொள்வார் கொடிய விலங்குகளும், நல்லறிவு பெறாத சிறு பிள்ளைகளும், மயக்கமுடைய பித்தரும், அறிவில்லா தோருமே ஆவர் என விளக்குகிறார் நீதிநூலார் (25:9). மற்றும், சினங் கொள்வதால் கொள்வோனுக்கும் துன்பமே எனக் காரணம் காட்டி, சினங்கொளச் செய்யும் அத்தீயவரைத் திருத்தி நல்வழிப் படுத்தலே வேண்டற்பாலது (25:11) என்று அறிவுறுத்துகிறார். தன்னைவிட மேலோர் மீது சினங் கொள்ளுங்கால் தானழிதலும், கீழோர் மீது கொள்வதால் அவரை வருத்தும் பண்பிற்காக நரகடைதலும் உறுதி (25:1) எனச்சினமேற் செல்வதன் விளைவு காட்டுகிறார்.

---

* மாங்கனி வாயிற் கவ்வி
மரத்திடை யிருக்கு மந்தி
பாங்கர்நீர் நிழலை வேறோர்
பழமுணுங் குரங்கென் றெண்ணித்
தாங்கரு மவா விற்றாவிச்
சலத்திடை யிறந்த தொப்ப
நீங்கரும் பொறாமை யுள்ளோர்
நிலத்திடைக் கெடுவர் நெஞ்சே. (நீதிநூல். 26:1)

** தழையுஞ் செல்வத்துட் பிறந்து நல்லோரவை சார்ந்து
பிழையில் நூலெலா முணர்ந்து நீவைகலும் பிழைத்தாய்
இழையுந் தீனராய்ப் பிறந்து கற்றிட வகையில்லா
உழையர் செய் பிழைக்கா முனிந்தனை யிதென்னுளமே.
(நீதிநூல். 25:7).

செருக்கு*

பல நல்ல பண்புகளை இல்லையெனவாக்கும் இயல்புடைத்து இச்செருக்கு. தன்னிடம் மட்டுமே ஒன்று உள்ளதாக எண்ணி அதன்பாற் கொள்ளும் செருக்கு, அஃது இல்லார்பால் தோன்றக் கூடிய இரக்கத்தினை அழித்துவிடும். தன்னைவிடப் பிறரிடம் அதிகமிருப்பின் அவர்பாற் பொறாமையைத் தூண்டும். மற்றும், மேலும் மேலும் அதனைப் பெற விழையும் வேணவாவினையும் உண்டாக்கும்.

நீதிநூலார் கல்விச் செருக்கு, அழகுச் செருக்கு, செல்வச் செருக்கு என மூவகைகளைக் குறிப்பிடுகிறார். என்னதான் வருந்தி வருந்திக் கவி பாடினும் அதன் கற்பனை முன்னோர் சொன்னதாகவே இருக்கும் (27:1); அனைத்தும் அறிந்தவர் யாரும் இல்லை (27:2); பல நூல்களைக் கற்றதால்தான் கவி படைக்க இயன்றது (27:3) எனக் காரணங்கள் கூறி கல்விபாற் செருக்குக் கொள்வதை மறுக்கிறார்.

ஆடை அணிகளால் இவ்வுடல் அழகு பெறுகிறது (28:1); தீய குணங்களை உள்ளடக்கி நல்லழகு கொண்டிருத்தலால் மட்டும் பயனில்லை (28:5) என்று அழகாற் செருக்குதலை விளக்கி, நிலையாமையைக் காரணம் காட்டிச் (28:2) செருக்குதலை விடப் பணிக்கிறார்.

செல்வத்தின் தாழ்வு (29:1); இறுதி நாட்களில் அதன் பயனின்மை (29:3): செருக்குக் கொள்வதால் இருக்கின்ற செல்வம் அழியும் (28:6) போன்ற காரணங்களால் செல்வச் செருக்கினை நீக்கும்படித் தூண்டுகிறார்.

---

* அத்திரங்கள் செய்வோர்தாம் எய்தல் தேரார்
ஆய்ந்தெய்ய அறிந்தோரம் பியற்றல் தேரார்
சித்திரங்கள் பொறிப்பவர் தாங்கருவி செய்யார்
திகழ்கருவி செய்பவர் சித்திரித்தல் கல்லார்
வத்திரங்கள் பூண்போர் நெய்தறியார் இன்ன
வாய்மை போலொன்றறிவோர் ஒன்று கல்லார்
சத்தியமாச் சகலமு நன்குணர்ந்தோர் போலத்
தருக்குற்றார் பெருக்குற்றார் திருக்குற்றாரே.
(நீதிநூல். 27:3).

எழிலுளேமெனச் செருக்குறு நெஞ்சமே யிழைதுகில் நீத்தங்கம்
கழுவிடாதுற நோக்குதி முகந்தனைக் கஞ்சந்தனில் நோக்கின்
எழுநிலத்திடை யுன்னின் மிக்காருளரென வறிவா யீமத்து
அழியும் வெண்டலை யுன்றலை போலிருந்தவணுற்ற
தறிவாயே.
(நீதிநூல். 28:1)

துன்பம்*

வாழ்வின் முன்னேற்றத்தினை, முயற்சியினை, வினை ஆக்கத்தினைத் தடை செய்வது துன்ப உணர்வாம். இதனால் தான் ஔவையார் 'துன்பத்திற்கு இடங்கொடேல்', எனத் தம் ஆத்திசூடியில் (58) வலியுறுத்துகிறார்.

துன்பத்திற்கான காரணிகளாகப் பெருங்காமம், சோம்பல், மீதூண், பெருந்துயில், துயிலின்மை, சினம், மிகுந்த உழைப்பு முதலானவற்றைச் சுட்டுகிறார் நீதி நூலார் (41.7). இவர் உலகில் துன்பம் என்பது இயல்பானதொன்று, நிலைத்த இன்பம் உலகில் இல்லை (41:3); வேண்டுவோர்க்கு வேண்டுவன நல்கும் இறைவனே தனக்குத் தந்தனவற்றைக் கொண்டானென்று கருதித் துன்புறாது இருப்பதே நல்லோர் பான்மை (41:11) என எதிர்நிலையினின்றும் அறிவுறுத்துகிறார். பொருளிழப்பால் வருந்துவோர் கீழோர்; இன்பம், துன்பம், இரண்டினையும் இயல்பாகக் கொள்வோர் மேலோர் (41:5) என்று துன்பத்தினை விட வேண்டியதற்குக் காரணம் காட்டுகிறார். உலக அழிவும் உய்விற்கே (41:7) எனத் தத்துவமும் பேசுகிறார்.

புறநிலை

மனிதனின் அகநிலை சிறப்படையுமாற்றைப் போதித்தமை போன்று, அவனின் சொல், செயலாகிய புறநிலைக் கேற்ற அறத்தினைக் கூறலும் உண்டு.

சொல்

சொல் என்பது மிக வலிமை வாய்ந்த ஓர் ஆற்றலாகும். 'தீயினாற் சுட்டபுண் உள்ளாறும் ஆறாதே நாவினால் சுட்டவடு' (குறள். 129) என்பது அதன் வலிமையை உணர்த்தும் இயல்புக் கூற்றாம். ஒருவரின் தன்மையினை அவனது செயல்மட்டுமின்றிச் சொல்லும் இனங்காட்டிவிடும். எனவேதான் அதனைப் பயன் படுத்தும் முறையிலும் வரையறைகளை விதிக்கின்றனர் அறநூலார். 'விரைந்து தொழில் கேட்கும் ஞாலம், சொல்லுதல் வல்லார் பெறின்' (குறள். 648) எனவும் சிறப்பிக்கப்படுகின்றது.

---

* பாரில் யார்க்கும் பழங்கண் சகசமாம்
வீரியங்கெட வெந்துயர்க் கஞ்சுதல்
போரினேர்ந்தவன் பொன்றலுக் கஞ்சலும்
நீரின் மீன் குளிர்க்கஞ்சலும் நேருமே.

(நீதிநூல். 41:1)

ஒன்றினை நெறிப்படுத்தலே நோக்கமாதலின் அற நூலாருக்கு எதனை உணர்த்தும் பொழுதும், அதனை உடனிலையாகவும், எதிர் மறையாகவும் நின்று தருதல் தவிர்க்க இயலாததாகிறது. விளக்கம் தருவதுடன், அது சிறப்புற்று விளங்குவதற்கு ஒருவர் பின்பற்ற வேண்டியவற்றையும், வேண்டாதவற்றையும் குறிப்பிட்டுச் செல்கின்றனர்.

வேண்டியன

இன்சொல்*

சொல் நிலையில் பின்பற்ற வேண்டுபவற்றுள் இது முதலிடம் பெறுகிறது. யாரையும் தன் வயப்படுத்தும் பெருமையுடைய இன்சொலால், சினம் முதலிய பொல்லாப் பண்புகள் மறைவதற்கு ஏதுண்டு.

இவர் நல்லார், இவர் இன்னார் என்பதனை அவரவர் வாய்ச்சொல்லே காட்டிவிடும் (32:3); துன்பத்தினை ஒழித்து இன்பத்தினைப் பெருக்கும் வன்மையும் இதற்குண்டு (32:8) என விளக்கிச் செல்லும் நீதிநூலார் புகழ், நன்மை, நட்பு எனப் பல நன்மைகளைப் பெறல் இதனால் ஆம் பயன் எனக் காட்டுகிறார் (32:1); எதிர்நிலை விளக்கமும் கடுஞ்சொல் வழித் தருகிறார் (32:5).

உண்மை**

கூறும் சொற்கள் இனியவையாக மட்டும் இருந்தால் போதாது அது உண்மையானதாகவும் இருக்க வேண்டும். அப்பொழுதுதான் அது பெருமை பெறும். உலகத்தார் உள்ளத்துளெலாம் வாழ வேண்டின் உண்மையைக் கடைப்பிடிக்க வேண்டும்.

---

* எதிர்சென்று முகமன் கூறியிருக்கையும் நல்கி யுண்டே
அதிசயமென வினாவி அன்பொடு முகமலர்ந்து
துதிபுரிந்துப சரிக்கும் தொழிலினாற் செலவொன்றில்லை
அதிர்கடல் உலகுளோர்தம் அன்பெலாம் வரவாமாதோ.
(நீதிநூல். 32:7)

** முன்னமோர் பொய்யுரைக்க வப்பொய் வெளி
யாகாமல் மூடும் வண்ணம்
பின்னுமோர் பொய்யுரைக்க வதையு நிலை
நிறுத்தவோர் பெரும்பொய் சொல்ல
இன்னவகை கைதவ மொன்றிரு நூறு
கைதவத்துக் கிடமாம் வாய்மை
தன்னையே முன்பகரின் சங்கடமொன்
றிலையதுவே தகைமை நெஞ்சே. (நீதிநூல். 15:1)

எனவேதான் நன்னீதியார் 'ஊதிய மிழக்கினும் உண்மை உரைமின்' (6) என வேண்டுகிறார். உண்மை உரைப்பதனால் பொய்யினால் வரும் இடர்ப்பாடுகள் இல்லையெனக் காரணம் காட்டுகிறார் நீதி நூலார் (15:1).

வேண்டாதன

இன்னாச்சொல்*

சொல்லின் சிறப்பு இனிமை தருதல் வேண்டும் என்று உணர்த்தியதுடன், அது எவ்வாறு இருக்கக் கூடாது என்பதனையும் பலவாறாகத் தந்துள்ளார். அவற்றுள் ஒன்று இன்னாச் சொல்லாகும். அதாவது கேட்பதற்கு இன்னாதவற்றை, நலம் பயக்காதவற்றைக் கூறுதல் இன்னாச்சொல் என்பதாகும்.

கயவரால்தான் இவ்வின்னாச்சொல் பயன்படுத்தப்படும் (32:2) என்று இயல்பு சுட்டும் நீதிநூலார், அவர்கள் இனிய சொற்களைப் பின்பற்றுதலால் வரும் நன்மைகளை இழப்பதுடன் மற்றும் பல தீமைகளையும் அதனை மேற் கொள்வதால் ஏற்க வேண்டியிருக்கும் என அறிவுறுத்துகிறார்.

தற்புகழ்ச்சி**

ஒருவன் தன்னைத்தானே தன் செயல்களுக்காகப் பிறரிடம் புகழ்ந்துரைத்தல் தற்புகழ்ச்சியாகும். ஒருவர் புகழைப் பிறர் கூறுவதே உண்மையான சிறப்புடையது. தானே கூறிக்கொள்ளும் பொழுது மெய்யாகவே பெருமைக்குரிய தாயிருப்பினும் தாழ்வு பெறுகிறது. எனவே அறநூலார் இதனை வெறுத்துரைக்கின்றனர்.

'பிறர் முன் தன்னைத் தான் பொருளென மெச்சல்போல் புன்மை வேறில்லை' (36:2) என இதன் இயல்பு தரும்

---

* இக்குவலயக் கனிழிவுக் கிடமதாகும்
பக்கரொடு மக்கள் பகைபுக்க வழி பண்ணும்
துக்கமும் விளைக்குமொரு துக்கமும் விளைக்கும்
குக்கனை நிகர்க்குமவர் கக்குமிழி கூற்றே.
(நீதிநூல். 32:2).

** தற்புகழ்வோன்றனைப் பழிக்கும் தாரணி
சொற்புகழ் விரும்பிடான் தனைத்துதித்திடும்
நற்புகழ் பெறுவழி நன்னடைக்கையோடு
அற்பமும் தற்புகழாமை யாகுமே. (நீதிநூல். 36:5).

நீதிநூலார் அறிவிலார் செயலாக இதனைக் குறிப்பர். கேட்போர், தற்புகழ்வார் பழியினைச் சுட்டி எள்ளுதல், தற்புகழ்வினால் வரும் தீப் பயன் (36:7) என உணர்த்தித் தற்புகழ்ச்சியை விலக்குகிறார்.

## புறங்கூறல்*

பிறரைத் துன்புறுத்துவனவற்றுள் இதுவும் ஒன்றாம். ஒருவரைப் பற்றித் தாழ்வாக, அவர் இல்லாதபொழுது பேசுதலை இது குறிக்கும். பொறாமை உணர்வும் இதற்குக் காரணமாகலாம்:

ஒருவனின் உள்ளத்தில் உள்ள குறைகளே, புறங்கூறலாக வெளிவருகிறது (21:3) என்று இயல்புரைக்கும் நீதிநூலார், புறங்கூற்றாளர் கூற்றை ஏற்பாருக்கு, புறங்கூறுவாரே பெரிய பகையாக அமைவர் என்று கேட்போரையும் கண்டிக்கிறார் (21:8). பழியஞ்சும் நல்லோர் இதனை மேற்கொள்ளார் (21:1) என்பதைக் காட்டிப் புறங்கூறலை ஒழிக்க வேண்டுகிறார்.

## பெரியாரைத் தூற்றல்**

தம்மிற் பெரியாரைத் தம் அறிவின்மையால் இகழ்ந்து கூறல் இதுவாகும். கீழோர் தங்களிடம் உள்ள குறைகளையே பெரியோர் மேலேற்றி உரைப்பர்(22:5) என்று இதன் தன்மையைச் சுட்டி, இதனால் அவர் கூறும் பழி அவரையே சாரும் (22:2) என்று பயனும் தருகிறார் நீதிநூலார்.

---

* நலத்தின் மிக்கார் சொலார் நயமில் சொல்லையே
சொலத்தகாப் பழிபிறர் மீது சொல்லுவோன்
குலத்தினும் நலத்தினும் குறையுளா னெனத்
தலத்தவன் வாய்மொழி சாட்சியாகுமே.
(நீதிநூல்.21:2)

** வாய்கைக்கும் நோயினர்க் கேமாமதுவுங் கைப்பாகும்
காய் வெயிலும் மஞ்சள் நிறம் காமாலைக் கண்ணருக்கே
சாய் நிழலுஞ் சுடுவெயிலாம் தாபச் சுரத்தினர்க்கே
தீயவர்க்குத் தூயவரும் தீயவர் போற்றோன்று வரே.
(நீதி நூல். 22:4).

பொய்ம்மை*

ஒன்றன் உண்மையை மறைத்துக் கூறுதல் பொய்ம்மையாகும். தனக்கு மட்டுமின்றித் தான் கூறும் பொய்யின் தொடர்புடையாளருக்கும் துன்பம் விளைக்கும் தன்மை பெற்றது இது.

பொய் சொல்லல், பொய் சொல்ல நினைத்தல், பொய் சொல்லப் பிறரைப் பழக்குதல், ஒன்றைச் செய்வேன் என்று கூறிப் பின் செய்யாதொழிதல், முடியாச் செயலை முடிப்பேன் எனல், மேலோரைப் புகழ்தல், பிறர் கூறும் பொய்யைப் பாராட்டல், மேலோரை இகழ்தல், அவர்பாற் கூறும் பழிச்சொற்களைக் கேட்டல், தற்புகழ்தல், புறஞ் சொல்லுதல், அளவிற்கு அதிகமாகக் கடன் வாங்குதல், பொய்ச்சான்று பகர்தல், கண், தலை, கை முதலியவற்றால் சாடை செய்து உண்மையைப் பொய்போல் பயனிலதாக்கல், மெய்சொல அஞ்சி ஊமைபோல் வாய் பேசாதிருத்நல், பொய்க்கதை சொல்லல், கேட்டல் இவைகளெல்லாம் பெரும்பழி தரும் பொய்க் குற்றங்களாம் என, எவையெவை பொய்யின் பாற்படும் என நீண்ட பட்டியல் தருகின்றார் நீதி நூலார் (15:9, 10).

இப்பொய்யை நீக்க வேண்டியதன் காரணங்களாக, ஆண்டவனுக்கு அஞ்சாரே பொய் கூறவும் அஞ்சார் (15:11); ஒரு பொய்யை மறைக்க வேண்டி அடுத்தடுத்துப் பலபொய் கூற வேண்டிவரும் (15:1); இப்பொய்யினால் பிற குற்றங்களும் பெருகும் (15:2); பொய் கூறுவோர் தம்மை மறந்து உண்மை கூறினாலும் அதனை எவரும் மதிக்கமாட்டார் (15:3) முதலானவற்றைத் தந்து அதனை நீக்க வற்புறுத்துகிறார்.

'பொய்ம்மையும் வாய்மை இடத்த புரைதீர்ந்த நன்மை பயக்கும் எனின்' (குறள். 292) எனும் வள்ளுவர் கருத்தைப் போன்று இவர், பிறருக்குத் துன்பம் தரக்கூடிய சொல் வாய்மையாக இருப்பினும் அது பொய்யாம் என நவின்றிருப்பது சுட்டத்தக்கது.

---

* அயலார் செய் குற்றங்கள் கூறாமல்
மறைத்தலே பரமா மன்னார்
துயருறா வண்ணம் நாம் பொய்த்தாலும்
பிழையன்று சொந்தமாவோர்
பயன் வேண்டிச் சிறியதோர் பொய்சொலினும்
பெரும்பழியாம் பார்மேல் கோய்
அயர்வாகப் புரண்டாலும் பிறர்க்கின்னா
தரும் பொய்யை அறையில் நெஞ்சே (நீதிநூல். 15;8).

சொற்சுருக்கம்

சொற்களின் இயல்பு சுட்டி, கொள்ள வேண்டியனவற்றையும், தள்ள வேண்டியனவற்றையும் விளக்கிய நீதிநூலார் அச்சொற்களைப் பயன்படுத்து மாற்றையும் அறிவுறுத்துகிறார். தேவையான நேரத்தில் தேவையானவற்றை மட்டுமே தேவையானவர்களுக்கு உரைப்பர் தக்கோர் என்பது அவரது அறிவுரையாம் (45:9).

## செயல்

எண்ணம் உருக்கொண்டு செயலாகும்பொழுது எண்ணத்தின் தன்மைக் கேற்ப அது, நற்செயலாகவோ. தீய செயலாகவோ அமைகின்றது. பொதுநிலையில் அவற்றைப் பண்பு, ஒழுக்கம், பழக்க வழக்கம், என முந்நிலைகளாகப் பகுக்கலாம். பண்பு என்பது குணம் எனப் பொது நிலையில் வழங்கப்படும். 'பண்பெனப் படுவது பாடறிந்து ஒழுகுதல்' (கலித்தொகை: 133:8) என விளக்குவார் பண்டைப் புலவர் நல்லந்துவனார். 'அரம் போலும் கூர்மையரேனும் மரம் போல்வர் மக்கட் பண்பிலாதவர்' என்று வள்ளுவரும்(குறள்.997)அதன் தேவையை வலியுறுத்துவர். சிறந்த பண்புகள் நல்ல ஒழுகலாற்றினை உருவாக்குகின்றன. அவை வாழ்வில் படியும் பொழுது, நல்ல பழக்கவழக்கமாக மாறுகின்றன. ஆகவே எண்ணத்தின் தூய்மை, சொல், செயலில் பிரதிபலித்தல் போல் பண்புகளின் சிறப்பு, ஒழுக்கம், பழக்க வழக்கம் இவற்றிலும் படிகிறது. மனிதனைக் காட்டிலும் அவனது செயல்கள் நீடித்து நிற்கும் தன்மையன. உலகில் பிறருக்கு அவனை இன்னான் என இனங்காட்டக் கூடியன. நல்லவை பிறருக்கு வழிகாட்டியாக அமைகின்றன. தீயவை நல்ல எச்சரிக்கைகளாக விளங்குகின்றன. எனவே செயல்களின் சிறப்பும் அற நூல்களால் வலியுறுத்தப் படுகிறது.

இச்செயல்கள் இங்குத் தன்மை பற்றியன, பிறரோடு தொடர்புடையன என இரண்டாகப் பகுக்கப்பட்டுள்ளன. தன்மை என்பது தன் செயல்கள் தன்னை மிகுதியாகப் பாதிக்கக் கூடியனவாகவும், பிறரோடு தொடர்புடையன என்பது, பிறரையும் பாதிப்பதாகவும் அமைதலைச் சுட்டுகின்றன. இவையும் முன் பகுதிகள் போன்று, வேண்டியன, வேண்டாதன என அமைகின்றன.

### தன்மை

#### வேண்டியன

#### கல்வி*

'கற்கை நன்றே கற்கை நன்றே பிச்சை புகினும் கற்கை நன்றே' என்று சிறப்பிக்கப்படும் கல்வி ஒவ்வொருவருக்கும் இன்றியமையா வினையாகிறது. வாழ்க்கையில் நல்லது எது, தீயது எது என்பதனைச் சீர்தூக்க உதவுவது அறிவு.அவ்வறிவினை நல்குவது கல்வி. இக்கல்வியால் சீர்பெற இயலுமாதலின், குறைகள் தவிர்க்கப்படுமாதலின் கல்வி அனைத்து அற நூல்களாலும் வற்புறுத்தப்படுகின்றது.

'கல்வியைக் கசடற கற்க முயலுமின்' (32); இலக்கணம் இலக்கியம் இரண்டும் உணர்மின் (26); வித்தையும் புத்தியும் விரைவுடன் அடைமின் (103) என நன்னீதியார் அறுவுறுத்துகிறார். நீதிநூலார் பொது நிலையில் கல்வி பற்றி அதிகமாக நினைக்கவில்லை.

#### கடமை

உலகில் மனிதராய்ப் பிறந்த ஒவ்வொருவருக்கும் பல கடமைகள் இருக்கின்றன. அக்கடமைகளைக் குடும்பத்திற்குரியன, சமுதாயத்திற்குரியன என இரண்டாகப் பகுக்கலாம்.

#### குடும்பம்

ஒரு குடும்பத்துள் தந்தை, தாய், மகன், எனப் பல உறுப்பினர் உளர். ஒருவரே உடன்பிறந்தோனாகவும், மகனாகவும், கணவனாகவும் (மனைவி) தந்தையாகவும் அமைகின்றார். இத்தகு நிலையில் ஒருவன் கடமைகள் என்னென்ன எனக் காட்டுவதைக் குடும்ப அறமாகக் கொள்ளலாம்.

---

* நுண்ணிய நூல் பல நுட்பமாய்த் தேர்மின். (நன்னீதி. 71).

நிதிசெல வாய்க்கெடு நீசர் வவ்வுவர்
மதியினை மயக்கி வெம்மறம் விளைத்திடுங்
கொதியழல் நிரகிடுங் குணமுங் கல்வியும்
விதிதரும் பதிதரும் வீடு நல்குமே.

(நீதிநூல். 8:8).

## உடன்பிறப்பு*

குடும்ப அறத்தின் கடமைகளுள் முதலாவதாக, ஒருவன் தன்னுடன் பிறந்தாருடன் வாழும் நெறி அமைகிறது. இங்குத் தன்னுடன் பிறந்தாரிடையே ஒற்றுமையாக வாழ்தல் வேண்டப் படுகிறது. அதன் வாயிலாகப் பிறரை வெல்லவியலும் என்பது நீதிநூலார் தரும் காரணமாம் (10:4—5). உடன்பிறந்தாரிடையே நிலவும் இவ்வொற்றுமை பின்னாளில் உலகில் அனைவரையும் தன் உடன்பிறந்தாராகக் கொள்ளும் பண்பிற்கு, தூய மனதின் விரிவிற்கு வழிகாட்டுவதாம். குடும்ப நலம் சமுதாய நலமாக மாற்றமடைதற்கு இதுவும் ஒரு சான்றாம்.

## மகன்**

எதனைப் பெற்றாலும் ஈன்றாரைப் பெறலரிது (7:9); பெற்றோரைப் போற்றார் 'இறைத் தண்டனைக்கு ஆளாவர் (7:4); ஈன்றாருக்கு ஈடில்லை (7:3) முதலான காரணங்களால், தாங்கொணாத் துன்ப காலத்திலும் அவரைக் காத்தல் பிள்ளைகள் கடன் (7:10) என அறிவுறுத்துவார் நீதிநூலார். தாயைத் தக்க தயவுடன் தாங்குமின் (57); தந்தை தாளைத் தகவுடன் பணிமின் (56) என்று நன்னீதியாரும் இக்கடமையைச் சுட்டுவார்.

---

* ஆதரை மிசை நரராய யாவரும்
சோதர ரென மிகத் துன்னல் நன்றென
வேதமே யோதுமால் விளங்குஞ் சோதரர்
மீதமை நட்பினை விளம்பல் வேண்டுமோ.
(நீதிநூல். 10:2)

** ஈன்றவர் நம்மால் உற்ற எண்ணரும் இடர்கட்கான்ற
மூன்றுலகமு மொப்பாமோ மூப்பினால் இளைப்பால் அன்னார்
கான்றவன் சொற்கள் கன்னல் கான்றவன் பாகெனக் கொண்டு
ஊன்று கோலென்னத் தாங்கி ஊழியம் செய்யாய் நெஞ்சே.
(நீதிநூல். 7:5).

**கணவன்—மனைவி***

இல்லறம் சிறந்து விளங்கக் கணவன், மனைவியர் இருவரின் பொறுப்பும் தேவையாதலின் இவர்களை இணைத்து நோக்கு கிறார் நீதிநூலார். மனமொத்த வேற்றுமையற்ற அன்பால் (11:2);ஒருவர் குறையை மற்றவர் மனங்கொளாது(11:4)செம்மை யான வாழ்வை ஒற்றுமையுடன் நடத்த (11:7) வற்புறுத்து கிறார். தன் குடும்பத்தாரை விட்டுப் பிரிந்து வந்துள்ள தன் மனைவிக்கு, கணவன் அவள் தாயாகவும், தந்தையாகவும், உடன் பிறந்தாராகவும் இருந்து அன்புடன் காக்கும் பொறுப்புண்டு என்று கூறுகிறார் (11:3, 15).

இதுபோன்று மனைவியின் கடமைகளாக மனையறம் பேணல் குழந்தைகளை வளர்த்தல், மாமன் மாமியரைப் பாதுகாத்தல், விருந்தோம்புதல், கணவனுக்குத் தேவையானவற்றைச் செய்தல் என்பவற்றைத் தருகிறார் (11:11). சிரிய கற்பினை வலியுறுத்து கிறார் (11:33).

இல்வாழ்வின் இன்ப துன்பங்கள் இருவருக்கும் ஒன்றா தலினாலும்(11:31) உருவில் இரண்டானாலும் எண்ணம், சொல், செயல் முதலியவற்றில் ஒருவரே (11:48) ஆதலாலும் இருவரிடையேயும் மன வேறுபாடின்மை சிறந்த இல்வாழ்விற்குத் தேவை என்பர்.

**தந்தை****

மக்களை நன்மக்களாக, அவையத்து முந்தியிருப்போராக, சமுதாயச் சிற்பிகளாகச் சீர்படுத்தல் பெற்றோர் கடமையாகிறது. இவர் கடமையை மிக விளக்கமாகக் காட்டுகிறார் நீதிநூலார். சிறுவரைச் சீரழித்தல் பொருந்தாச் சேர்க்கையாதலின் அதனை

---

* கொழுநனா யினுமனையா யினுமியல்பில் லாரென்னிற் கூறின் சொல்லாந்
செழுமை நெறியினிற்றிருப்ப வேண்டுமிதத்தால் வசமாஞ் சினவி லங்கும்
அழல்வதி வாற்றுன்பமிகு மல்லாது பயனுளதோ வருநோ யுற்ற
விழிமிசை நன்மருந்திடாதழற் பிரம்பை விடிலந்நோய் விலகுங் கொல்லோ
(நீதிநூல் : 11:5).

** தீது நன்றறிகிலாச் சேயரென் செய்வார்
கோதற அவரை நன்னெறியிற் கூட்டிடாது
ஏதங்க ளவர்முன் செய்திழிவைக் கற்பிக்குந்
தாதை தாய் புதல்வர்க்குச் சத்துருக்களே. [நீதி நூல். 8:4].

விலக்கலை இவர்தம் முதற்கடமையாகச் சுட்டுகிறார் (8:1). பின்பே அவர்கட்குக் கல்வி நல்க வேண்டியதன் தேவையை உணர்த்துகிறார். பிள்ளைகளுக்குக் கல்வி அளிக்காமல் வளர்த்தல் தங்களுக்கு ஒரு காலனை வளர்த்தலுக்கு ஒப்பாகும் [8:3] எனக் காரணம் காட்டிக் கல்வி தர வேண்டுகிறார். கைத்தொழில் கல்வி கற்பித்தலைச் சிறப்பிக்கிறார் [8:13]. பிள்ளைகளுக்கு அமையும் இன்ப துன்பங்களுக்கு அவர்தம் பெற்றோரே காரணமாதலின் அவர்களை நல்வழியில் நடத்திச் செல்லவேண்டும் என்று வற்புறுத்துகிறார் [8:10]. சிறுவர் முன் நிகழும் நிகழ்வுகள் அவர் மனதில் பசுமரத்தாணிபோல் பதியக் கூடியதாதலின் அவர் முன் பெற்றோர் தீவினை புரிதலை வன்மையாகக் கண்டிக்கிறார் [8:18].

சமுதாயம்

தனிமனிதன் சமுதாயத்துள்ளும் ஓர் உறுப்பாதலின் சமுதாயச் சிறப்பிற்காகவும் பல கடமைகளை ஆற்ற வேண்டியுள்ளது. சமுதாய மதிப்பினை உயர்த்தும்பொழுது அவனது மதிப்பும் தானாகவே உயர்ந்து விடுகிறது. ஒன்றுள் ஒன்றாகப் பிணைந்து நிற்கும் இவ்வமைப்பில் ஒவ்வொருவரும் தங்கள் பங்கினைச் சிறப்புற ஆற்றல் சிறந்த சமுதாய அறமாகிறது. இக்கடமைகளை ஒருவர் கண்டிப்பாக நிறைவேற்றியே தீர வேண்டும் என்று எந்தவிதமான சட்டதிட்டங்களும் கிடையாது. ஆனால் ஒவ்வொரு சமுதாய அமைப்பிலும் இவை எழுதா மறைகளெனப் போற்றப்பட்டு வருகின்றன. மீறுவோர் சில வேளைகளில் சமுதாயத்தின் தண்டனைக்கு உள்ளாவதும் குறிப்பிடற் பாலது. தங்கள் கடமையினைச் செம்மையாகப் பின்பற்றும் சான்றோர் சிறப்புறுவதும், தவறுவோர் சமுதாயத்தின் பழிப்பிற்கும், எதிர்ப்பிற்கும் ஆளாவதும் பொதுவான இயல்புகளாம்.

ஈகை (உதவி)*

சமுதாயத்தில் தான் மட்டும் உயர்ந்தால் பலனில்லை; சமுதாயமே உயரவேண்டும். அதற்குச் சிறந்த வழியாக

---

* அனம் இலார்க்கு அனமாய் வாழ
அகமிலார்க்கு அகமாய்த் துன்ப
மனமுளார்க்கு உவப்பாய் நோயின்
வருந்துவோர்க்கு அருமருந்தாய்த்
தனமிலார்க்கு அரும் பொன்னாய் நல்
தாய் தந்தை இலார்க்கு அன்னாராய்
இனமிலார்க்கு இனமாய் யார்க்கும்
யாவுமாய் இசைதல் அன்பே. (நீதிநூல். 38:1)

அறநூல்கள் கண்டது, உள்ளோர் இல்லார்க்கு ஈதலாகும். இதற்குப் பிறருக்கு உதவி செய்யும் மனப்பான்மை தேவையாகிறது. உள்ளத்தில் ஊறும் இரக்கம் உணர்வின் நிலையில் மட்டுமே அமைந்துவிடாது. எதன்பால் எதற்குத் தோன்றியதோ அதனை நிறைவேற்றுவதாகவும் அமையும் பொழுது உதவிபுரியும் மனவெழுச்சியினால் ஈதலும் தோன்றுகிறது.

'நைபவர்க்களியொடு நயம் பல செய்மின்' [75] என நல்னிதியார் வேண்ட, ஒருவர் பிறருக்கு எவ்வெவ் வகையில் எலாம் உதவ முடியும் என்பதனை நீதிநூலார் [38:1] காட்டுகிறார். அவற்றிற்குத் தேவையானது அடிப்படையில் அன்பு என உரைக்கின்றார். பிறர்பால் கொள்ளும் இரக்கத்திற்குக் காரணம் உயிர்களிடத்துக் கொள்ளும் அன்பாதலின் இங்கு அன்பெனச் சுட்டுகிறார் போலும்.

காலத்தால் செய்த உதவி ஞாலத்திலும் மானப் பெரிதாதலின் [38:7] நல்லோர் பெருந் துயருற்றேனும் [38:16], இரந்தேனும் [38:19], உயிரை ஈந்தேனும் பிறருக்கு உதவுவர் [38:8]. கைமாறு கருதாது உதவி செய்தலே மாட்சிமையுடைத்து [38:6] என இதனைச் சிறப்பிக்கிறார் நீதிநூலார். மற்றும் இதன் தேவையை, தான் சுகமாக உடுத்துண்டு வாழத் தன்னருகில் உண்ண உணவின்றி, உடுக்க உடையின்றி இருக்க இடமின்றித் தவிக்கும் ஏழைகட்கு இரங்காது இருத்தல் விலங்குத் தன்மையதாம் [38:12]; இறைவனே ஏழையுருவில் வரலாம் [38:4]; பிறருக்கு உதவுதலின் மூலமே மேலோர் இன்புறுவர் [38:21] என்பவற்றின் வழியாக உணர்த்துகிறார்.

தன் தேவைக்குப் போக மீதியை அளிப்பவன் இணையிலா வீடடைவான் [38:3]; அறமுடையார் அனைவராலும் புகழப் படுவர் [42:14]; அணியிலார்க்கு அணியாகவும், அழகிலார்க்கு அழகாகவும், நீண்ட பிணியினார்க்கு எக்களிப்பாகவும், துப்பிலார்க்கு ஒப்பில் துப்பாகவும் என அனைத்துமாய் நிற்கும் [42:20]; அழிபொருள் மீதுள்ள மயக்கமழிகிறது [42:23]; அனைவராலும் வணங்கப் பெறும் செல்வம் வாய்க்கிறது [42:2 ] போன்றன இதன் பயன்களாக உணர்த்தப்படுகிறன.

அறத்தின் எதிரான மறம் இங்கு அதன் தீமை சுட்டி [42: 3] இகழப்படுகிறது. தன்னையும் அழித்து, பிறரையும் கெடுக்கும் மறத்தினை ஒழித்து இயன்றவரையில் பிறருக்கு உதவியாக வாழுதலாகிய நல்லறம் சமுதாய அறமாக இங்குப் போற்றப்படுகிறது.

### மகளிரைப் படிப்பித்தல்*

ஆண்மகனைப் போன்று பெண்களுக்கும் கல்வி பெருந்துணையாகவும் [9:1]; அவர் மாண்பினை மிகுவிக்கவும் [9:4]; நன்னெறி நடக்கவும் [9:5] பயனடைவதற்காகவும் பெண் கல்வியை அளிக்க வற்புறுத்துகிறார் நீதிநூலார். மகளிருக்குக் கல்வி கொடாமை அவர் தம் கண்களைப் பறித்தலுக்கு ஒப்பாகும் [9:2] என்பது அவர் கருத்து.

### உயர்ந்தோர் கடன்**

உயர்ந்தோர் தம்மில் தாழ்ந்தோருக்கு உதவுதலைச் சிறப்பான சமுதாய அறமாக நீதிநூலார் போதிக்கிறார். ஆண்டவன் அளித்த பொருள் உலகில் அனைவருக்கும் பொதுவானது [13:2]; பொருள் நிலையாமை உடையது [13:4]; எல்லோரும் உடன்பிறப்புக்குச் சமமாவர் [13:5]; தாழ்ந்தோரைப் போலவே உயர்ந்தோருக்கும் பிணி, அறியாமை, நடுக்கம், துன்பம், பாவம், இறப்பு, இருளுலகத் துன்பம் என அனைத்தும் உண்டு [13:13] முதலான காரணங்களால் பொருள் வளமுடையோர் தம் கீழ் உள்ளாரைப் பேணுதல் கடமை என அறிவுறுத்துகிறார்.

### தாழ்ந்தோர் கடன்***

உயர்ந்தவரால் வாழ்வு பெறுவோரை, பொருளாதார நிலையில் குறைந்திருப்பவரைத் தாழ்ந்தவராகக் கருதும்

---

* இக்கிளை நகுமொழி எழில் மின்னாரின் ஆண்
மக்கள் மிக்கோ ரெனல் மடமையாமிரண்டு
அக்கமும் ஒக்குமே யன்றி நல்லகண்
எக்கண் மற்றெக் கணே யிழிவுடைக்கணே.
[நீதிநூல். 9:8]

** பதிமுதலதிகாரத் தோர் பண்ணவர் உழவர் மேலோர்
மதியுறு பரதர் நூலோர் மருத்துவர் முதலோர் தத்தம்
விதிவழி யொழுகித் தம்மை மேவுறு தாழ்ந்தோர் தம்மை
அதிதயை யொடு நன்கோம்பி ஆண்டிடக் கடனாமாதோ.
[நீதிநூல். 13:14].

*** அறநெறியலாத செய்கை யாண்டகை சொல்லிற்கேளார்
புறமுற வவன் குற்றத்தைப் புகன்றிடார் பொய்கரத்தன்
மறமிலா ரவனை யன்னை தந்தை போன் மதிக்கும் நீரார்
இறவிலாக் கடவுள் வாழும் இதயத்தர் சேடரம்மா.
[நீதிநூல். 14:5]

நீதிநூலார், தம்மைக் காப்பவரின் சொற்களுக்கு மதிப்பளித்துச் செயல்படுதல் [14:2]; சிறந்த தலைவனுக்கே ஆட்பட்டு அவன் தீயனாயின் விட்டு விலகல் [14:4]; தலைவன் தன் பகைவரைத் தம் பகைவராகவும், நண்பரைத் தம் நண்பராகவும் மதித்து ஒழுகல் [14:6]; தலைவன் குறிப்பின் வழி நிற்றல் முதலான வற்றை அவர் கடமையாகக் குறிக்கிறார்.

பிறரை வாழ்விக்கும் நிலையில் உள்ளோர் தம் நிலை யுணர்ந்து அதற்கேற்பப் பிறரை மதித்து ஒழுகலும், தமக்கு வாழ்வளிப்போருக்கு உண்மையாக நடந்து கொளலும் இருவருக்குமிடையே தோன்றும் மனவேறுபாடுகளையும் அதனால் நிகழும் விரும்பத்தகாத நிகழ்வுகளையும் தவிர்க்கும். அத்துடன் சமுதாய அமைதி, சமுதாய முன்னேற்றம் இரண்டினையும் பெறலாம் எனக் கருதும் நீதிநூலார், இன்று உலகில் பரவலாக நிகழும் வர்க்கப் போராட்டத்தினை உட்கொண்டே இவ்விருவர் கடமைகளையும் வரையறுத்துளார் எனலாம்.

**ஆசிரியர் கடன்***

குழந்தைகளை நல்ல குடிமக்களாக உருவாக்குவதில் தந்தைக் குள்ள கடமை ஆசிரியருக்கும் கல்வி கற்பிப்பதன் மூலம் உரியதாகிறது. எனவே அவர் எவ்வாறு இருக்க வேண்டும்[5:3], எவ்வாறு இருத்தல் கூடாது என இரு நிலைகளினின்று அவர்தம் இயல்பைக் காட்டுகிறார். இன்ப மொழிகளால் அறமுரைத்து இவ்வுலக வாழ்வினை நன்னெறி செலுத்த, எதிர்காலத்தில் சமுதாயத்தைச் சீர்படுத்த இருக்கும் மாணாக்கருக்கு வழிகாட்டு பவராதலின் [5:8] அவர் குற்றமற்றவராக இருத்தல் கடனாகிறது.

**வேண்டாதன**

**நெடுந்துயில்****

துயில் உடல் ஓய்விற்குத் தேவை. ஆயின் அதுவே அளவு மீறிச்செல்லும் பொழுது சோம்பலுக்கு வித்திடுகிறது. எனவே

---

* சிறுவாய்க் கலத்துட் டுளியாகச் செலுத்துநீர்போல்
அறியாச் சிறுவர்க்கு முணர்ந்தறியாதவர்க்கும்
வறியார்க்கும் விளங்கிடவே தெளிவா வகுத்து
நெறியைத் தெரிவிப்பர் நன்னூ னெறி நின்ற மேலோர்.
[நீதிநூல். 5:9]

** உறங்குவது போலுஞ் சாக்காடென்ன உரைத்தார்
இறங்கலில் சீர் வள்ளுவனார் போலுமெனன் மிகையே
திறங்குலவு சிறுதுயிலற் றேல் நெடிய துயிலை
மறங்குலவு மரணமே எனக் கூறல் வழக்கே. [நீதிநூல். 34:4]

அதனை ஒழிக்க விரும்பும் நீதிநூலார், பறவை, விலங்குகளைக் காட்டியும் [34:1] உண்மை உணர்த்தியும், செய்ய வேண்டிய கருமங்களை செய்து முடிக்கப் பகற்பொழுது போதாதிருக்க அதனைத் தூக்கத்தில் கழித்தல் தவறு [34:2] என அறிவுறுத்துகிறார்.

சோம்பல்*

மனத்தின்கண் தோன்றும் ஓர் உணர்வாயினும், செயலற்ற ஓர் நிலையாக அமைத்து, அன்றாடத் தொழில்களின் இயக்கத்தை நிறுத்துவதாக அமைவதினால் செயலோடு தொடர்புபடுத்தி இங்கு உரைக்கப்படுகிறது. தன் குடும்பக் கடமை உணர்ந்தோர் சோம்பித் திரியாது உழைப்பர் [24:3] என விளக்கும் நீதிநூலார், சோம்பலை விடுத்தற்குரிய காரணங்களாக உழையாத சோம்பர், மரத்திற்கும் பிணத்திற்கும் ஒப்பாவர் [24:1]; சமுதாயத்தில் இவர்கள் ஒதுக்கி வைக்கத் தக்க தீயர் [24:2]; பெரும் வசை கொள்வர் [24:6] முதலானவற்றைக் குறிப்பிடுகிறார்.

பேருண்டி**

உயிர் வாழ்விற்குத் தேவையான உணவைத் தவிர்த்து அதிகமாக உணல் நோயுடைய வாழ்விற்குக் கொண்டு செல்லும் [35:1]; ஆற்றலை அழிக்கும் [35:2]; அளவற்ற பல்வகை உணவால் அழிவே நிகழும் [35:6] எனக் காரணங்கள் காட்டி, பொருந்தும் அளவான உணவை மேற்கொண்டு இத்துன்பங்களினின்று மீள அறிவுறுத்துகிறார் நீதிநூலார்.

---

* மடிசேரும் அவர்க்கொரு நாளும் மறல்
விடியாது அவர் நெஞ்சிடை வெந்துயரே
குடியாகும் மறந் தொடர் குற்றமெலாம்
நெடிதாக வளர்ந்திடும் நிச்சயமே. (நீதிநூல். 24:4)

** பாரணமின்றிச் சின்னாள் பசித்திருந்தாலு நன்றாஞ்
சீரணமின்றி யுண்ணும் தீனி நோய் செயுமதற்கோர்
சூரணமிலை மெய்த் தன்மை துவ்வுணாத் தன்மை
யேனைக்
காரண காரியங்கள் கண்டுண்பா ரறிஞ ரம்மா.
(நீதிநூல். 35:3)

புலால்*

வாய்ப்புடைய காய், இலை, கிழங்கு, பருப்பு, கூலம், பழம் முதலியன தூய உணவே பொருந்தியது. அதனை ஒழித்துப் புலால் உண்ணுதலால் இறைவனின் தண்டனைக்கு உள்ளாவர் (44.5) என்பது நீதிநூலார் அறிவுரை. இறைவன் விலங்குகளைப் படைத்தது மனிதன் உண்பதற்காகவன்று (44:7) என்பது இவர் கருத்து.

கள்**

மனிதனின் மனதினையும், உடலினையும் மாசுபடுத்தும் காரணிகளுள் இதுவும் ஒன்று. அறிவினை மயக்கி அழிவிற்கு வழிகாட்டுவது ஆகும். இதனை நீதிநூலார், அறிவின்மை, மறதி, நீங்கா நோய் முதலியவற்றை எளிதாகப் பெற்றுத் தரும் கள்ளினால் பல தீமைகள் தொடர்கின்றன (18:1); மனைவிக்கும் மைந்தருக்கும் அவனிருந்தும் இல்லாத நிலையையே கூட்டுவிக்கும் (18:3); பித்தினும் நஞ்சினும் பெரிய கள்ளானது நன்மையைத் தீமையாகவும், தீமையை நன்மையாகவும் காட்டும் [18:6); பழியை, பாவத்தைப் பயக்கும். இரத்தல் தொழிலைக் கொடுப்பதுடன் வாழ்நாளையும் குறைக்கும் [18:11] என்பனவற்றைக் காரணங்களாக்கி நீக்க வேண்டுகிறார்.

---

* கொடிய வெவ்விலங்கை யெல்லாம்
    கோறலே முறையென்றாலும்
அடிமைபோல் நரர்க் குழைத்தீண்டு
    அயர் விலங்கினை மாசில்லாக்
குடிஞையை யடித்து உதைத்துக்
    கொன்று உண்போர் சமயம் வாய்க்கில்
படியில் மக்களையும் உண்பர்
    பழக்கம் போல் தீயதுண்டோ.

[நீதிநூல். 44:5].

** வறுமையால் களவு செய்வர்
    மையலாற் காயத் தாழ்வர்
குறுமைசேர் பகையினால் வெங்
    கொலை செய்வர் வசையினோடுஞ்
சிறுமை தந்துயிருந்துஞ்
    செத்தவராக்கி யிம்மை
மறுமையை யழிக்குங் கள்ளை
    மாந்தலெப் பயன் வேட்டம்மா.

[நீதிநூல். 18;9]

சூது*

அறிவினைச் சிதைத்துச் சினம், பேராசை போன்ற தீய குணங்களுக்கு ,வழிவகுப்பதுடன் அவரவர் பெருமையைக் குலைப்பதாகவும் இது அமைகிறது. களவு, பொய், சினம், பகை, காமம் யாவற்றிற்கும் தந்தையான இச்சூதின் [19:4] பாற்கொண்டுள்ள பற்றால் கையில் உள்ள செல்வம் முழுவதும் அழியும் [19:6]. பந்தயப் பொருளை விரும்பிக் கொடும் சூதாட்டத்தையாடுபவர் எத்திறைமக்கும் மனமிசைவர் [19:5]. அதனால் துன்பம், பழி, முதலானவற்றிற்கு உறைவிடமாவர் [19:8] எனும் எச்சரிக்கை மொழிகளால் சூதினை வெறுப்பர் நீதிநூலார்.

பிறரோடு தொடர்புடையன

வேண்டுவன

இன்னா செய்யாமை**

ஒருவருக்கு உதவி செய்யாவிட்டாலும் பரவாயில்லை. அவருக்குத் தீங்கு செய்யாதிருத்தலே போதுமானதாகும். நீதிநூலார், பிறர்க்குத் துன்பம் தருபவனுக்கு அத்துன்பமே இடர் செய்வதாக அமையும் [33:1] என அதன் இயல்பு காட்டி, அவனை மக்கள் யாவரும் இகழ்வதே அதன் பயனாய் அமையும் [33:3] என நவில்கிறார். அவனிருப்பிடமாகக் காடே சிறந்தது [33:5] என்பதும் அவர் கருத்து.

---

* வையமேல் மானிடர் வாழும் நாள்சில
ஐயமில் கேள்விதான் அளவில ஆருயிர்
உய்ய நல் வினைகளை உஞற்றிடாது நாள்
பொய்யமர் சூதினில் போக்கல் புன்மையே.
[நீதிநூல். 19:2]

** கயலிற் பாய்சிரல் கால்சிக்கிக் கொண்டெழ
வயமிலர்து உயிர் மாய்கின்ற தன்மைபோல்
அயலவர்க் கழிவாக வோ ரந்தரஞ்
செய நினைத்தவர்க்கே வந்து சேருமே.
[நீதிநூல். 38:4]

வேண்டாதன

பரத்தமை*

மனிதனை மாண்பிழக்கச் செய்வனவற்றுள் இதுவும் ஒன்று. இங்கு நீதிநூலார் பெண்கள், ஆண்கள் இருபாலருக்கும் பொதுவான நிலையில் கற்பினை வலியுறுத்துகிறார். மற்றும் முறைகடந்த இன்பத்தினையும் கண்டிக்கிறார் [12:1]. இயற்கைக்கு ஒவ்வாத, புறம்பான காமம் அனைத்தினையும் பரத்தமையுள் அடக்கி எதிர்க்கிறார். ஆடவர் பிறன்மனை சார்தல் [12:9]; பெண்டிர் பிறன்மனை சேர்தல் [12:8] என அவற்றைக் குறிப்பிடுகிறார். கணிகையரின் இயல்பினை விரிவாகச் சுட்டி [கணிகையரியல்பு] அவர்களால் பொருளும், பெயரும் நீங்கும் [43:19] என அறிவுறுத்தி அதனை நீக்க அறிவுறுத்து கிறார்.

கைக்கூலி**

ஒருவரிடம் தனக்கு ஆகவேண்டிய செயலுக்காக அதனை நிகழ்த்தித் தருபவருக்குப் பணம் கொடுப்பதும், தான் மாற்றானுக்குச் செய்ய வேண்டிய, செய்ய முடிந்த செயலுக்காகப் பணம் கேட்டுப் பெறுவதும் கைக்கூலியாகும். கொடுப்பதும் வாங்குவதும் தவறானதாலும், கேட்டுப் பெறுங்கால், அதனைக் கொடுக்க இயலாத நிலையிலும் செய்தே ஆக வேண்டியிருப்பதாலும், பிறரிடமிருந்து பெறும்பொழுது தன் நடுநிலையினின்றும் தவறுதலாலும் இது இருபாலர்க்கும் தீங்காக அமைகிறது. கைக்கூலி பெறுவோர் கொடுக்கும் கயவருக்கு அடிமையாவதுடன் [20:5] பழிபாவத்திற்கும் ஏற்பாகின்றனர் [20:3]. கைக்கூலி பெறுவதினால் வழக்கின் நன்மை, தீமை ஆராயும் நடுநிலைமையி

---

* விதவையைக் கன்னி தன்னை வேசையைப் பிறனில்லாளை
இதமொடு சேர்தல் சேர இச்சித்தல் ஆண்புணர்ச்சி
மதன நூலாதி கேட்டல் வாசித்தல் தகாதசெய்கை
விதவிதந்தானே செய்தல் விபசார வினைகளாமே.

(நீதிநூல். 12 : 16)

** பசியினா லெளியனோர் பகலிரப்பினும்
அசியுறு மெங்கணும் ஆக்க முள்ளவர்
நிசிபகல் பலரிட நிதமு மேற்கின்ற
வசையினைச் சொல்ல வோர் வாயும் போதுமோ.

(நீதிநூல். 20 : 8)

னின்றும் மாற நேரிடும் (20 : 1) என்பனவற்றைக் காரணங்களாக்கி எதிர்க்கிறார். மானமழியாது தொண்டு செய்து வாழ்வதே மதிப்பு என அறிவுறுத்தி (20 : 10) கைக்கூலி பெறுவோரைக் கொன்றாலும் அத் தண்டனை (20 : 2) போதாது எனத் தன் கருத்துரைக்கிறார்.

களவு*

பிறருடைய பொருளை அவரறியாவாறு கவர்தல் களவு எனப்படும். களவு செய்தல், செய்ய நினைத்தல், செய்யென்று சொல்லிக் கொடுத்தல், துணை போகல், பழுதான பொருளை விற்றல் போன்ற பலவற்றைக் களவின் பாற்சுட்டும் நீதிநூலார் [16:1—4] அக்களவின் விளைவாக விலங்கு பூண்டு, சிறைசென்று தம்மீது அன்புடையாரைப் பிரிதலாகிய துன்பமும் நிகழும் [16:5] என்கிறார்.

கொலை**

களவினைப் போன்று, பிறர் உயிரைப் பறித்தலாகிய கொலைக்கும் நீண்ட விளக்கத்தினை நீதிநூலார் தருகிறார் [17:1—3]. கொலையே அனைத்திலும் மிகப் பெரிய பாவமாகும். சிறந்த குடும்பத் தலைவனைக் கொல்லல் அக்குடும்பத்தையே முழுமையாக அழித்தற்கு ஒக்கும் [17:8] என்பதால் கொலையை விலக்குகிறார். கொலைஞர் எப்பொழுதும் மேன்மையடைதலில்லை என்பதனை வலியுறுத்துவதுடன் தன்னையாவது பிறவுயிர்களையாவது மற்றவன் செருக்குடன் கொல்ல வருங்கால் எவ்வகைச் சூழ்ச்சியாலும் தடுக்க முடியாதபோது அவனைக் கொன்று, அதற்குக் கழுவாய்த் தேடிக் கொள்க [17:12] என்று அறிவுறுத்துகிறார்.

---

* அரிமுழை நுழைதல் போல அயலகம் புகும்போதச்சம்
பொருள் திருடும் போதச்சம் புறப்பட்டேகுங் காலச்சம்
தெருவினி லெவர்க்கும் அச்சம் கவர்ந்தன திளைக்க வச்சம்
உருமுருக் கொண்டு கள்வர் உளங்குடி கொண்டபோலும்
[நீதிநூல். 16;7].

** அகந்தனை யுடையவனழித்தல் நீதியெண்
இகந்த பல்லுயிரெலா மியற்றினோற் கன்றிச்
சகந்தனி லவைகளைத் தம்மைக் கொன்றிட
உகந்த பேருரிமை யீங்கொருவர்க் கில்லையால்.
[நீதிநூல். 17;11].

## அரசியலறம்

அரசியலறம் சமுதாயத்தை ஆளும் அரசினைப் பற்றியது, அவ்வரசின்கீழ் வாழும் குடிகளைப் பற்றியது என இரு நிலைகளில் அமைகிறது. இங்கு நீதி நூலார் அரசியல்பும், குடிகளியல்பும் எவ்வாறு அமைதல் வேண்டும் என்பது மட்டுமே கூறுகிறார்.

அரசு*

மன்னுயிரை யெல்லாம் தன்னுயிர்போல மதித்து [3:2] தானும் குடிகளும் ஒன்றே என்ற நினைவில் அவர்கட்கு வரும் இடுக்கண்களை அஞ்சாது நீக்கும் [3:4] குணமுடையவன்; முறை தவறாமல் நடந்து நல் அறிவாலும் நற் பண்பாலும் எல்லோருக்கும் தலைவனாகி ஈகை, கண்ணோட்டம், மெய்ம்மை, தெய்வ வணக்கம், பொறுமை, மானம் முதலியன இயல்பாய் அமைந்து மக்கள் மகிழ்வுடன் வளமாய் வாழ அரசு செய்பவன் (3:5) வேந்தன் என்று அவர்தம் இயல்புரைக்கிறார் நீதிநூலார்.

பின்னும், முறைதவறிய ஆட்சியாளருக்கு அவர்தம் குடிகளே பகைவராவர்; நல்லாட்சி செலுத்துநர்க்கு அஃதே சிறந்த வலிமையான படையாக (3:8) அமையும் என்று பயனுரைக்கிறார். மற்றும் குடிகளுக்குத் தேவையான தங்குமிடங்கள், சோலைகள், சாலைகள், குளங்கள், ஆறு, கோவில், கல்லூரிகள் முதலியன அமைத்துக் கொடுத்து, வேளாண்மை, கைத்தொழில், வாணிபம் முதலியன நாளும் பெருக வேண்டுவன செய்வது நல்லாட்சியாளரின் கடமையாகும் என்கிறார்.

---

* எந்த வேளையினும் நொந்தவர் துயர்கேட்டு
இடரிழைப்பவன் தன்தேக
மைந்தனே யெனினும் வதைத்திட ஒல்கான்
மாக்களின் சுகநல மன்றிச்
சிந்தனை மற்றொரு பொருளினில் செலுத்தான்
தீமொழி கனவிலும் புகலான்
தந்தைபோல் தாய்போல் எவரையும் ஓம்புந்
தன்மையனே யிறை யன்றோ. (நீதிநூல். 3:1).

## குடி*

தலைவன் வரித்தண்டல் மக்களை வாழ்விப்பதற்காகவும், அவர்கட்குத் தேவையான வசதிகளைச் செய்து கொடுப்பதற் காகவு மாதலின் (4:6) அவனுக்கு அடங்கி நடத்தலை வேண்டியும் (4:3) அவனாலேயே வாழ்வு நிலை பெறுகிறது என்பதனையும் நீதி நூலார் வலியுறுத்துகிறார். ஆள்பவனைத் தம் உழைப்பால் காத்தல் குடிகள் தம் கடமை என்பர்.

## அறநூற்பயன்

பக்தியிலக்கியங்களில் நூற்பயன் அமைதல் போன்று அறநூல்களும் தம் பயனை ஓதுகின்றன. பொதுநிலையில் அறவுரையால் ஆகும் பயனை அறநெறிச்சாரம்.

புல்ல வுரைத்தல் புகழ்தல் பொருளீதல்
நல்லவர் இவர் என்று நட்பாடல் — சொல்லின்
அறம் வேள்வியால் ஆம் பயன் என்று உரைப்பர்
மறம் வேள்வி மாற்றியவர். (10)

காட்சி ஒழுக்கொடு ஞானம் தலைநின்று
மாட்சி மனைவாழ்தல் அன்றியும் மீட்சியில்
வீட்டுலகம் எய்தல் என இரண்டே நல்லறம்
கேட்டதனால் ஆய பயன். (11)

என்று உணர்த்துகிறது. இவை அறநூல்களின் நோக்கமாகவும் அமைகின்றன. அறநூல்கள் அனைத்தும் இவற்றினையே தம் நூல்களுள் பலவாறாக எடுத்துக்காட்டிக் கற்பாரை நல்லாற்றுப் படுத்துகின்றன.

அறநூல்களில் அறம், பொருள், இன்பம் இவற்றின் இணைவுப் பொருத்தத்தினை மு. வரதராசனார் தெளிவாகக் காட்டியுள்ளார்.**

---

* தரையெனு முடற்கொரு தலைவனே தலை
நரர்பல வுறுப்பு கணலங் கொண்மெய்யது
சிரமுறும் பொறிவழிச் செல்லுந் தன்மை போல்
உரவரசனுக் கமைந் தொழுகும் வையமே.
(நீதிநூல். 4:4).

** மு. வரதராசனர், திருவள்ளுவர் அல்லது வாழ்க்கை விளக்கம்; 1967; பக். 75—76.

முடிபு

அறநூல்களில் பொருந்தியுள்ள கருத்துகள் மிகுதியும் ஒன்றாகவே அமைகின்றன. அவ்வக் காலத்திற்கேற்ப அவை மிகுதியாகவோ, குறைவாகவோ வலியுறுத்தப்படுகின்றன; மாற்றமும் பெறுகின்றன; புதிய அறங்களும் தோற்றம் பெறுகின்றன. அறிவுறுத்துவோரின் எண்ணங்களுக் கேற்பவும், சமுதாயச் சூழலுக்கு ஏற்பவும் இவை அமைகின்றன. எல்லா அறநூல்களிலும் எல்லா அறங்களும் உள என்று கூறுவதற்கில்லை. அவரவர் முதன்மைப்படுத்தும், வேண்டியதாகக் கருதும் அறங்களே அங்கு இடம் பெறுகின்றன. நன்னீதியார் மிகுதியும் அகநிலை அறங்களுக்குச் சிறப்பளித்துள்ளமையும், நீதிநூலார் புறநிலை அறங்களுக்கு அவ்விடத்தை நல்கியுள்ளமையும் இதனை உணர்த்தும். அரசியலறம் மிகக் குறைவாகவே இங்குப் பேசப்பட்டுள்ளமையும் சுட்டற்பாலது. எனவே அறநூல்கள் ஒன்றிலிருந்து மற்றொன்று வேறுபடல் என்பது இவ்வெளியீட்டு நிலையில்தான் என்பது போதரும்.

அறநூல்கள் அறத்தினை உரைப்பதில் ஒரு வரன்முறையைப் பின்பற்றியதாகத் தெரியவில்லை. எவ்வெவற்றைப் பின்பற்ற வேண்டும். எவ்வெவற்றை நீக்க வேண்டும் என்ற அளவில் மட்டுமே ஒன்றி நிற்கின்றன. அவற்றைப் பகுத்துரைக்கும் நோக்கம் பெரும்பான்மையான நூல்களில் இல்லை. திருக்குறள் போன்ற மிகச் சிலவே இதற்கு விலக்காக அமைகின்றன. நீதிநூல் இதனைப் பின்பற்றியுள்ள போதிலும் வரிசைப்படுத்தியுள்ள முறை தெளிவுடையது என்று கூறுவதற்கில்லை.

அறநூற் கருத்துகளை வகைப்படுத்துவது மிகுந்த இடர்ப்பாட்டிற்குரியதாகிறது. அகநிலை உணர்வுகள் பண்பாக வடிவெடுக்கின்றன. புறநிலையில் செயல்களில் சிலவும் பண்பாக அமைகின்றன. ஒவ்வொரு கருத்தும் பிறிதொன்றுடன் தொடர்புடையதாக அமைகின்றது. தனித்து நிற்பன குறைவே. இந்நிலையில் கொள்ள வேண்டியன, தள்ள வேண்டியன எனப் பாகுபடுத்தி நோக்குவதே ஏற்புடைத்தாக அமைகின்றது. இவற்றைக் கருத்துட்கொண்டு ஒன்று, மற்றொன்றின் பாற் செல்லுதலைத் தவிர்க்க இயலும் வகையில் இப்பகுப்பு முயற்சி மேற்கொள்ளப்பட்டுள்ளது.

இந்நூல்களில் அமையாது, பிறநூல்களில் அமையும் அறக் கருத்துகளை எங்குக் குறிக்கலாம் என்ற வினா எழலாம். அவற்றையும் இப்பகுப்பு நெறிக்குள் அடக்கிவிட இயலும். சான்றாக, இங்கிலாது, திருக்குறளில் காணப்படும் ஆள்வினை யுடைமையை எடுத்துக்கொண்டால், அது ஒரு வினையை முடித்தற்குத் தேவையான தொன்றாக அமைகின்றது. முயற்சி என்பது தன்னைச் சார்ந்ததாக அமைதலின் தன்மையாகி, முயற்சி செய்தல் எனச் செயலின் கண் அடக்கி, அது புறநிலை—வாழ்க்கை—சமுதாய அறம் என உட்படுதலைக் குறிக்கலாம். இவ்வாறே பிறவற்றையும் சுட்டலாம்.

அறிவுறுத்துதலே முழுமையான நோக்க மாதலின் இந்நூல்கள் கருத்துத் தொகுப்பாக அமைகின்றன. இலக்கிய அணிநயங் களையோ பிற வெளியீட்டுச் சிறப்புகளையோ காணலரிது.

## பிற இலக்கியக் காட்டு அட்டவணை

| எண். | பொருட்கூறுகள் | நூல் | இடம் |
|---|---|---|---|
| | இறைமை | | |
| 1. | இறை | குறள் | 7 |
| 2. | இறைச் சார்பு | ஆசாரக் கோவை | 16 |
| | வாழ்க்கை<br>எண்ணம் (வேண்டியன) | | |
| 3. | மெய்யுணர்வு | குறள் | 423 |
| 4. | அடக்கம் | இன்னா நாற்பது | 40 |
| 5. | பொறுமை | மூதுரை | 30 |
| 6. | இரக்கம் | பழமொழி நானூறு | 86 |
| 7. | பெரியோர் கேண்மை | நாலடியார் | 23:1 |
| 8. | உளநிறைவு | நல்வழி வெண்பா<br>(நாச்சி குளத்தார்) | 2:28 |
| | எண்ணம் (வேண்டாதன) | | |
| 9. | தீநட்பு | பழமொழி நானூறு | 114 |
| 10. | அவா | நல்வழி வெண்பா | 1:95 |
| 11. | அழுக்காறு | குறள் | 169 |
| 12. | சினம் | நன்னெறி | 4 |
| 13. | செருக்கு | திரிகடுகம் | 38 |
| 14. | துன்பம் | ஆத்திசூடி | 58 |
| | சொல் (வேண்டியன) | | |
| 15. | இன்சொல் | குறள் | 93 |
| 16. | உண்மை | நாலடியார் | 12:1 |
| 17. | இன்னாச்சொல் | உலகநீதி | 8 |
| 18. | தற்புகழ்ச்சி | கொன்றைவேந்தன் | 19 |
| 19. | புறங்கூறல் | உலகநீதி | 1 |
| 20. | பெரியாரைத் தூற்றல் | பழமொழி நானூறு | 62 |
| 21. | பொய்ம்மை | குறள் | 293 |

| | | | |
|---|---|---|---|
| | செயல் (தன்மை-வேண்டியன) | | |
| 22. | கல்வி | கொன்றைவேந்தன் | 22 |
| 23. | கடமை-குடும்பம் | திரிகடுகம் | 64 |
| 24. | கடமை-சமுதாயம் | குறள் | 228 |
| | செயல் (தன்மை-வேண்டாதன) | | |
| 25. | நெடுந்துயில் | | |
| 26 | சோம்பல் | குறள் | 608 |
| 27. | பேருண்டி | ஆத்திசூடி | 48 |
| 28. | புலால் | இனியவை நாற்பது | 4 |
| 29. | கள் | குறள் | 930 |
| 30. | சூது | குறள் | 939 |
| | செயல் (பிறர்-வேண்டியன) | | |
| 31. | இன்னா செய்யாமை | பழமொழி நானூறு | 47 |
| | செயல் (பிறர்-வேண்டாதன) | | |
| 32, | பரத்தமை | திரிகடுகம் | 5 |
| 33. | கைக்கூலி | குறள் | 115 |
| 34. | களவு | முதுமொழிக்காஞ்சி | 2:7 |
| 35. | கொலை | சிறுபஞ்சமூலம் | 37 |
| | அரசியலறம் | | |
| 36. | அரசு | இன்னா நாற்பது | 5 |
| 37. | குடி | குறள் | 452 |

# நிறைவுரை

இலக்கியப் பொருட் பகுப்பாய்வில் எழுந்த எண்ணங்களைக் கீழ்க்கண்டவாறு வரிசைப்படுத்தலாம்.

1. இலக்கியப் பொருள் என்பது ஏதேனும் ஒரு நோக்கத்தின் அடிப்படையில் தாம் விரும்பிய தலைமை மீது அந்நோக்கம் புலப் படுமாறு புலவரால் அமைக்கப்படும் நிகழ்ச்சிகள் அல்லது செய்திகள், அல்லது எண்ணங்கள், அல்லது இவற்றின் இணைவு ஆகும் எனக் கருதலாம்.

2. பொருளாய்வு சில நிலைகளில் பாடுபொருள், வெளியீடு இவற்றுடன் தொடர்பு கொண்டமைகிறது.

3. பொருளிலக்கண நூல்கள் பல உள்ள போதிலும் எல்லாப் பொருட்களையும் பற்றிய முழுமையான விளக்கத்தினை அவற்றுள் பெற இயலவில்லையாதலின், அனைத்துப் பொருட் களையும் உள்ளடக்கி விரிவாகப் பேசும் பொருளிலக்கண நூல் இன்றியமையாததாகிறது.

4. இடைக்காலம் முதல் புதிய புதிய பொருட்கள் இலக்கிய ஏற்றம் பெற்றுள்ளன. இங்கு இலக்கியப் பொருட்களாக அகம் முதல் புதிய கொள்கை சார் கற்பனை ஈறாகப் பதினேழு பொருட்கள் காட்டப்பட்டுள்ளன. இவ்வெண்ணிக்கை மேலும் மிகுதற்கு வாய்ப்புள்ளது.

5. ஒவ்வொரு பொருளையும் முழுநிலையில் விரிவாக ஆய்வு செய்யும் பொழுது அவற்றின் பொருட் கூறுகளையும் வரையறை செய்தல் இயலும்.

6. ஒவ்வொரு பொருளின், பொருட்கூறுகளின் பகுப்பாய் விற்கு ஓர் அடிப்படை அளவுகோலைப் பின்பற்ற இயலாது. அவ்வப்பொருளின் இயல்பிற்கேற்ப பகுப்பாய்வு அமைகிறது.

7. இங்குப் பகுப்பாய்வு செய்துள்ள பொருட்கள் (அறமும் பக்தியும்) தமக்குக் கருவிநூற்களாகப் பத்தொன்பதாம் நூற்றாண்டைக் கொண்டுள்ள போதிலும், அவற்றின்பாற்படும் எல்லா விலக்கியங்களுக்கும் பொருந்துமாறு மேற்கொள்ளப் பட்டுள்ளது. அப்பகுப்புநெறி புலவருக்கு ஏற்பச் சிற்சில மாற்றங்களுக்கு உட்படலாமே தவிர பெரும்பாலும் அனைத்து நூல்களுக்கும் ஏற்புடையனவே எனலாம்.

8. இங்குப் பக்தி, அறம் எனும் பொருட்களின் பொருட் கூறுகளை வரையறுத்தது போல் பிறபொருட்கும் செய்தல் வேண்டற்பாலதாகும்.

9. செய்யுளிலக்கியங்கள் மட்டுமின்றி உரைநடையிலக்கியங் களுக்கும் இப்பொருட் கூறுகளை வரையறைசெய்து அறுதியிடல் இயலும். அவற்றிற்குரிய பொருள் மரபினையும் உணர்த்த முடியும்.

10. இப்பொருளாய்வினைப் பிறிதொரு நிலையிலும் மேற்கொள்ளலாம். எடுத்துக் கொள்ளும் பொருளை அதன் தோற்றம் முதல் தற்காலம் வரையிலாக எழுந்துள்ள நூல்களை உட்படுத்தி நோக்கலாம். இதனால் குறிப்பிட்ட பொருள், இலக்கியச் சிறப்புப் பெறுதற்கு அமைந்த சூழல், பொருள் மரபு, காலந்தோறும் அதன் பொருட்கூறுகளில் ஏற்படும் மாற்றம் அல்லது வளர்ச்சி நிலை, அதனுள் சிறந்து விளங்கும் புலவரின் தனித்துவம் போன்ற பலவும் வெளிப்படற்கு இயலும்.

11. ஒரே பொருள் செய்யுளிலக்கியத்துள்ளும் உரை நடையிலக்கியத்துள்ளும் இடம் பெறும் பொழுது இடையே உள்ள ஒற்றுமை வேற்றுமைத்தன்மைகளை இதனால் அறுதி யிடலாம்.

12. குறிப்பிட்ட பொருள் முதனிலைப் பொருளாக அமையும் பொழுதும் துணைநிலையிலமையும் போதும் உள்ள பயன்பாட்டு வேறுபாடுகளையும் ஆழமாக நோக்கலாம்.

13. சங்கவிலக்கியத்துள் அகமும் புறமும் பெற்ற செல் வாக்கினை இன்று சமுதாயமும் அரசியலும் பெறுகின்றன. எனவே இவைபற்றிய பொருளாய்வும் இன்றியமையாததாகிறது.

இலக்கிய ஆய்வில், பொருள்—பொருட் பகுப்பாய்வு தனித்து நிகழ்வதற்குப் பரவலான வாய்ப்பும் பேரிடமும் உண்டு; தமிழிலக்கியத்தின் தனித்துவத்தை நிலை நாட்டவும், பிறமொழி களோடு ஒப்பியலாய்வு மேற்கொள்ளவும், சிறப்புரைக்கவும் இத்தகு பொருட்பகுப்பாய்வுகள் இன்றியமையாதன. விரைந்து செயல்பட வேண்டிய சிறப்புடனும் திகழ்கின்றன.

# கருவி நூற்பட்டியல்

## இலக்கணம்

அகப்பொருள் விளக்கம் (பழைய உரையுடன்); கா. ர. கோவிந்தராச முதலியார் (பதி); கழகம்; சென்னை; 1971.

அவிநயம்; க. ப. அறவாணன் (பதி); ஜைன இளைஞர் மன்ற வெளியீடு; சென்னை: 1975.

அறுவகை இலக்கணம்; தண்டபாணி சுவாமிகள்; சாந்தலிங்க அடிகளார் தமிழ்க்கல்லூரி: பேரூர்; 1978.

இலக்கண விளக்கம்—பொருளதிகாரம் (மூலமும் உரையும்); சோம. இராமலிங்க தேசிகன் (பதி); 1541.

உசிதசூடாமணி; சிதம்பரக் கவிராயர்; தி. அ. சோ. இராம லிங்கம் பிள்ளை (பதி).

உவமான சங்கிரகமும் இரத்தினச் சுருக்கமும்; விசுவநாத பிள்ளை (பதி); வித்தியானுபாலன யந்திரசாலை; சென்னை.

களவியல் என்ற இறையனார் அகப்பொருள் (நக்கீரர் உரையுடன்); கழகம்; சென்னை; 1969.

களவியற்காரிகை; இரா. இளங்குமரன் (பதி); கழகம்; சென்னை; 1973.

சுவாமிநாதம்; செ. வை. சண்முகம் (பதி, உரை); அண்ணா மலைப்பல்கலைக் கழகம்: அண்ணாமலை நகர்; 1975.

தமிழ்நெறிவிளக்கம்; உ. வே. சாமிநாதையர் (பதி); கபீர் அச்சுக்கூடம், சென்னை; 1947.

தொல்காப்பியம்—பொருட்படலப் புத்துரை (அகத்திணை யியல், புறத்திணையியல்); ச. சோமசுந்தர பாரதியார்; நாவலர் புத்தக நிலையம்; மதுரை; 1972.

தொல்காப்பியம்—பொருளதிகாரம்—இளம்பூரணம்: கழகம்; சென்னை; 1969.

தொல்காப்பியம்—பொருளதிகாரம் (முதற்பகுதி); குழந்தை யுரை; வேலா வெளியீடு; ஈரோடு; 1968.

தொல்காப்பியம் — பொருளதிகாரம் — நச்சினார்க்கினியம்; கழகம்; சென்னை; 1971.

தொல்காப்பியம் — பொருளதிகாரம் — செய்யுளியல்— நச்சினார்க்கினியர்; கழகம்; சென்னை; 1965.

தொன்னூல் விளக்கம் (திறனாய்வு, மூலம், விளக்கம்); ச. வே. சுப்பிரமணியன்; தமிழ்ப்பதிப்பகம்; சென்னை; 1978.

பிரபந்தத்திரட்டு; அன்னிதாமசு (பதி); உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம்; சென்னை; 1980.

பிரபந்ததீபம்; ச. வே. சுப்பிரமணியன்; தமிழ்ப்பதிப்பகம் சென்னை; 1980.

புறப்பொருள் வெண்பாமாலை (மூலமும்உரையும்); உ. வே. சாமிநாதையர் (பதி); 1968.

மாறனகப் பொருள்; செந்தமிழ் (27—28); மதுரைத் தமிழ்ச் சங்கம்: மதுரை.

முத்துவீரியம்; கு. சுந்தரமூர்த்தி (பதி); கழகம்; சென்னை; 1972 யாப்பருங்கலம் (பழைய விருத்தியுரையுடன்); இரா. இளங் குமரன் (பதி); கழகம்; சென்னை; 1973.

வீரசோழியம் (உரையுடன்);கா.ர. கோவிந்தராச முதலியார். கழகம்; சென்னை; 1970.

**இலக்கியம்**

இரட்சணிய மனோகரம்; எ. ஆ. கிருஷ்ணபிள்ளை; வீ. ஞானசிகாமணி (பதி); வேதாகம மாணவர் பதிப்பகம்; சென்னை.

குசேலோபாக்கியானம்; வல்லூர் தேவராசபிள்ளை; தி. சங்குப்புலவர் (உரை); கழகம்; சென்னை; 1965.

சங்க இலக்கியம் (பாட்டும் தொகையும்); எஸ். வையா புரிப்பிள்ளை (பதி); பாரிநிலையம்; சென்னை; 1967.

ஞானவள்ளல் குணங்குடி மஸ்தான் சாஹிபு பாடலும் உரையும்; என். ஏ. ரஷீத்; ஞானவள்ளல் பதிப்பகம்; சென்னை; 1977.

தாயுமானவ சுவாமிகள் பாடல் (குறிப்புரையுடன்); சி. இராமலிங்கம் (பதி); காசிமடம்; திருப்பனந்தாள்; 1963.

திரு அம்பர்ப்புராணம்; மீனாட்சி சுந்தரம் பிள்ளை; உ. வே. சா. நூல்நிலையம்; சென்னை; 1965.

திரு அருட்பா; இராமலிங்க அடிகள்; ஊரன் அடிகள் (பதி); சமரச சன்மார்க்க ஆராய்ச்சி நிலையம்; வடலூர்; 1972.

திருக்குறள்—பரிமேலழகர் உரை; கழகம்; சென்னை; 1970

திருவரங்கத் திருவாயிரம்; தண்டபாணி சுவாமிகள்

நன்னீதி; கா. உலகநாத முதலியார்; பண்டித மித்திரயந்திர சாலை; சென்னை: 1899.

நீதிநூல்; வேதநாயகம் பிள்ளை; கழகம்; சென்னை; 1969.

போற்றித் திரு அகவல்; எ. ஆ. கிருஷ்ணபிள்ளை; வீ. ஞான சிகாமணி (உரை, பதி,); வேதாகம மாணவர் பதிப்பகம்; சென்னை; 1977.

## துணை நூற்பட்டியல்

அகத்திணை மரபுகள்; இராம. சுப்பிரமணியன்; தமிழ்ப் பொழில் 49; கரந்தைத் தமிழ்ச்சங்கம்; தஞ்சை; 1975—76

அற்றைநாள் காதலும் வீரமும்; க. ப. அறவாணன்; பாரி நிலையம்; சென்னை; 1978.

இலக்கிய ஒப்பாய்வுக் களங்கள்; ஜி. ஜான் சாமுவேல்; மணிபதிப்பகம்; சென்னை; 1978.

இலக்கியக்கலை; அ. ச. ஞானசம்பந்தன்; கழகம்; சென்னை; 1956.

இலக்கியத் திறனாய்வியல்; தா. ஏ. ஞானமூர்த்தி; ஆசிரியர்; கோவை; 1980.

இலக்கிய வகைமை—ஒரு வேண்டுகோள்; இரா. இளங் குமரன்; செந்தமிழ்ச் செல்வி; 1976.

இளங்கோவடிகளும் பொருளிலக்கணமும்; ந. மு. வேங்கட சாமி நாட்டார்; செந்தமிழ்ச்செல்வி 8; 1931.

களம் கண்ட கருத்துகள்; நா. செயராமன்; குமரன் பதிப்பகம் மதுரை; 1977.

சமூகவியலும் இலக்கியமும்; க. கைலாசபதி; நியூ செஞ்சுரி புக்ஹவுஸ்; சென்னை.

சிருங்காரமும் அகப்பொருளும்; அ. பாலசுந்தரகுருக்கள்; செந்தமிழ்ச்செல்வி—42; 1967—1968.

சைவ இலக்கிய வரலாறு; ஒளவை. சு. துரைசாமிபிள்ளை; அண்ணாமலைப் பல்கலைக் கழகம்; அண்ணாமலைநகர்; 1958.

சைவ சமய வளர்ச்சி; இராசமாணிக்கனார்; பாரிநிலையம்; சென்னை; 1972.

தமிழ் அகம்; மயிலை சீனி. வேங்கடசாமி; தமிழியல் (jots) 3; உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம்; சென்னை; 1973.

தமிழ் ஆராய்ச்சியின் வளர்ச்சி; வி. சுப்பிரமணிய ஐயர்; அமுதநிலையம்; சென்னை; 1971.

தமிழ் இலக்கியத்தில் காலமும் கருத்தும்; ஆ. வேலுப்பிள்ளை; ல. ராமகிருஷ்ணன் (பதி); சென்னை; 1969.

தமிழ் இலக்கிய நெறிகள்; நா. செயராமன்; குமரன் பதிப்பகம்; சென்னை: 1979.

தமிழ் இலக்கியமரபுகள்: இராம. சுப்பிரமணியன்; தமிழ்ப் பொழில்; தஞ்சை; 1975—76.

தமிழ் இலக்கிய வகைகள் கருத்தரங்குத் தொகுப்பு; மதுரைக் காமராசர் பல்கலைக் கழகம்; 5-3-1979—12-3-1979 (தட்டச் சுப்படி)

தமிழ்க்காதல்; வ. சுப. மாணிக்கம்; பாரி நிலையம்; சென்னை; 1962.

தமிழ் நாவல் வகைகள்; தா. வே. வீராசாமி; தமிழ்ப் பதிப்பகம்; 1979.

தமிழர் சமய வரலாறு; ஆ. வேலுப்பிள்ளை; பாரி புத்தகப் பண்ணை; சென்னை; 1980.

நால்வகைப் பொருள்; சே. ரா. சுப்பிரமணியக் கவிராயர்; செந்தமிழ்—21; மதுரைத் தமிழ்ச்சங்கம்; 1922—23.

பக்தி இலக்கியம்; பா. அருணாசலம்; தமிழ்ப்புத்தகாலயம்; சென்னை; 1973.

பகுப்பாய்வு நெறியில் சங்க இலக்கியம்; இல. குளோறியா சுந்தரமதி; உலகத் தமிழ்க் கல்வி இயக்கம்; சென்னை; 1987.

பண்டைத்தமிழர் வாழ்வும் வழிபாடும்; க. கைலாசபதி; பாரிநிலையம்; சென்னை; 1966.

பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை; மு. வரதராசன்; பாரிநிலையம்; சென்னை; 1979.

பொருளிலக்கணம்; ச. வே. சுப்பிரமணியன்; தமிழ் இலக்கியக் கொள்கை—3; உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்; சென்னை; 1978.

**English Books**

Content analysis-A New Method in Social Research; Raghuvir Sinha; Ambika Publications; New Delhi; 1980.

Growth of Literature-Vol. III; H. M. Chadwick & Nora Chadwick; Cambridge University Press; Cambridge; 1968.

Introduction to the study of Literature; W. H. Hudson; Harrap & Co. Ltd.; London; 1970.

Language and Grammar (Heritage of the Tamils); S. V. Subramanian & K. M. Irulappan (ed.); International Institute of Tamil Studies; Madras, 1980.

Literary Heritage of the Tamils; S. V. Subramanian & N. Gadigachalam (ed.); International Institute of Tamil Studies; Madras; 1981.

Tamil Heroic Poetry; K. Kailasapathy; Oxford; 1968.

Theory of Literature; Rene Wellack & Austin Warren; Penquin Books Ltd; England; 1978.

**Dictionaries and Encyclopaedias**

Cassell's Encyclopaedia of World Literature-Vol. I J. Buchanan—Brown; Cassell & Company Ltd. London; 1973.

Current Literary Terms—A concise Dictionary; A.F. Scott; St. Martins Press; 1971.

Encyclopaedia Britanica-Vol. II; William Benton; Chicago; 1972.

New book of knowledge-Vol. 8 Grolier Incorporated; Newyork; 1973.

Princeton Encyclopaedia of Poetry & Poetics; Alex Preminger (ed.); Macmillan Press; London; 1975.

Tamil Lexicons Vols. 1-6; University of Madras; Madras; 1981.

## சிறப்புச் சொல்லகராதி

# உலகத் தமிழாராய்ச்சி நிறுவன வெளியீடுகள்

| | | |
|---|---|---|
| 1. | காந்தியப் பெருந்தலைவர் காமராசர் | ரூ. 20 00 |
| 2. | பாரதிதாசன் | 27 00 |
| 3. | தமிழகம் இலங்கை ஊர்ப்பெயர்கள் ஓர் ஒப்பாய்வு | 40 00 |
| 4. | தொல்காப்பியம் — அகத்திணையியல் | 60 00 |
| 5. | தமிழில் அறிவியல் அன்றும் இன்றும் | 25 00 |
| 6. | நாமக்கல் கவிஞர் கவிதைகள்-தேசியம் காந்தியம் | 16 00 |
| 7. | இதழாளர் ஆதித்தனார் | 26 00 |
| 8. | பாவாணர் ஆய்வு நெறி | 22 00 |
| 9. | மு. வ. புதினங்களில் தமிழ் தமிழினம் | 20 00 |
| 10. | சமயச் சொல்லகராதி | 35 00 |
| 11. | தொல்காப்பியம் — உரியியல் | 20 00 |
| 12 | வாத்திய மரபு | 20 00 |
| 13. | குத்பு நாயகம் ஆய்வுரை | 15 00 |
| 14 | உ வே சா. ஒரு தமிழ் வாழ்வு | 15 00 |
| 15. | தமிழ் தந்த வ.உ சி. | 15 00 |
| 16. | தொல்காப்பியம் சொல்லதிகாரம் — எச்சவியல் | 45 00 |
| 17. | மறைமலையடிகளார் தனித்தமிழ்க் கொள்கை | 15 00 |
| 18. | உலக முதன்மொழி தமிழ் | 12 00 |
| 19. | மகாமதிப்பாவலர் | 11 00 |
| 20. | செக்கிழுத்த செம்மல் சிதம்பரனார் | 15 00 |
| 21. | தமிழ் நாவல் (அகர வரிசை) | 40 00 |
| 22. | தமிழ் வாழ்க்கை வரலாற்றிலக்கியம் | 35 00 |
| 23. | எண்பத்திரண்டில் தமிழ் | 90 00 |
| 24. | நெல்லை மாவட்ட நாட்டுப்புறத்தெய்வங்கள் | 15 00 |
| 25. | செங்கைமாவட்ட ஊர்ப்பெயர்கள் | 25 00 |
| 26. | டாக்டர். உ.வே.சா. காப்பியப் பதிப்புகள் | 10 00 |
| 27. | தேவநேயப் பாவாணரின் சொல்லாய்வு | 10 00 |
| 28. | பாவாணரும் தனித்தமிழும் | 50 00 |
| 29. | இலக்கியத்தில் ஊர்ப்பெயர்கள் — தொகுதி 2 | 22 00 |
| 30. | தமிழர் இசை | 70 00 |
| 31. | இளங்கோவின் இலக்கிய உத்திகள் | 12 00 |
| 32. | தமிழ் இலக்கியக் கொள்கை — தொகுதி 9 | 20 00 |
| 33. | தொல்காப்பியம் — வினையியல் | 20 00 |
| 34. | தன்வந்தரி குழந்தை வாகடம் | 14 00 |
| 35. | தொல்காப்பியம் — பெயரியல் | 15 00 |
| 36. | தொல்காப்பியம் வேற்றுமை மயங்கியல் | 12 00 |
| 37. | உ. வே. சா சங்க இலக்கிய பதிப்புகள் | 10 00 |
| 38 | இஸ்லாம் வளர்த்த தமிழ் | 15 00 |
| 39. | திராவிட மொழி இலக்கியங்கள் | 35 00 |
| 40. | பண்டைத் தமிழர் தொழில்கள் | 45 00 |
| 41. | Tamilnadu Bengal Cultural Relations | 35 00 |
| 42. | Tamil Verse in Translation | 40 00 |
| 43. | Education & Vocation (Heritage of the Tamils) | 50 00 |
| 44. | Tolkappiyam — (Phonology & Morphology) | 25 00 |
| 45. | Heritage of the Tamils — Temple Arts | 50 00 |
| 46. | Karaikkal Ammaiyar | 6 00 |
| 47. | Tamil Reader Vol 1 & 2 | 65 00 |